Title :
**Natpiddimunai**
**Thamilar Varalaattuch Saalpukal**

ISBN : 978 - 624 - 6177 - 29-4

**நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பு (நெடா)**
**நற்பிட்டிமுனை**

*நூல் தலைப்பு:* நற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள்
*நூல் ஆசிரியர்:* சஞ்சீவி சிவகுமார்
*வகை :* வரலாற்று ஆய்வு
*முதற்பதிப்பு :* டிசம்பர், 2024
*உரிமை :* ஆசிரியருக்கு
*விலை :* 1000.00
*தொடர்புட்கு :* sancheevis@gmail.com +94 779080325
*பக்கங்கள் :* 136
*வெளியீடு*
நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பு (நெடா)- நற்பிட்டிமுனை
நூல்வடிவமைப்பு: **த.சங்கர்**
அச்சு : **வணசிங்க அச்சகம், மட்டக்களப்பு.**

---

**சஞ்சீவி சிவகுமார்**
**கல்முனை 32300, இலங்கை.**
**தொ.பே.இல. +94 779080325**

# வெளியீட்டு உரை

**ச**ஞ்சீவி சிவகுமார் அவர்கள் நற்பிட்டிமுனை கல்வி அவிருத்தி அமைப்பின் நீண்ட கால உறுப்பினரும் ஆலோரகராகவும் செயற்பட்டு வருபவர். அமைப்பு செயற்பட தொடங்கிய காலங்களுக்கு முன்பே இலக்கிய பரிட்சயமிக்கவராக பல விமர்சனங்கள், கட்டுரைகள், கவிதை, சிறுகதை என பல்துறை ஆளுமை கொண்டு பல வெளியீடுகளை செய்து வருபவர். அவர் மூலமாக எங்களது கிராமத்தின் நீண்ட கால தமிழர் வரலாற்றை ஒரு புத்தகமாக ஆக்க வேண்டும் என்ற கோரிக்கையை எமது அமைப்பு நீண்ட காலமாக அவரிடம் முன்வைத்ததன் அடிப்படையில் அவரின் பல்வேறு வேலைப்பழுக்களுக்கு மத்தியில் இக் கோரிக்கையை ஏற்றுக் கொண்டு எமது கிராமத்தின் வரலாற்றை நன்கு நுணுகி ஆராய்ந்து பல்வேறு தகவல் களை தேடி பலரை அணுகி கடும் முயற்சியின் பயனாக நற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள் என்னும் நூலை எழுதியுள்ளார்.

இவரின் இம்முயற்சி எமது கிராமத்தின் பூர்வீகத்தையும் இப்பிரதேசத்தில் அதன் பங்களிப்பையும் பறைசாற்றுகிறது. இது எமது கிராமத்திற்கு அவர் வழங்கும் அளப்பெரிய பணியாகும். இவரின் இப்பணியை மிகப்பெரிய நன்றியுடனும் நன்மதிப்புடனும் இக் கிராமம் வரவேற்கும். உலகு நிலைக்கும் வரை இவரின் பணியும் இப்புத்தகத்தின் சிறப்பும் நிலைக்கும் என்பதில் ஐயமில்லை.

இவ்வரலாற்றுப் புத்தகத்தில் ஆசிரியர் இடையிடையே தனக்குரிய பாணியில் தன்னுடைய விளக்கத்தை நடுநிலையில் இருந்து தவறாது எழுதியிருப்பதும் குறிப்பிடதக்கதும் வரவேற்புக்குரியதாகும்.

இந்த அருமையான புத்தகத்தை எங்கள் அமைப்பின் மூலம் வெளியிட அனுமதி அளித்த சஞ்சீவி சிவகுமார் அவர்களுக்கும் உதவிகள் நலகியவர்களுக்கும் ஊர் மக்களுக்கும் நன்றிகள்.

நற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள் எனும் இந்நூல் வாசகர் மத்தியில் நல்ல வரவேற்பைப் பெறும் என்பது திண்ணம். சிவகுமார் அவர்களின் நல்ல தொரு முயற்சிக்கு நற்பிட்டிமுனை கல்வி அவிருத்தி அமைப்பு துணை நிற்பதற்கு வாய்ப்புக் கிடைத்ததை எண்ணி பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைகிறது.

**- தலைவர்**

நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பு

# அணிந்துரை

## நற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள்

வரலாறு என்பது 'ஒரு காலச் சக்கரம்' என்ற கருத்தினை மெய்ப்பிப்பது. கடந்த காலத்தைப் பற்றிய அக்கறையை ஊட்டுவது. அத்தகைய அக்கறை நம்மிடம் இல்லாதவிடத்து எதிர்காலம் பற்றிய அக்கறையும் சிந்தனையும் நம்மிடம் இல்லாது போய்விடும். ஒரு சிறப்பான எதிர்காலத்தைப் பற்றிய கற்பனைகள் கடந்த காலத்திலிருந்து நிகழ்காலத்தினூடாக திரும்பிச்செல்வதை வரலாறு நமக்குப் போதிக்கின்றது. நமது முன்னோர்கள் அவர்களது கடந்த காலத்தில் வலிமையுடனும் ஆற்றலுடனும் வாழ்ந்த காலம் குறித்து பெருமை பட்டிருக்கிறார்கள். தங்களது தெளிவற்ற காலத்தை ஆபத்துமிக்கதாகக் கருதி அதனை எதிர்த்திருக்கிறார்கள். தமது வாழ்வியல் பண்பாட்டின் நிகழ்காலப் போக்கில் அதன் மந்த நிலையானது எதிர்காலத்தை சிதறடித்து மொத்தமாக அழிந்துவிடும் ஆபத்தை எண்ணி அன்றே அவர்கள் அச்சம் கொண்டிருக்கிறார்கள்.

வரலாறு என்ற சொல்லாடல் இரண்டு அர்த்தப்பாடுகளைக் கொண்டிலங்கும். அதில் ஒன்று வரலாற்றாசிரியரின் ஆய்வுத்தேடலையும் மற்றொன்று அவர் தேடலில் பிரதி பலிக்கின்ற கடந்தகால சம்பவங்களின் கோவையுமாக அமையும். எனவேதான் ஒரு ஆய்வாளன் அவனது சிந்தனையால் கடந்தகால நிகழ்வுகளை நிகழ்காலத்திலும் நிகழ்த்திக்காட்ட முடிகின்றது என்பார்கள். இதனைக் கருத்தில்கொண்டே வரலாற்று வரைவியல் என்பது துல்லியமானதாகவும் நம்பகத்தன்மை மிக்கதாகவும் நடுவுநிலை சார்ந்ததாகவும் சான்றுகாட்டி மெய்ப்பிக்கத்தக்கவையாகவும் அமையவேண்டுமென்பது இன்றைய பொதுவிதியாக அமைந்துவிட்டது.

"நற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள்" என்பது நூலின் பெயர். இதனை எழுதியவர் அம் மண்ணின் மைந்தரான சஞ்சீவி சிவகுமார் அவர்கள். ஒரு வரலாற்று நூலைப் படிப்பதற்கு முன்னர் அதனை எழுதிய வரலாற்றாசிரியரைப் படியுங்கள் என 'வரலாறு என்றால் என்ன' என்ற நூலை எழுதிய அறிஞர் ஈ.எச். கார் குறிப்பிடுவார். மேலும் வரலாற்று ஆசிரியரைப் படிப்பதற்கு முன்னதாக அவருடைய வரலாறு மற்றும் சமூகச் சூழலையும் படிக்கவேண்டியுள்ளது. தனிநபர் என்ற முறையில் அவ்வரலாற்று ஆசிரியர் அவ்வரலாறு சார்ந்த சமூகத்தினுடைய தயாரிப்பாகவே இருக்கின்றார். இந்த இரட்டை ஒளியின் மூலம் ஒரு வரலாற்று மாணவன் அவரைப் பார்க்கவேண்டும் என்பதே அறிஞர் ஈ.எச்.காரின் வேண்டுகோள்.

சஞ்சீவி சிவகுமார் அவர்கள் அப்பிரதேசம் சார்ந்த சிறந்த கல்வியாளர். ஆய்வுத் துறையில் மிக்க ஆர்வம் கொண்டவர். அதுசார்ந்து பல ஆக்கங்களை தொடராக எழுதிக் கொண்டிருப்பவர். மேலும் பல்கலைக்கழகப் பிரதிப் பதிவாளராக உயர் பதவி வகிப்பவர். தான் வாழுகின்ற பிரதேசத்தின் வரலாறு, பண்பாடு மற்றும் சமூகச் சூழலை முழுமையாக தெரிந்தும் புரிந்தும் வைத்திருப்பவர். தான் எழுதிய வரலாற்று நூலுக்கு 'நற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள்' எனப் பெயரிட்டமைக்கான காரணத்தை அவர் தொடக்கத்திலேயே வெளிப்படுத்தியிருப்பது பொருத்தமானதாகவே அமையும். இந்நூல் அதன் அறிமுகம்

தொடக்கம் அங்கு மிளிரும் கிராமியப் பண்பாட்டுக் கூறுகள் வரை பதினொரு அத்தியாயங்களாக விரிவு பட்டுநிற்கின்றது.

மட்டக்களப்புத் தேசத்தில் – அதன் வரலாற்றுக்காலம் முதலே மிகுந்த முக்கியத்துவம் பெறுவது நற்பிட்டிமுனைக் கிராமம். நாம் பார்வையிட்ட நான்கு மட்டக்களப்பு பூர்வ சரித்திர ஏடுகளிலும் அது 'நாப்புட்டி' என்ற பெயரால் அழைக்கப்பட்டிருப்பது அவதானிப்புக்குரியது. 2004ல் நான் எழுதிய 'மட்டக்களப்பு வரலாறு ஒரு அறிமுகம்' நூலுக்கான தகவல்களை அப்பிரதேசம் சார்ந்த பெரியவர்களிடம் சேகரித்தபோது நாப்புட்டி பெயர்க்காரணம் குறித்து அறிய நேர்ந்தது. அதன் வெவ்வேறுபட்ட பெயர்க் காரணங்களை நூலாசிரியர் தெளிவாக இதில் பதிவாக்கியிருப்பதுவும் அவற்றைக் கொண்டு தனது தற்றுணிவில் ஒரு ஆய்வாளன் என்ற தன்மையில் அவர் ஒரு முடிவுக்கு வருவதுவும் பாராட்டுக்குரியது.

வரலாற்றில் ஒரு நீண்டகாலம் மட்டக்களப்புத் தேசமானது வடக்குத் தெற்கான தரைவழிப் பாதையை – மட்டக்களப்பு வாவியை மையப்படுத்திய நீர்வழிப் பாதையாகவே கொண்டிருந்தது. பங்குடாவெளி தொடக்கம் சவளக்கடை ஊடாக சம்மாந்துறை வரை இந்நீர்வழிப் பாதை நீண்டு வாவியின் இரு பகுதியையும் படுவான்கரை எழுவான்கரை என வேறுபடுத்தியது. இதில் இன்றும் குறிப்பிடப்படுகின்ற பல்வேறு துறைகளில் கிட்டங்கித் துறையே மிகுந்த முக்கியத்துவம் பெற்றிருந்தது. கிட்டங்கி என்பது பண்டகசாலையைக் குறிக்கும் தூய தமிழ்ச் சொல்லாகும். இந்த இடமே அதன் இரு பக்கமும் அமைந்த பெரும் பிரதேசங்களுக்கு பொருட்களை கொடுக்கவும் எடுக்கவும் உரிய மையமாக அமைந்தது. அதனைத் தொட்டு கிழக்குக் கடல்வரை நீண்டும் பெரியநீலாவணை தொடக்கம் கண்டுமுனை என குறிப்பிடப்பட்ட இன்றைய கல்முனைச் சந்திவரை அகன்றும் நற்பிட்டிமுனைக் கிராமம் அன்று வரலாற்றில் எல்லைப்படுத்தப்பட்டிருந்தது. 16ஆம் நூற்றாண்டின் மத்திய காலம் வரையான வரலாற்றுத் தடையங்கள் இதனை மெய்ப்பிப்பதாகவே அமையும்.

கி.பி 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதி தொடக்கம் மத்திய பகுதிவரை கண்டி அரசின் திக்கதிபனாக மாருதசேனன் எனும் பெயரில் செயல்பட்ட கலிங்க குலம் சார்ந்த கண்ணாப்போடி நற்பிட்டிமுனையை வதிவிடமாகக் கொண்டிருந்த சேரத்துப் பணிக்கர் குலப் பெண்ணை முதல்தாரமாக திருமணம் செய்திருந்த தன்மையில் அவனது வாரிசாக வளர்ந்தவன் எதிர்மன்னசிங்கன். அதன் பின்னர் மாருதசேனன் அவனது பிறப்பிடமான பங்குடாவெளியில் திருமணம் செய்து பங்குடாவெளியை வாழ்விடமாக்கிக்கொண்டான். இந்த நிலையில் மதம் பரப்பும் நோக்கில் வந்த கிறிஸ்தவப் பாதிரிமாரின் ஆசைவார்த்தையில் சிக்கி கண்டி அரசைப் பகைத்துக்கொண்டு கோட்டையில் நிலைகொண்டிருந்த போர்த்துக்கேயரின் துணையுடன் மட்டக்களப்புத் தேசத்தில் தனியரசை நிறுவும் நப்பாசையில் தனது ஒன்பது வயது மகனுக்கு ஞானஸ்ஞானமும் செய்வித்து அதனால் மட்டக்களப்புத் தேசத்துப் போடிமாரின் பெரும் எதிர்ப்பினையும் கூடவே திருக்கோவில் சித்திரலோயுதர் ஆலய மகாசபையின் தலைமைப் பொறுப்பினையும் இழந்து ஒழிந்து வாழ்ந்த நிலையில் இளவயதினான தாய்வழிப் பணிக்கர் குலத்தின் எதிர்மன்ன சிங்கனை மட்டக்களப்புத் தேசத்தின் திக்கதிபன் எனும் பதவி வந்தடைகின்றது. இன்னொரு புறம் இது கலிங்க குலத்தின் செல்வாக்குமிக்க தலைமைப் பொறுப்பு பணிக்கர் குலத்திடம் கைமாறிய வரலாற்று நிகழ்வாகவே பார்க்கப்படுகின்றது. இதன் அத்தியாயம் நற்பிட்டிமுனையில் எழுதப்படுவதையும் தென்பிரதேச நிருவாகச் தலைமையிடமாக நற்பிட்டிமுனை மாற்றம் பெறுவதையும் இதனைத் தொடர்ந்து பணிக்கர்குலச் செல்வாக்கு மட்டக்களப்பின் தென்பிரதேசமெங்கும் மேலோங்கிச் செல்வதையும் ஆய்வுகள்

புலப்படுத்தும். இதன் செல்வாக்கு, ஆட்சிப் புலம், நீதிநிருவாகம் என்றில்லாமல் வழிபாட்டி டங்களிலும் பிரதிபலிக்கவே செய்தது.

எதிர்மன்னசிங்கனின் நிருவாகச் செயல்பாட்டின் பின்னர் தென்பிரதேசத்தின் முக்கியத்துவம்பெற்ற தலைமைத்துவம் அவன் பரம்பரை வழிவந்த பணிக்கனார்குடி கந்தப் போடியை சென்றடைவதை வரலாறு மீண்டும் பதிவு செய்கின்றது. ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் மட்டக்களப்புப் போடிமாரின் பாரிய எதிர்ப்பினை சமாளிக்க முடியாது திணறிய ஒல்லாந்தர் கண்டி அரசின் ஒத்துழைப்போடு மட்டக்களப்பில் தலைமைப் போடிகளை நியமித்தபோது 1776 நவம்பரில் கந்தப்போடி தலைமைப் போடியாக நியமனம் பெறுகின்றார். அதனைத் தொடர்ந்து அப்பிரதேச அதிகாரம்மிக்க நிருவாகப் பொறுப்பில் பங்கேற்றவர்களில் பெரும்பாலோரின் பின்னணியை ஆராய்கின்றபோது ஏதோ ஒரு வழியில் அவர்கள் நற்பிட்டிமுனை பணிக்கர் குலத்துடன இணைவுறவே செய்கின்றனர். அந்த வகையில் பணிக்கர் குலம் சார்ந்த நிலமை கரவாகுப்போடி, நிலமை முண்டாப்போடி, நிலமை வைகாளிப்போடி, நிலமை வீமாப்போடி, நிலமை சின்னத்தம்பிப்போடி, சத்துருக்கப்போடி வன்னியன், விந்தனை வில்லியம் ஜேம்ஸ் சுப்பிரமணியம் வன்னியன் (சத்துருக்கப்போடி வன்னியனின் வாரிசுகளில் ஒருவர்), சம்மாந்துறை – நாடுகாடுப் பற்று எதிர்மன்னசிங்க வன்னியன் என விரிவுபடுவதைப் பார்க்கிறோம். 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நற்பிட்டிமுனை பணிக்கினார்குடி வழிவந்தவரும் பெரியநீலாவணையில் வாழ்ந்தவருமான அருமைப்பெருமாள் போடி ஆங்கிலேய ஆட்சியாளர்களுக்கு எதிராக செயல்பட்டதாக குற்றம்சாட்டப்பட்டு கொழும்புச் சிறையில் அடைக்கப்பட்டு பின்னர் கொலைசெய்யப்பட்டமை வரலாற்றில் பதிவாகியுள்ளது. இவரை ஒரு தேசியத் தலைவராக விக்கிப்பீடியா குறித்துரைக்கின்றது. இவரின் வாரிசுகள் பெரியநீலாவணை மற்றும் வெல்லாவெளியில் வாழ்வதை அறியமுடிகின்றது.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் 1871ல் மட்டக்களப்பைத் தொடர்ந்து அவர்களது நீதி நிருவாக அமைப்பினை விரிவுபடுத்தும் நோக்கில் ஒரு கிராமிய நீதிமன்றம் (Village Tribunal) தென்பிரதேசத்தில் அமைக்கப்பட்டபோது அது நற்பிட்டிமுனையிலேயே அமைக்கப் பட்டது. சிறந்த கல்வியறிவுமிக்கவரான சத்துருக்கப்போடி வன்னியன் அதில் நீதி விசாரணைகளை மேற்கொண்டிருந்தார். அவர் காலத்தில் குடியியல் தொடர்பில் 1470 வழக்குகளும் குற்றவியல் தொடர்பில் 248 வழக்குகளும் விசாரித்து தீர்வு காணப்பட்டுள் ளமையை நிருவாக அறிக்கைகளில் அவதானிக்கமுடியும்.

இத்தகைய தொடர் வரலாற்றுச் சிறப்புகளை கொண்டிலங்கிய மட்டக்களப்புத் தேசத்தின் - ஒரு பழந்தமிழ் கிராமத்தின் சிறப்பியல்புகளை தேடிப்படித்து விரிவாக ஆய்வு செய்து வரலாற்றுக் கோட்பாடுகளை அனுசரித்து ஒரு வரலாற்று நூலாக வெளிக்கொணர்ந் துள்ளமை கல்வியாளர் சஞ்சீவி சிவகுமார் அவர்களின் அரிய முயற்சியென்றே குறிப்பிட வேண்டும். மேலும் மட்டக்களப்புப் பிரதேசத்தின் தொடர்புபட்ட ஆட்சி முறைமைகளையும் அதுசார்ந்த நிருவாக கட்டமைப்புகளையும் கண்டறிவதிலும் அத்தோடு மட்டக்களப்பின் பண்டைய சமூகங்களை வரலாறாக்கிப் பார்ப்பதிலும் ஒரு கிராமத்தின் வரலாறு ஈடுபடுத்தப் பட்டிருப்பது இதில் மேலும் ஒரு சாதனையாகவே கொள்ளப்படும். சிவகுமார் அவர்கள் தொடர்ந்தும் தனது எழுத்துப் பணியைத் தொடர எனது பிரார்த்தனையும் வாழ்த்துகளும்.

**-கவிக்கோ வெல்லவூர்க் கோபால்-**

(தேசியக் கலைஞர் கலாநிதி எஸ்.கோபாலசிங்கம்)

# நிலம் எனும் நல்லாள்

**ந**ற்பிட்டிமுனையினதும், அக் கிராமத்து மக்களினதும் வாழ்க்கை முறை பற்றிய குறிப்பிடத்தகுந்த நூலொன்றைத் தந்தமைக்காக நண்பர் சஞ்சீவி சிவகுமாருக்கு முதலில் என் பாராட்டுகள். நுட்பமான ஆய்வறிவும், தான் சார்ந்த சமூகம் பற்றிய ஆழ்ந்த அவதானிப்புமே இந் நூலை சாத்தியப் படுத்தியிருக்கிறது. கிராமமொன்றின் வளமான கலாசார பாரம்பரியத்தை எடுத்தியம்பும் ஆவணமாக மட்டுமல்லாமல், அதன் கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் உற்று நோக்கத் தக்க அரிய சாளரத்தையும் இந்த நூல் எமக்கு வழங்கியுள்ளது.

மாமூலான வறண்ட அல்லது ஊர்ப்பெருமிதம் மேலோங்கும் ஆய்வுக் கட்டுரைகளிலிருந்து இக் கட்டுரைகள் மேம்பட்டவை என்பதை இந் நூலின் முதல் பக்கத்திலிருந்தே உணரத் தொடங்க முடியும். நற்பிட்டிமுனை பற்றிய தெளிவான சித்திரமொன்றை வடிவமைத்த வகையில் இந் நூல் இக் கிராமத்து மக்களுக்கு நூலாசிரியரின் இதயபூர்வமான ஒரு சமர்ப்பணமெனக் கொள்ள முடியும். வருங்காலத்தில் இத்தகைய முயற்சிகளை மென்மேலும் முன்னெடுக்கவும் விரிவு படுத்தவும் இத்தகைய நூலொன்று திறவுகோலாக அமைகிறது.

நூலாசிரியர் ஒரு புனைகதையாளரும் கூட. இப்பண்பு, கடந்த பல ஆண்டுகளுக்கு முற்பட்ட மாந்தர்களையும், நிகழ்வுகளையும் உயிரோட்டமான மொழியில் வாசகர்களுக்குக் கடத்த உதவுகின்றன. வரலாற்று நூல்கள் வெறும் தரவுகளையும், புள்ளி விபரங்களையும் மாத்திரம் கொண்டிருந்தால் வாசகனுக்கு அதுவோர் வறண்ட நிலப் பயண அனுபவத்தைத் தந்து விடும். ஆனால் சஞ்சீவி சிவகுமாரின் ஈரலிப்பான மொழிநடை அந்தக் குறையைத் தவிர்க்கின்றது.

அவருடைய புத்தகத்தைப் பற்றிய என் அழுத்தமான மனப்பதிவு அதில் தென்படுகின்ற மனித நேய அணுகுமுறைதான். மனித புராணத்தை விட மேம்பட்ட புராணம் வேறேதுமுண்டோ? புள்ளிவிபரங்கள், திகதிகள் என்பவற்றுக்கு முன்னுரிமை அளிக்காமல், ஊர்ப் பெருமிதங்களில் மாத்திரம் மூழ்காமல் அந் நிலத்தில் வாழ்ந்த மக்கள் மீது நூலாசிரியர் கவனம் செலுத்துகிறார். அவர்களின் வாழ்க்கை குறித்த தத்தளிப்புகள், போராட்டங்கள், வெற்றிகள், வழக்காறுகள், பழக்கவழக்கங்கள், மரபுகள் என்பவற்றை ஆழமாக, ஆய்வுரீதியாக வெளிப்படுத்துகின்றார். நெடுங்காலமாக இந்தக் கிராமத்தின் முதுகெலும்பாக இருந்த சமூகக் கட்டமைப்புகள், நம்பிக்கை முறைகள் மற்றும் விவசாயப் பழக்கவழக்கங்களை அவர் எடுத்துரைத்த விதம் பாராட்டுக்குரியது. வாழ்நிலத்தின் நிலம் முக்கியத்துவம் பற்றிய அவரின் விரிவான பகுப்பாய்வு அறிவூட்டுகிறது, கலாசாரம் மற்றும் அடையாளம் இரண்டையும் சுற்றுச்சூழல் எவ்வாறு வடிவமைக்கிறது என்பதற்கான தனித்துவமான கண்ணோட்டத்தை வழங்குகிறது. மக்களுக்கும் அவர்களின் சுற்றுப்புறங்களுக்கும் இடையே உள்ள சிக்கலான உறவுகள் இங்கே ஆராயப் படுகிறது. நிலம் என்பது வெறும் மண்ணும் கல்லும் நீரும் கொண்ட ஒரு பௌதிக நிறுவனம் மட்டுமல்ல, சமூகத்தின் ஆன்மீக மற்றும் கலாச்சார கட்டமைப்பின் ஒருங்கிணைந்த பகுதியாகும் என்பதை அது விளக்குகிறது. வரலாறு மற்றும் சமூக நுண்ணறிவுகளுக்கு மேலதிகமாக, நவீன உலகில் மாறிவரும் கிராமத்தின் இயக்கவியலைப் பற்றிய

ஒரு பார்வையை இந் நூல் வழங்குகிறது. உலகமயமாக்கல், இடப்பெயர்வு மற்றும் தொழில் நுட்பத்தின் ஆதிக்கம் கிராமத்தவர்களின் வாழ்க்கையை பாதிக்கத் தொடங்கும் போது, பாரம்பரியத்திற்கும் மாற்றங்களுக்கும் இடையே நிகழ்கின்ற உரசல்கள் இங்கே சுட்டிக்காட்டப் படுகின்றன.

உணர்திறனுடன், சமூகம் எதிர்கொள்ளும் சவால்களைப் புரிந்து கொண்டும், தலைமுறை தலைமுறையாக நற்பிட்டிமுனை மக்கள் தங்களைப் புதுப்பித்து, மீளமைத்து, தகவமைத்துக் கொண்ட குணாதிசயங்கள் பற்றியும் நூலாசிரியர் முன்னிலைப்படுத்துகிறார். அவரது இந்தப் பணி அறிஞர்கள் மற்றும் வரலாற்றாசிரியர்களுக்கு மட்டுமல்ல, கிராமப்புற சமூகங்களின் பரிணாம வளர்ச்சியிலும், ஒரு சிறிய, நெருக்கமான சமூகத்தில் மனித வாழ்க்கை யின் சிக்கல்களிலும் ஆர்வமுள்ள எவருக்கும் அறிவுப் பொக்கிஷமாகும்.

உள்ளூர் வரலாறுகளைப் பாதுகாத்தல் மற்றும் நமது வேர்களுடன் நம்மை இணைக்கும் தொடர்புகளைப் புரிந்துகொள்வதன் மதிப்பின் முக்கிய நினைவூட்டலாக இது செயல்படுகிறது.

நற்பிட்டிமுனை கிராமத்து மக்களின் சரிதத்தை சொல்வதில் நூலாசிரியர் காட்டிய அர்ப்பணிப்பும், புலமையும், கடினமும் மிக்க இந்தப் பணியை வெகுவாகப் பாராட்ட வேண்டும்.

இந்த புத்தகம் கல்வி உலகிற்கு ஒரு குறிப்பிடத்தக்க பங்களிப்பாகும், மேலும் இது சந்தேகத்திற்கு இடமின்றி எதிர்கால சந்ததியினரை கலாசார பாதுகாப்பு மற்றும் சமூக வரலாற்றின் முக்கியத்துவம் பற்றிக் கவனம் செலுத்துவதற்கு ஊக்குவிக்கும்.

நண்பர் சஞ்சீவி சிவகுமாருக்கு என் வாழ்த்துகள்.

**-உமா வரதராஜன்**

பாண்டிருப்பு

25.11.2024

# என்னுரை

**ந**ற்பிட்டிமுனை கிராமத்தின் வரலாற்று மூலங்கள் குறித்து முழுமையான ஆய்வுகள் செய்யப்பட வேண்டும் என்ற எனது நீண்ட கால ஆதங்கத்தை இந்நூலினூடாக ஓரளவுக்காவது நிறைவேற்ற எண்ணுகின்றேன்.

நற்பிட்டிமுனை குறித்து பண்டைதொட்டு பல வரலாற்றுத் தொடர்புகள் பேசப்பட்டு வருகின்றன. ஆயினும் அவை சரியாக ஆவணப்படுத்தப்படவோ அல்லது முறைசார் ஆய்வுகளுக்கு உள்ளாகவோ இல்லை என்பது பெருங்குறை.

ஆலயங்கள் சார்ந்தும் நற்பிட்டிமுனையில் ஆய்வுகள் முன்னெடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இப்போது காலம் கடந்து விட்டது. முதலாந் தலைமுறை ஆலயக் கட்டிடங்கள் பலமுறை புனரமைப்புச் செய்யப்பட்டு புதிய ஆலயங்களாகிவிட்டன. பழைய ஆலயங்களின் சுவடுகள் பேணப்படாமலே போய்விட்டன. இந்த நிலையில் தற்போது, 'இருப்பதைக் கொண்டு கிடைப்பதை ஆவணப்படுத்துவதாகவே' இந்நூலை எழுதமுற்படுகின்றேன்.

நற்பிட்டிமுனையில் தமிழர்களும் முஸ்லீம்களும் இணைந்தே வாழ்கின்றனர். நற்பிட்டிமுனையின் ஆரம்பக் குடிகள் தமிழர்களேயாயினும் 16ஆம் நூற்றாண்டு முதலாக முஸ்லீம்களின் இருப்பு இப்பிரதேசத்தில் காணப்பட்டு வருகிறது. ஆதலால் நற்பிட்டிமுனை தமிழ் முஸ்லிம் மக்களின் ஒன்றித்த வரலாறாக "நற்பிட்டிமுனை வரலாற்றுச் சால்புகள்" எனவே இந்நூலை எழுத எண்ணியிருந்தேன். எனினும் எனக்குள்ள தொடர்புப் பற்றாக் குறைகளால் தவறுகள் மற்றும் விடுபாடுகள் நிகழ்ந்துவிடுமோவென அஞ்சியதாலும் இதுபற்றி தேடுவதில் இன்னும் அதிக காலம் எடுத்துக் கொள்ள வேண்டிவரும் என தயங்கியதாலும் தமிழர்களின் வரலாற்று முதன்மைகளை கூறுவதாக "நற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள்" என இந்நூலைப் பதிப்பிக்கின்றேன்.

தாய்மண்ணான நற்பிட்டிமுனையில் அரை நூற்றாண்டுகளைத் தாண்டிய எனது வாழ்வனுபவத்தையும் இந்த காலப்பகுதிக்குள் நற்பிட்டிமுனையின் நிலக்காட்சி, வாழ்வியல், சமூக பொருளாதார காரணிகளில் ஏற்பட்ட மாறுபாடுகளையும் நூலின் முகவுரையில் பதிவுசெய்வது நற்பிட்டிமுனைக்கு வழங்கக்கூடிய நேரடி அறிமுகமாக அமையலாம். இவை நம் எதிர்கால சந்ததிக்கு கிராமம் குறித்த சரியான காட்சிமையைப் புரிய வைக்கும் என்பது எனது நம்பிக்கை. இதனால் எனது அனுபவத்தில் பதிந்த நற்பிட்டிமுனையின் நிலவியல் மற்றும் வாழ்வியல் மாற்றங்களை முன்னுரைக்குள் சொல்லிமுடிக்க விழைகின்றேன்.

1980 களை ஒட்டியதான காலப்பகுதியில் நற்பிட்டிமுனையின் நிலவியல் கட்டமைப்பைக் காட்டும் படம் 14ம் பக்கத்தில் தரப்பட்டுள்ளது. இது மனப்பதிவின் அடிப்படையில் வரையப்பட்ட ஒரு நிலப்படமே.

நற்பிட்டிமுனையின் புவியியல் ரீதியான கிழக்கு எல்லையாக கூறக்கூடியது சவக் காலை வீதி ஆகும். ஆரம்ப காலத்தில் கிழக்கு எல்லை கடல் வரை அமைந்திருந்தது. பின்னர் நற்பிட்டிமுனைக்கான கிழக்கு எல்லையாக சவக்காலை வீதி அலுவல்முறை ஆவணங் களில் பதிவாகியது. கிராம சேவகர் பிரிவுகள் இந்த அமைப்புகளில் விரிவுபடுத்தப்பட்டன.

இந்த வீதியின் வடக்கு எல்லையில் பிறேம் மஹால் என்ற தனியாருக்கு சொந்தமான படமாளிகை ஒன்று இருந்தது. கல்முனையில் அப்போதிருந்த திரையரங்குகளில் இதுவே பெரிய கட்டிடமாக இருந்த போதிலும் கட்டிடத்தைப் பூர்த்திசெய்தால் உரிமையாளருக்கு நல்லதல்ல என்ற சாத்திர நம்பிக்கையொன்றின் அடிப்படையில் இந்த திரைப்படக் கூடம் முழுமையாக பூர்த்திசெய்யப்படாமல் நடத்தப்பட்டதாக ஒரு பேச்சு இருந்தது. அதனை அடுத்து குறிப்பிட்டு கூறக்கூடிய கட்டடமாக கோட்டக்கல்வி காரியாலயம் அதே வீதியில் அமைந்திருந்தது. 1989 ஆம் ஆண்டு இந்தக் கல்வி காரியாலயக் கட்டிடம் குண்டு வைத்து தகர்க்கப்பட்டது. இராணுவம் நிலை கொள்ளும் என்ற அச்சத்தினால் விடுதலை இயக்கம் ஒன்றினால் இந்த குண்டுவைப்பு நிகழ்ந்திருக்கலாம் என இதுவரை நம்பப்படுகிறது. சில காலம் அது பாழடைந்த கட்டிடமாகவே பயமூட்டிக் கொண்டு காணப்பட்டது. குண்டு வெடிப்பு நடந்த அந்த நள்ளிரவில் என்ன வெடிப்பு என்று தெரியாது தூக்க கலக்கத்தில் விழித்த போது மக்கள் சாரி சாரியாக நற்பிட்டிமுனையின் மையப்பகுதி நோக்கி இடம்பெயர்ந்து கொண்டிருந்தனர். இப்படியான ஒரு பாரிய குண்டு வெடிப்பை மிக நெருக்கமாக கேட்ட முதல் அனுபவமாகவும் அது அமைந்திருந்தது. அவலமும் பதட்டமும் கொண்ட புலம்பெயர் வாக அதைக் கூறலாம். இந்த கோட்டக் கல்வி அலுவலகம் அமைந்திருந்த இடத்தில் தற்போது கமு/விபுலானந்த வித்தியாலயம் அமைந்துள்ளது.

இவ்வீதியின் தெற்கு எல்லையில் சவக்காலையும் அதனை அடுத்ததாக இராமரின் தேநீர் கடையும் அமைந்திருந்தன. அந்தக் கடையும் அதற்குக் குடைவிரித்தது போல் நின்ற நிழல் வாகை மரமும் அந்தக் காலத்தில் காணப்பட்ட பெரும் நில அடையாளங்கள் ஆகும். அம்பலத்தடிப் பிள்ளையார் சிறிய வழித்தெய்வமாக மூலஸ்தானமும் சிறு மண்டபமும் கொண்ட கோயிலாக இருந்தது. இந்த இடத்துக்கு மேலும் கிழக்காக அதாவது கல்முனை நகரம் நோக்கிப் பனையான் குஞ்சுக் குளம் அமைந்திருக்கிறது. அப்போது பனையான் குஞ்சிக் குளம் வீதி வரைப் பரந்ததாகக் காணப்பட்டது. தற்போது மிகச் சுருங்கியதாகக் காணப்படுகின்றது.

இராமரின் தேநீர் கடை முக்கியத்துவம் பெற்றமைக்கு மற்றொரு காரணமாக இருந்தது. மக்களால் அப்போது பெரிதும் பயன்படுத்தபட்டு வந்த வயல்கட்டு பாதை ஊடான நடை பயணங்களும் என்பது எனது கணிப்பு. வாகன வசதிகள் குறைவான அந்தக் காலப்பகுதியில் நள்ளிரவில் வந்தடையும் தூர இடங்களுக்கான பேருந்துகளில் பயணிப்போர் நகரிலிருந்து நடந்தே தம் கிராமங்களை அடைவர். அதனால் நள்ளிரவுக் கடைகள் முக்கிய புள்ளிகளாகக் காணப்பட்டன. பிரதான வீதியில் இருந்து வயல் கட்டுப்பாதையை அடை வதற்கு இடையில் சிறு வழித்தெய்வமாக அம்பலத்தடி ஆலயம் அப்போது காணப்பட்டது. பனையான் குஞ்சுக் குளத்தையும் வயல்கட்டை ஒட்டியதாக அமைந்த நீர்ப்பாசன வாய்க் காலையும் தொடுக்கும் சிறு பாசனக் கால்வாய் ஒன்று அம்பலத்தடிப் பிள்ளையார் கோயிலின் முன்னாக இருந்தது. அம்பலத்தடியிலிருந்து காரையடிகுளம் வரை திறந்த வெளியாகவும் இடையிட்டு ஒரு சில வீடுகளையும் கொண்டதாக அப்பகுதி காணப்பட்டது. கோயிலுக்கு அருகாகக் காணப்பட்ட வாய்க்கால் ஒருவர் மறையக் கூடிய அளவுக்கு ஆழமாகக் காணப்பட்டது.

காரையக்குளம் பரந்த பகுதியை உள்ளடக்கிய ஈர நிலம் கொண்ட தாழ்நிலப் பகுதி யாக காணப்பட்டது. மழைக்காலத்தில் முழுதும் நீர் நிரம்பிய சமுத்திரம் போல காரையக்குளம்

காணப்படும். கோடை காலத்தில் குளம் நடுவுக்கு சுருங்கிப் போகும். அரச நீர்ப் பாசனத் திட்டம் மூலம் கால்வாய் சரியாகக் கையாளப்பட்ட காலத்தில் குளத்தை சுற்றி உள்ள நிலத்தில் இடைபோகம் நெல் விதைப்பதுமுண்டு. ஏலவே குறிப்பிட்ட நீர்ப்பாசன வாய்க்கால் கரவாகுப்பற்று வயல் முழுமைக்குமாக வெட்டப்பட்டு கிட்டங்கி ஆறு வரை நீண்டிருந்தது. குளங்களைச் சுற்றியிருந்த ஈர நிலப்பகுதியில் திராய், பொன்னாங்கண்ணி என்பன வளர்ந்து காணப்படும். காரைக் குளத்திற்கும் அம்பலத்தடிக்குமிடையில் மக்களின் நீர் தேவைக்கு பெரிதும் பயன்படுத்தப்பட்ட புதுக்கிணறு அமைந்து காணப்பட்டது. நீர் தட்டுப்பாடு நிலவும் காலங்களில் குடிநீர் தரும் அமுதசுரபியாக இந்த பொதுக்குணறுதான் அமைந்தது. ஒழுங்கு முறையாக குடங்களை அடுக்கி நடுநிசி வரை கண் விழித்து முறைத் தண்ணி அள்ளும் முறைமை இப்போது புதுமையாக தெரியலாம். இவ்வாறு நற்பிட்டிமுனையில் 5-6 பொதுக்கிணறுகள் காணப்பட்டன. மக்கள் குளிப்பதற்குப் பொதுவாக இப்பொதுக் கிணறுகள் பயன்பட்டன. கோடை காலங்களில் பட்டிப்பளை கிளை ஆற்றிலேயே மக்கள் தங்கள் நீர்த் தேவைகளுக்காக தங்கியிருந்தனர்.

காரையடி குளத்துக்கும் பிரதான வீதிக்கு இடையில் காரையடி மைதானம் காணப் பட்டது. இதுதான் அப்போது நற்பிட்டிமுனையின் பெரு மைதானம். காரையடி மைதானத்தின் வடமேற்கு மூலையில் ஒரு கொட்டுக்கிணறு காணப்பட்டது. கொட்டுக்கிணத்தடி என்பது அந்தச் சந்தியைக் குறிக்கும் ஒரு நில அடையாளம் என கூற முடியும். (பொதுவாக கொட்டுக் கிணறுகள் மரக்கொட்டு அல்லது கொங்கிறீட் கொட்டுக்களால் அமைக்கப்பட்டன. இங்கு காணப்பட்ட கொட்டுக் கிணறு கொங்கிறீட் கொட்டினால் ஆக்கப்பட்டது). காரையடி மைதானத்தில் இருந்து கிழக்காக பிரதான வீதிக்கு மறுபக்கம் அதாவது தற்போதைய பொது மைதானம் அமைந்துள்ள இடத்தில் அரச நெற்களஞ்சியம் ஒன்று அமைந்திருந்தது. இந்த அரச நெற்களஞ்சியம் ஒல்லாந்தர் காலத்தில் ஆக்கப்பட்டதாக கூறப்படுகிறது. அரச நெற்களஞ்சியத்தின் செயற்பாடுகள் யுத்த சூழலாலும் அரச கொள்கைகளாலும் சரி வர இயங்காமல் கைவிடப்பட்டு போன சூழலில் இவ்விடத்தில் ஒரு விளையாட்டு மைதானத்தை அமைக்கும் முயற்சி சில கிராம இளைஞர்களால் முன்னெடுக்கப்பட்டது. இந்த முயற்சியின் போது அதில் ஈடுபட்ட இளைஞர்கள் நிதி வசூலித்தமைக்காக கைதாகினர். நிதி வசூலிப்பது பிரிவினைவாதத்துக்கான நோக்கமாக இருக்குமோ என அக்காலத்தில் சந்தேகிப்படுவதுண்டு. அந்த இளைஞர்கள் கைதாகி பல மாத பிரயத்தனத்தின் பின்பு விடுதலை செய்யப்பட்டனர் என்பதனையும் இங்கு குறிப்பிட வேண்டும். பல்வேறு அரசியல் தலைவர்களை அணுகி மேற்கொண்ட முயற்சியின் பலனாக பொது மைதானம் அமைப்பதற்கான அனுமதி பின்னர் கிடைக்கப்பெற்றது. ஆரம்ப காலத்தில் விண்ணொளி விளையாட்டுக் கழகம் இம்மைதானத் தைப் பயன்படுத்தியதாக அறியமுடிகின்றது. பின்னர் விவேகானந்தா விளையாட்டுக் கழகம் இம்மைதானத்தைப் பயன்படுத்திவருகிறது.

அரச நெற்களஞ்சியத்துக்கு எதிர் புறமாக கிழக்கு திசையில் கூட்டுறவு அமைப்புக்குச் சொந்தமான காணி காணப்படுகிறது. சில காலம் கல்முனை போக்குவரத்துச்சாலை அதில் இயங்கி வந்தது. பின்னர் கருங்கற்களை உடைக்கும் இயந்திரத்தொகுதிகளை ஒரு தனியார் நிறுவனம் இக்காணியில் செயற்படுத்தி வந்தது. சூழல் மாசடைதல் போன்ற இன்னொரன்ன காரணங்களால் மக்களின் கோரிக்கைகளின் விளைவாக இந்த கல் உடைக்கும் இயந்திரம்

இவ்விடத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்டது. அதன் பின்னர் கூட்டுறவு சங்கம் 'சுமங்கலி மண்டபம்' எனும் திருமண மண்டபத்தையும் கடைத் தொகுதியையும் இவ்விடத்தில் அமைத்து செயல்படுத்தி வருகிறது.

நற்பிட்டிமுனையின் மற்றோரு முக்கிய இணைப்பு வீதி "தாழைவட்டவான்" வீதி ஆகும். ஆரம்பகாலத்தில் நற்பிட்டிமுனை கடற்கரை வீதி என இவ்வீதி ஆவணங்களில் பதிவாகியுள்ளமையைக் காணலாம். இவ்வீதி ஆரம்பிக்கும் சந்தி "தாழைவட்டவான் சந்தி" என அழைக்கப்படுகின்றது. சிலர் தமது வரலாற்றுக் குறிப்புகளில் திமிலரை தாழ வெட்டித் துரத்திய இடம் என இதற்கு விளக்கம் தர முற்படுகின்றனர். இது அடிப்படை கொண்டதாகத் தெரியவில்லை. விளா வட்டவான், கொன்றை வட்டவான், வம்மி வட்டவான், வண்ணை வட்டவான், வேப்ப வெட்டுவான் எனும் மரங்களை அடிப்படையாகக் கொண்ட வெட்டு வாய்க்கால் சார்ந்து கிழக்கில் பல கிராமங்கள் அல்லது இடங்கள் பெயரிடப்பட்டிருப்பதைக் காணலாம். இங்குள்ள தாழை மரங்கள் சூழ்ந்த குளத்தை அடிப்படையாகக் கொண்ட வெட்டுவாய்க்கால் குறித்து இப்பெயர் இடப்பட்டிருக்கலாம். இவ்வீதியில் மையப்பகுதியில் வேப்பையடிப் பிள்ளையார் ஆலயம் அமைந்துள்ளது. அதற்கு எதிராக இலங்கை மின்சார சபையின் பராமரிப்பு அலுவலம் அமைந்திருந்தது. இதனால் இவ்வீதி CEBவீதி எனவும் அழைக்கப்பட்டது.

நற்பிட்டிமுனையின் மற்றொரு மையமாக கூறக்கூடியது கல்லடிவட்டை ஆகும். ஆரம்ப காலத்தில் கற்பாறைகளையும் குழிகளையும் கொண்ட ஒரு பகுதியாக இப்பகுதி காணப்பட்டது. இதனால் கல்லடிக்காடு என இது அழைக்கப்பட்டு வந்தது. பின்னர் நிலவமைப்புகள் மாற்றங்களுக்குள்ளாக்கப்பட்டு குடியடர்த்தி பெற்றது. இப்பகுதி ஒருங்கே கல்லடி வட்டை என அழைக்கப்பட்டது. ஒரே ஆலய வீதியில் பிள்ளையார், சிவன், முருகன் ஆலயங்கள் அமைந்து காணப்பட்டமையால் கோயிலடி வட்டை எனவும் வழங்கப்படுகின்றது.

முருகன் கோயிலுக்கும் பிள்ளையார் கோயிலுக்கும் இடையிலான இடைவெளி நீண்டகாலமாக வெளியாகவே காணப்பட்டது. பிள்ளையார் கோயிலுக்கு அருகான பக்கமாக மேடை போன்ற அமைப்பாக மண் இடப்பட்டுக் காணப்பட்டது. இது சூரன் மேடை எனப்பட்டது. சூரன் போர் நிகழ்வில் சூரன் இந்த இடத்தில் தான் அமர்த்தப்படுவார். எதிராக பொது வைபவங்களுக்கான மேடைகள் தற்காலிகமாக அமைக்கப்படுவதுண்டு. ஆரம்ப காலத்திலிருந்து இந்த வெளி சூரன்போர் நிகழ்த்துவதற்கும் கூத்துக்களை மேடையேற்றுவதற்கும் பயன்படுத்தப்பட்டு வந்தது. விளையாட்டு நிகழ்வுகளும் இங்கு நிகழ்த்தப்பட்டுவந்தன. பின்னாட்களில் கலைக்கதிர் மன்றம், இளைஞர் வட்டம் என்பன கலை நிகழ்வுகளை இங்கு மேடையேற்றின. 1991ஆம் ஆண்டு கிராம இளைஞர்கள் 'நகவிதா' அரங்கினை இவ்விடத்தில் அமைத்தனர். கலை நிகழ்ச்சிகளுக்கு மட்டுமன்றி விளையாட்டு மைதானமாகவும் இவ்விடம் பயன்படுத்தப்பட்டு வந்தது.

நற்பிட்டிமுனையின் மற்றோரு முக்கிய பகுதி பூங்கொடிவட்டை ஆகும். ஆட்சி மையமாக பூங்கொடிவட்டை அமைந்தமை பற்றி சில நிலத்தடையங்களின் வழி அறிய முடிகின்றது. உயரமான நில அமைப்பு, போக்குவரத்துக்கு மூலமான ஆறு என்பன அங்கு ஆட்சிக் குடியிருப்புகள் இருந்தமைக்கு துணையாக இருந்திருக்கும். சிதிலமடைந்த பழைய கட்டிடங்கள், விசாரணைக் கூடம் முதலிவற்றின் இருத்தல் அடையாளங்கள் குறித்த வாய்மொழித் தகவல்கள் இவற்றை ஆதாரப்படுத்துகின்றன.

பட்டிப்பளையாற்றின் கிளைக்கு மிக நெருக்கமான பகுதியாக நற்பிட்டிமுனை அமைந்திருப்பதாலும் வயல் சூழ்ந்து காணப்படுவதாலும் இப்பகுதி முக்கியமிக்க அடையாளங் களை பெறுகின்றது. இவ்வயல் பகுதிகள் கரவாகுவட்டை என அழைக்கப்படுகின்றன. ஆற்றில் இருந்து கிளைத்து கரையை நோக்கி நீர் வினியோகம் செய்யும் கட்டமைப்புகளாக பாகங்கைகள் உள்ளன.

நற்பிட்டிமுனைக் கிராமத்தின் சால்புகளை விவரிக்கும் இந்த நூல் பதினொரு அத்தியாயங்களைக் கொண்டுள்ளது. முதல் மூன்று அத்தியாயங்களில் பூர்வீக இலங்கையில் திராவிட கலாசாரத்தின் வியாபகத்தையும் திராவிடக் குடியேற்றங்களையும் மட்டக்களப்பின் பண்டைய ஆட்சி பீடங்களையும் ஆராய்கிறது. தொடர்ந்து வரும் அத்தியாயங்களில் நற்பிட்டிமுனையின் நிர்வாக ஒழுங்கமைப்பு வளர்ச்சி, நற்பிட்டிமுனையின் ஆட்சித் தள வரலாறு, கல்வி வரலாறு, ஆன்மீக வரலாறு, கலை இலக்கிய வரலாறு, நற்பிட்டிமுனையின் சமூக நிறுவனங்கள், நற்பிட்டிமுனையின் வழக்கிலிருந்த கதையாடல்களும் கதை கூறும் கிராமிய விளையாட்டுகளும் முதலான விடயங்களை பதிவு செய்கின்றது. நாம் கண்டுகொண்ட வரலாறு காலத்தால் அழிந்து காணாமல் போய்விடும் என்ற ஏக்கத்திலிருந்து என்னை விடுவிக்கும் ஒரு முயற்சியாகவே இந்நூலை நான் பார்க்கின்றேன். கிடைத்த தகவல்களை இதன்வழி ஆவணப்படுத்தியுள்ளேன்.

இந்நூலில் உள்ள பல கட்டுரைகள் ஏலவே கல்முனை நெற் ஊடக வலையமைப்பின் வெளியீடான 'பரிமாணம்' இதழில் வெவ்வேறு தலைப்புகளில் என்னால் எழுதப்பட்டவை. அவற்றை தேவை கருதி சில இடங்களில் மேம்படுத்தியுள்ளேன்.

இந்நூல் வெளிவருவதில் பல்வேறு வழிகளிலும் ஒத்துழைப்பு வழங்கிய அனைவருக்கும் எனது நன்றி.

***- சஞ்சீவி சிவகுமார்***

-Pandirippu

Luxmy Gold House Kalmunai

Carmel Fatima College, Kalmunai

Dubai mall kalmunai

Vandu Road

School Road

பட்டிப்பளை ஆறு

01. பனையான்குஞ்சிக் குளம்
02. சவக்காலை
03. அரச நெற்களஞ்சியசாலை (GPS) (தற்போது பொது மைதானம்)
04. இ.போ.ச. சாலை (தற்போது கூட்டுறவு கடைத்தொகுதியும் சுமங்கலி மண்டபமும்)
05. காரையடி மைதானம்
06. காரைக்குளம் (தற்போது சுருங்கி விட்டது)
07. கமு சிவசக்தி வித்தியாலயம் (பழைய அ.த.க. பாடசாலை)
08. பிள்ளையார் கோயில்
09. நகவிதா
10. முருகன் கோயில் முன்கிணறு
11. வாலாட்டியன் குளம்
12. முருகன் கோயில்
13. பிள்ளையார் கோயில் பின்கிணறு
14. கொட்டுக் கிணறு
15. புதுக் கிணறு
16. அம்பலத்தடிப் பிள்ளையார் ஆலயம்
17. மகாவிஷ்ணு ஆலயம்
18. கல்விக் கந்தோர் (தற்போது விபுலானந்த வித்தி)
19. சந்தை
20. தபால் கந்தோர்
21. வேம்படி வினாயகர் ஆலயம்
23. பாலத்துப் பாகங்கை
24. வெண்ணை வெட்டவான் கட்டு
25. ஸ்ரீ நகுலேஸ்வரர் ஆலயம்
26. பழைய நீதிமன்ற அமைவிடம்

*படம்: நற்பிட்டிமுனையின் நீர், நில வளங்களையும் நிலவடையாளங்களையும் காட்டும் படம் (1980களில்)*

# நன்றிகள்

**ந**ற்பிட்டிமுனைத் தமிழர் வரலாற்றுச் சால்புகள் எனும் இந்தச் சிறிய நூல் வெளியிடக் கிடைத்ததில் மிக்க மகிழ்ச்சி. இந்நூலுக்கு சிறந்ததொரு அணிந்துரையை வழங்கிவைத்த கவிக்கோ வெல்லவூர்க் கோபால் அவர்களுக்கும் வெளியீட்டு உரை வழங்கிய நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பின் தலைவர் அவர்களுக்கும் நூல் குறித்த குறிப்புரையை வழங்கிய உமா வரதராஜன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி.

இந்நூல் சிறப்புற வெளிவர நிதி அனுசரணை வழங்கிய திரு.க. கோகிலராஜா (கனடா), திரு.ச. இராஜேந்திரன் (கனடா), திரு.ம.உதயகுமார், (சுவிஸ்), திரு. சா. துரைராஜா (அமெரிக்கா), திரு.அ. ரவிக்குமார் (கட்டார்) ஆகியோருக்கு எனது பெரு நன்றி.

இந்நூலை வெளியிட்டு உதவிய நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பின் உறுப்பினர்கள், ஆக்கத் தகவல்களை தந்த திரு.சபா சபேசன், திரு.க. நாகராசா, திரு.க குலேந்திரன், திரு.த.மனோகரன், திரு.க.கணபதிப்பிள்ளை ஆகியோருக்கும் எனது நன்றிகள்.

இந்நூலிலுள்ள பல கட்டுரைகள் கல்முனை நெற் ஊடக வலையமைப்பின் வெளி யீடான பரிமாணம் இதழில் எழுதியவை. களம் தந்த கல்முனை நெற் ஊடக வலையமைப்புக்கும் நன்றி.

இந்த சிறு நூலை ஆக்குவதற்கு பல வழிகளிலும் உதவிக்கரம் நீட்டிய உறவினர்கள் குடும்பத்தினர், நண்பர்கள் ஆகியோருக்கும் எனது உளமார்ந்த நன்றிகள்.

**- நூலாசிரியர்**

# உள்ளணி

# 1. அறிமுகம்

கிழக்கிலங்கையின் பூர்வீக சரித்திரம் பற்றி ஆராயும் பல்வேறு நூல்கள் இதுவரை வெளிவந்துள்ளன. இவற்றில் கிழக்கிலங்கையின் பொதுப்படையான வரலாற்றைக் கூறிய நூல்கள் உண்டு. குறித்த சமூகக் குழுமம் பற்றிப் பேசுகின்ற நூல்கள் உண்டு. குறித்த ஒரு கிராமத்தை அல்லது நகரத்தை வரலாற்று நோக்கில் பதிவு செய்த நூல்களும் அடக்கம்.

குறித்த ஒரு கிராமம் அல்லது நகரம் ஆழமான வரலாற்று பார்வையினூடாகப் பதிவு செய்யப்படும் போது அதில் குறித்த மக்களின் முழுமையான கலை, பண்பாட்டு, அரசியல் வாழ்வியல் கூறுகளையும் கண்டறிய முடியும். ஆயினும் போதுமான ஆதாரங்களைப் பெற்றுக் கொள்வதில் உள்ள தேக்க நிலை காரணமாக இத்தகைய குறும்பரப்பு வரலாறுகள் ஆழமற்ற, சொல்வதைச் சொல்லும் பதிவுகளாக மாறிவிடும் அபாயமும் உள்ளது. எவ்வாறாயினும் இத்தகைய பதிவுகள் வரலாற்றின் தொடர்ச்சிக்கு இன்றியமையாதவை என்பது கண்கூடு. இந்தப் பின்தளத்தில் நற்பிட்டிமுனைத் தமிழர்களின் வரலாற்றுச் சால்புகள் குறித்து இந்நூலின் வாயிலாக என் தேடல்களைப் பதிவு செய்கிறேன்.

நற்பிட்டிமுனைத் தமிழர்களின் வரலாற்றுப் பெருமிதங்கள் குறித்து இந்நூல் பேசுகிறது. நற்பிட்டிமுனை ஒரு பழம்பெரும் தமிழ்க் கிராமமாக இப்பிரதேச மக்களால் கொண்டாடப்படுகின்ற ஒரு கிராமம். ஆயினும் தமது வரலாற்று சுவடுகளை முறைப்படியாக பதிவு செய்து வைக்க தவறியமையால் அதன் பெருமைகளை ஒன்று திரட்டி ஆதார பூர்வமாக வெளிக்கொணர்வதில் நீண்ட இடைவெளி காணப்படுகிறது. பரம்பரை பரம்பரையான ஆட்சி அதிகார மரபுரிமைகளின் அடிப்படையில் நற்பிட்டிமுனை கிராமம் முக்கியமிக்க ஆட்சிப் படை விளங்கிய இடமாகக் கொள்ளப்படக் கூடியது. ஆயினும் தமது இருப்பை முறையாகப் பதிவு செய்வதிலும் ஆதாரங்களை காப்பதிலும் அக்கறையின்றி இருந்தமையால்

அதனை இலக்கிய ஆதாரங்களில் முழுமையாக நிலைப்படுத்த முடியவில்லை. நற்பிட்டிமுனையின் வரலாறு பற்றி மட்டக்களப்பின் வரலாறு கூறும் நூல்களில் உள்ள சிறு குறிப்புக்களைத் தவிர யாதொரு கச்சிதமான தெளிவான ஆவணங்களும் காக்கப்படவில்லை என்பதே உண்மை. வன்னிமை ஆண்ட இடம் என்பதற்கு சுற்றயல் கிராம ஆலய நிருவகிப்புக்களில் நற்பிட்டிமுனை வன்னிமை கோத்திரத்தாரின் தலைமைத்துவப் பங்கேற்பு இருப்பது மட்டுமே இப்போதைக்கு இருக்கின்ற வெளித்தெரிகின்ற சான்றாதாரமாகக் காணப்படுகிறது. இந்த அடித்தளத்தில் நின்று நற்பிட்டிமுனையின் வரலாற்றுக்காலப் பின்புலம் பற்றிய கிடைக்கக்கூடிய தேடல்விளைவுகளைப் பதிவு செய்வதே இந்நூலின் நோக்கமாகும். நற்பிட்டிமுனையின் வரலாற்றுத் தளங்களை நோக்கிய தேடலுக்கான ஒரு ஆரம்பப் புள்ளியாக இந்நூலைக் காண்கிறேன். இன்னும் ஆள நீளமான ஒரு தேடலுக்கான காலம் கனியும் என்பது எனது நம்பிக்கை. அதற்கான ஆதாரத்தளமாக இந்நூல் அமையலாம்.

தமிழ் சமூகத்தைப் பொறுத்தவரை தம் வரலாறுகளைப் பேணுவதில் இங்குள்ள ஆலயங்கள் முக்கியமிக்கன. ஆலயங்கள் முறைப்படியாக தமது ஆவணங்களை பேணி வைத்திருந்தாலே அது போதுமான வரலாற்றுத் தேட்டமாக இருந்திருக்கும். ஆனால் ஆலயங்கள் காக்கவேண்டிய பல ஆவணங்கள் கொத்தும் குறையுமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளமையைக் காணமுடிகிறது. ஆலயங்கள் தம் கூட்டக் குறிப்புகளை சரி வர எழுதியிருந்திருந்தாலே அவற்றினூடாக ஏராளமான வரலாற்று சம்பவங்களை நாம் கண்டறிய முடிந்திருக்கும். ஆயினும் அதில் பல்வேறு விடுபாடுகள் நிகழ்கின்றன. பேணிப் பாதுகாப்பதிலும் சரியான அணுகுமுறைகள் இல்லை. இத்தகைய சூழலில் வரலாற்றுத் தொடர்ச்சியை கண்டறிவதில் பல்வேறு சிக்கல்களும் சிரமங்களும் ஏற்படுத்துகின்றன. சிலர் ஆலயம் சார்ந்து அல்லது பாரம்பரியம் சார்ந்து பேணி வைத்திருக்கும் ஏடுகளையும் ஆவணங்களையும் வெளியில் தர மறுக்கின்றனர் அல்லது வெளியிட அஞ்சுகின்றனர். இதனால் நாம் தேடிக் கண்டறிய வேண்டியவற்றை விட்டு விடுகிறோம். மேலும் எழுதக் கூடியவர்கள் இத்தகைய வரலாற்றுக் குறிப்புகளை ஏதோ வகையில் தமது ஆக்கங்களில் வெளிப்படுத்துவது கூட மிக முக்கிய பங்களிப்பாக அமையும். வரலாறு ஏதோ ஒரு வகையில் காக்கப்படுமாயின் அதுவே நாம் எதிர்கால சந்ததிக்கு சேர்க்கும் சொத்து.

# 02. பூர்வீக இலங்கையும் மட்டக்களப்பும்

ஈழத்தின் ஆதி வரலாற்று நூல்கள் தீர்க்கம் செய்யமுடியாத பல்வேறு செவிவழிக் கதைகளையும் நம்பிக்கைகளையும் அடிப்படையாகக் கொண்டதாகவே காணப்படுகின்றன. புராண இதிகாசக் கதைகளின் மூலங்களை கொண்டும் அதற்கு இணையான சாதகக் கதைகளின் சித்தரிப்புகளினதும் தொகுப்புகளாகவும் அமையும் மகாவம்சம் முதலான நூல்களும் இந்த சித்தரிப்புகளின் ஆதாரங்களாக நிற்கின்றன.

இந்திரபாலா (Indrapala K,1969:43) குறிப்பிடுவதுபோல பூர்வீகக் குடியேற்றங்கள் குறித்து எழும் சிக்கல்கள் கல்வெட்டுக்களையும் வரலாற்று நூல்களையும் மட்டும் ஆதாரமாகக் கொண்டு தீர்க்கம் செய்யப் படக்கூடியதல்ல. அதற்கும் மேலதிகமாக அக்காலப்பகுதி குறித்த தொல்லியல், பௌதீகமானிடவியல், வரலாற்றுப் புவியியல், வரலாற்று மொழியியல் என்பவை குறித்த பகுப்பாய்வுகளும் இத்தகைய சிக்கல்களைத் தீர்ப்பதில் முக்கிய பங்களிப்பை செய்கின்றன (சிற்றம்பலம் சி.க, 2001: 34).

ஆயினும் இதுவரை எழுதப்பட்ட இலங்கை வரலாற்று நூல்கள் பல தன்னின முதன்மைப்படுத்தலை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப்பட்ட கதையாடல்களின் பின்னணியை முதன்மைப் படுத்திப் பேசுவதால் இத்தகைய குறைபாடுகளையும் முன்பின் முரண்பாடுகளையும் இன்னும் சுமந்து நிற்பது கவலையுடன் நோக்கக் கூடியது.

இந்த வகையிலேயே ஈழத்தின் பூர்வீக குடிகளாக நாகரீகமற்ற மனிதர்களல்லாத அரக்கர்களே வாழ்ந்ததாகக் காட்டப்படுகிறது (Mendis, 1945:08, Paranawithana, 1961:26). இலங்கையின் முதல் மனிதக் காலெடுப்பாக விஜயனே அமைந்தான் எனக் காட்டும் முயற்சியாக இது இருக்கலாம். ஆயினும் பூர்வீகக் குடிகளான இயக்கர் நாகர்களிடம் பண்பட்ட சமூக அமைப்பும் நாகரீகமும் இருந்தமையை வரலாற்று ஆதாரங்கள்

வாயிலாக ஊகிக்க முடியும் (மகாவம்சம் VI-VII: 51-55). மண் மாதிரிகளின் மீது மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் மூலம் 125,000 ஆண்டுகளுக்கு முன்னமே Homo sapiens எனப்படும் நவீன மனித வர்க்கம் இலங்கையில் வாழ்ந்தமை உறுதிப்படுத்தப்படுகிறது (Jacques Coulardean and Iven eve, 2022) மட்டக்களப்பு உட்பட இலங்கை முழுவதும் இயக்கர்களினதும் வேடர்களினதும் ஆட்சி வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து காணப்பட்டமையைப் பல்வேறு வரலாற்று ஆசிரியர்கள் காட்டுகின்றனர்.

## 2.1 வரலாற்றுக்கு முந்திய காலத் திராவிட கலாசாரம்

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே இலங்கையில் திராவிடக் கலாசாரம் பரவிக் காணப்படுகின்றது. இராவணனுக்கு முன்னர் இலங்கையில் ஆட்சி செலுத்தியவர்களாக குபேரன், சயம்பன், யாளிமுகன், ஓதி, வித்துகேசன், மால்யவர்ணன், சுமாலி எனப் பலரது ஆட்சிப் பெருமை பற்றி இதிகாசங்கள் குறிப்பிடுகின்றன (ப. கணபதிப்பிள்ளை, 1988:10-11; மு.சு. சிவப்பிரகாசம், 1988:17; தங்கேஸ்வரி க, 2007:30 ).

இராவணன் காலத்தில் இலங்கை செல்வச் செழிப்பு மிக்க நாடாகக் காணப்பட்டது. இதனைக் கம்பர், இலங்கைகாண் படலத்தில் இலங்கையின் நகர் சிறப்பை இலக்குவனுக்குக் கூறும் இராமனின் கூற்றாக இவ்வாறு காட்டுகிறார்.

**"நம் திரு நகரே ஆதி வேறுள நகர்களுக்கெல்லாம்**

**வந்தபேர் உவமை கூறி வழுத்துவார் அமைந்தகாலை**

**இந்திரன் இருக்கை என்பர் இலங்கையை எடுத்துக் காட்டார்**

**அந்தரம் உணர்தல் தேற்றார் அருங்கவிப் புலவர் அம்மா.**

**(கம்பராமாயணம்: யுத்த காண்டம்- 6842, இலங்கை காண் படலம்)**

இப்பாடலில் அமராவதிக்கு நிகரான நகரமாக இலங்கை காட்டப்படுவது கம்பரின் மிகைப்படுத்தப்பட்ட வர்ணனையாகக் கூட கொண்டாலும், இலங்கையில் ஒரு பண்பட்ட நாகரிகம் இந்தியா வரை அறியப்பட்டதாக அப்போதே இருந்தது என்பதற்கு இதனை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். இராவணனது காலத்துச் சிவாலயங்கள் பற்றிய குறிப்பு களையும் அவனது ஆட்சி நடைபெற்றதற்கு ஆதாரமாக ஈழத்தில் பல்வேறு இடங்களில் காணப்படும் நிலத் தடயங்கள் பலவற்றையும் காண்கிறோம். (கணபதிப்பிள்ளை ப. 1988:15; தனபாக்கியம் ஜி, 2001:87-102; செல்வராசக் கோபால் (மற்.) கனகசபாபதி ,2005:08) திருகோணமலை இராவணன் வெட்டு, வெவத்தை மேட்டுநிலக் காட்டுப்பகுதியில் ஊற்றெடுத்து கிரிந்து ஆற்றில் அமைந்துள்ள நீர்வீழ்ச்சியான இராவண எல்லை நீர்வீழ்ச்சி (எல்ல-வெல்லவாய பெருந்தெருவில் உள்ளது.) முதலானவை காணப்படுகின்றன. கதிரமலையில் இருந்து தெற்கு நோக்கி கற்சிகரத்துடனும் கொடியுடனும் தென்படும் இராவணன் கோட்டை (இது திருகோணமலையில் கடலில் அமிழ்ந்து காணப்படும் பகுதியா கவும் கூறப்படுகின்றது) மற்றும் இராமாயணம் கூறும் புஷ்பக விமானம் என்பவற்றையும் இங்கு குறிப்பிடலாம் (நவநாயகமூர்த்தி நா, 2002: 25; S.O Canagaretnam, 1921: 07).

இலங்கை பூகோள ரீதியில் தமிழ்நாட்டுக்கு மிக நெருக்கமாக அமைந்திருப்பதும், நமக்குக் கிடைக்கின்ற தொன்மக் கதைகள் மற்றும் புராண தகவல்களும் நிலவடையாளங்களும்

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே திராவிடப் பண்பாடும் கலாசாரமும் இலங்கையில் பரவியிருந்தமைக்கு ஆதரவாக காணப்படுகின்றன (சிற்றம்பலம் சி. க. 2000:15-28). லெமூரியா கண்டம் குறித்த எண்ணக்கருவை அடிப்படையாகக் கொண்டு கண்ட நகர்வு மற்றும் கடல்கோள் அனர்த்தங்களால் லெமூரியாக் கண்டம் (குமரிக்கண்டம்) கடலினுள் அமிழ அதிலிருந்து மேலெழுந்த நிலப்பரப்பே எல்லம் எனும் ஈழம் என ஆய்வாளர்கள் (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2011: 29; தங்கேஸ்வரி க, 2007:12) தெரிவிக்கின்றனர். இதனை உறுதி செய்யும் வகையில் "முதல் மனிதக் குடியிருப்பு மில்லியன் ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்திருக்கும் எனவும் இலங்கையில் வடக்கு, தென்கிழக்கு, மண் மாதிரிகள் 250,000 ஆண்டுகளுக்கு முந்திய மனிதக் குடியிருப்பு காணப்பட்டமைக்கான சான்றுகளைக் கொண்டிருப்பதாகவும் காட்டுவர் (Deraniyagala S.U, 1996) இதனை ஆதார படுத்தும் வகையில் (தங்கேஸ்வரி க,2007:24) ஈழத்தின் ஆதிக்குடிகளாக இயக்கர்களும் நாகர்களும் வேடர்களும் வாழ்ந்தமை நிரூபிக்கப்படுகிறது.

சிந்துவெளி நாகரீக காலத்துக்கு சமானமான காலத்தில் ஈழத்திலும் நாகரீகமிக்க திராவிட மரபினரான நாகர்கள் வாழ்ந்து வந்தனர் (நவநாயகமூர்த்தி நா, 2002:26). இதில் இராமாயண காலம் கி.மு. 6000 என சில ஆய்வுகள் தெரிவிக்கின்றன (தங்கேஸ்வரி,க 2007:30,57; சிற்றம்பலம் சி. க. 2000:13). இராமாயண காலம் கி. மு.1300 என வரையறை செய்வோருமுண்டு (நவநாயகமூர்த்தி நா, 2002:27). தொல்லியல் தகவல்களின் அடிப்படையிலும் இலங்கையின் இந்த நாகரீக காலம் கி.மு. 2500களுக்குரியது என்பது உறுதி செய்யப்படுகிறது.

பெருங்கற்காலமாகக் கொள்ளக்கூடிய கி. மு.3000 வரையான காலப்பகுதியில் மட்டக்களப்பு தேசத்தின் நாகரீகமடைந்த மக்கள் வாழ்ந்ததாக ஆய்வுகள் காட்டுகின்றன (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2016:44). வாகரை, கதிரவெளி, காயங்கேணி போன்ற இடங்களில் கண்டெடுக்கப்பட்ட ஈமத்தாழிகள், அம்பாறை குமுக்கன் ஓயாவுக்கு வடக்கே கிடைக்கப்பெற்ற கரும் செம் கலவோடுகள், தெற்கில் உகந்தையில் அவதானிக்கப்பட்ட ஈமக்கிடைகள், சங்கமம்கண்டியில் ஆய்வு செய்யப்பட்ட கல்லறை மூடிகள் (dolmen) என்பவை பெருங்கற்கால கலாசாரம் நிலவியதை ஆதாரப்படுத்தும் சான்றுகள் என ஆய்வாளர்கள் குறிப்பிடுவர் (வெல்லவூர் கோபால், 2016:03; சிற்றம்பலம் சி க, 2000:12).

மட்டக்களப்பில் கண்டுபிடிக்கப்பட்ட ஈமக் கிடைகள் மற்றும் கல்லறை மூடிகள் புதிய கற்காலத்திற்குரியவை எனவும் இவை தென்னிந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட நினைவுச் சின்னங்களை ஒத்தவை எனவும் மென்டிஸ் உறுதிப்படுத்துகிறார் (Mendis, 1945:05).

ஆயினும், மகாவம்சம், சூளவம்சம் முதலான வரலாற்று நூல்களில் இதற்கான பதிவுகள் திட்டமிட்டே தவிர்க்கப்பட்டமையைக் காணமுடிகின்றது (Indrapala K,1969:44). மகாவம்சம் கூறும் கதைகளின் படி இலங்கையின் வரலாறு விஜயனின் வருகையோடு ஆரம்பிக்கப் படுவதாகவே தெரிவிக்கப்படுகிறது. (LE. BLAZE,1934:05) ஆயினும் விஜயன் வரும்போது ஆதிக்குடிகளான இயக்கர்களும் நாகர்களும் இங்கு வாழ்ந்தமையை மகாவம்சமே உறுதி செய்கின்றது (நவநாயக மூர்த்தி, 2002:21). பாளி நூல்கள் இயக்கர்கள் அனுராதபுரத்திற்கு தெற்காகவும் நாகர்கள் அனுராதபுரத்திற்கு வடக்கிலும் வாழ்ந்தார்கள் எனக் குறிப்பிடுகின்றன (சிற்றம்பலம் சி க,1983:122). புத்தரின் முதலாவது வருகையின் நோக்கமாக 'பௌத்த

தர்மம் வளர்ச்சி அடையக்கூடிய இடமாக இலங்கை புத்தருக்குத் தோன்றியதாகவும் இங்குள்ள இயக்கர்களை அகற்றி இதனை புனிதப் படுத்த வேண்டும் என அவருக்குத் தோன்றியதாகவும்' மகாவம்சம் குறிப்பிடுகிறது (மகாவம்சம், I:20). அகற்றுதல் என்பது அழிப்பதாக இருந்தால் இயக்கர்கள் அழிப்பது குறித்து புத்த பகவான் போதித்திருப்பாரா? என்ற சந்தேகமும் எழுகிறது.

இயக்கர்களை 'வேடொயிட்' அல்லது 'ஒஸ்டலொயிட்', இனக்குழுமமாக மானுடவிய லாளர்கள் வகைப்படுத்துவர். யக்சர்»வியாதர்»வேடர் என்ற சொற் திரிபுகளை இங்கு அவதானிக்க முடியும். இயக்கர் என்ற சொல்லே வழக்கொழிந்து வேடர் என்ற சொல் உருவானதாக கூறப்படுகிறது (சிற்றம்பலம் சி க , 1983: 122-123).

இயக்கர்களின் வழிபாட்டு முறைகளை ஆராய்ந்த கலாயோகி ஆனந்த குமாரசாமி, சுதேச மக்களின் இயற்கை வழிபாட்டு முறைகளுடன் இந்து மத கடவுளர்களான சிவன், உமை அம்சங்களும் சேர்ந்த பக்தி மார்க்கம் வளர்ச்சி பெற்றதாக குறிப்பிடுவார். பிற்பட்ட கால இந்து மதத்துக்கு இது ஆணிவேராக மாறியது. ஒஸ்ரிக்-திராவிட கலப்பு வழிபாட்டுக் கலாசாரமாக இது கூறப்படுகின்றது (சிற்றம்பலம் சி.க,1983:123).

முடி நாகர்களின் ஆட்சி விஜயனின் வருகைக்கு முன்னரே இலங்கையில் காணப்பட்டமை பற்றி ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையின் 'செந்தமிழ் ஈழமும் தமிழ் சங்கமும்' நூலில் குறிப்பிடுகின்றது. இவர்கள் சூட்டு நாகர் எனவும் அழைக்கப்பட்டனர். விஜயனின் வருகைக்கு முந்திய கால இலங்கையில் சிந்துவெளி நாகரிகமான மொகஞ்சதாரோ, ஹரப்பா ஆகியவற்றுடன் தொடர்புபட்ட கலாசாரம் நிலவியதைச் சுட்டிக்காட்டுகின்றனர் (குணராசா க , 1996:11 நவநாயகமூர்த்தி நா, 2002:26-27) புத்தபிரானின் இலங்கைக்கான இரண்டாவது விஜயத்தின்போது மகோதர, சூளோதர, ஆகிய இரு நாக மன்னர்கள் சண்டையை நிறுத்தினார் (மகாவம்சம் I:44-70; மணிமேகலை:54-63) என கூறப்படுவது முதலான சந்தர்ப்பங்கள் நாகர்களின் ஆட்சி நிலவியமைக்குச் சான்றாகும்.

இக்கருத்தை மேலும் வலுவூட்டும் வகையில் பரணவிதான, "வரலாற்றுக் காலத்தில் இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் திராவிட நாகரிகமே நிலவியது. பின் ஆரியர்களால் கையகப்படுத்தப்பட்டு சில திராவிட மொழிகள் மட்டும் எஞ்சின" எனும் (Paranavithana,1961:56) குறிப்பு உறுதிப்படுத்துகிறது. தமிழகமும் இலங்கையும் ஒன்றிணைந்த திராவிடப் பண்பாடு நிலவிய பிரதேசங்களாகவும் நேரடித் தொடர்புகளைக் கொண்டும் காணப்பட்டமையை சங்க கால இலக்கிய தகவல்களின் மூலமும் நாம் தெளிவு பெற முடியும் (சிற்றம்பலம் சி.க,1983:133).

இதனை உறுதி செய்யும் வகையில் இலங்கையில் அனுராதபுர அகழ்வில் கண்டறியப் பட்ட பிராமி வரி வடிவங்கள், பிராமி எழுத்துக்களில் காலத்தால் முந்தியதாகக் கருதப்படும் தென்பாண்டி பிராமி வரிவடிவத்தை ஒத்துக் காணப்படுவதையும் அது அசோகப்பிராமி வடிவத்திலிருந்து வேறுபடுவதையும் வெல்லவூர்க் கோபால் சுட்டிக்காட்டுவார் (வெல்லவூர்க் கோபால், 2011:31-32).

சங்க காலத்தில் (கி.மு. 6 முதல் கி.பி. 2 வரை) தமிழகத்துடன் இலங்கை முதலிய பகுதிகள் அடங்கி இருந்தமையை (PT. ஸ்ரீனிவாச ஐயங்கார், 1989) ஆய்வாளர்கள் காட்டுகின்றனர். இதனை ஆதார படுத்தும் வகையில் கடைசி பனியுகத்தின் இறுதியில் அதாவது இற்றைக்கு 7000 ஆண்டுகளுக்கு முன் கடல் மட்டம் உயரும் வரை இலங்கைக்கும் இந்தியாவுக்குமான நிலத் தொடர்பு காணப்பட்டதாக கூறப்படுகிறது (Jacques coulardeau and Ivan eve, 2022:.02; இந்திரபாலா கா, 2006:13; தனபாக்கியம் ஜி, 2001:24-25). சங்கப்

புலவர்களில் குறிப்பிடத்தக்க ஒருவராக ஈழத்துப் பூதந்தேவனார் எனும் புலவர் விளங்கியமை பற்றிய குறிப்புகளைக் (கணேசையர், 1939:02) காண்கிறோம். ஈழம் என்னும் கருத்துரு மற்றும் பூதன் என்னும் ஈழத்து வழக்குள்ள பெயர் என்பவற்றைக் கருத்தில் கொண்டு நோக்கும் போது ஈழத்துப் பூதந்தேவனார் ஈழத்துப் புலவர் என்பது தெளிவு (சிற்றம்பலம் சி.க,2000:49). பத்துப்பாட்டு-பட்டினப்பாலையில் வரும் செய்யுள் 191இல்.

**"கங்கை வாரியும் காவிரிப் பயனும்**

**ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்.**

எனும் வரிகள் இலங்கையிலிருந்து உணவுப் பொருட்கள் சங்க காலத்தில் தமிழ் நாட்டில் பிரபலம் பெற்று இருந்தமையை எடுத்தியம்புகின்றன( பத்துப்பாட்டு-பட்டினப் பாலை:191).

ஒட்டுமொத்தமாக நோக்கும்போது இலங்கையின் ஆதி கால நாகரீகம் பெருங்கற்காலம் (mesolithic) முதல் புதிய கற்காலத்திற்கு (Neolithic) உரியதாக கொள்ள முடியும் (வெல்லவூர்க் கோபால், 2011:29) எனக் குறிப்பிடுவார் வெல்லவூர்க் கோபால். ஆயினும் இலங்கையின் கற்காலப் பண்பாடு குருணிக் கற்காலத்துடன் (monolithic culture) ஆரம்பிப்பதாகவும் இதனை முடித்து வைத்து இரும்பு யுகத்தினை ஆரம்பித்தவர்கள் நாகர்கள் என்பதையும் ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன (கிருஷ்ணராஜா செ, 1999:53-55). இலங்கையில் கி.மு. 800கள் வரையான காலம் பெருங்கற்காலம் என கொள்ளக்கூடியது. இக்கால மக்களே இரும்பின் உபயோகத்தையும் அறிமுகப்படுத்தியவர்கள் என்பது தெளிவாகின்றது என்பார் செனவிரத்ன (Senaviretne S, 1988:பக்.100-102). இந்தியாவெங்கும் பரந்து வாழ்ந்த திராவிடர்கள் கி.மு.. 1080 களுக்கு முன் இலங்கையில் பரவி காணப்பட்டனர் (Mendis G.C,1945) இவர்கள் இரும்பு யுகத்தினை உடையவர்கள் என்பதை காபன் கதிரியக்க சோதனைகள் உறுதிப்படுத்துகின்றன.

சிரான் திரணியகல தன் ஆய்வு முடிவுகளின் படி, வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தின் எல்லையாக கி.மு. 29,000 உள்ளதாக எடுத்துக் காட்டுவார். கருவிப்புழக்கத்தின் அடிப்படை யில் இரத்தினபுரி பண்பாடு, பலாங்கொடை பண்பாடு (கிருஷ்ணராஜா செ,1999:68) என்பன குருணிக் கற்கால பண்பாட்டுக்குரியவை என்பது ஊர்ஜிதப் படுத்தப்படுகிறது.

மேலும் விஜயனின் வருகைக்கு முன்னரே எழுத்துக்களின் வரிவடிவ வளர்ச்சி ஏற்பட்டுவிட்டமையும் நோக்கத்தக்கது. கி.மு. 500 பிராகிருத மொழிக்கான பிராமி வடிவம் அறிமுகமாவதற்கு முன்னமே இலங்கை வட பகுதியான கந்தரோடையில் பழந்தமிழ் பிராமி வரிவடிவம் உபயோகிக்கப்பட்டமையை தொல்லியல் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன (கிருஷ்ணராஜா செ,1999:81). நாக வம்சம் நாகரீக சிறப்புடன் வளர்ச்சி பெற்றிருந்த காலமாக வரலாற்றாசிரியர்கள் இதனை காட்டுவர் (புஸ்பரெட்னம் ப, 2006:4-6; நவநாயகமூர்த்தி நா, 2002:28).

மொழி தவிர குயவச் சக்கரம், இரும்பின் உபயோகம், செயற்கைக் குளக்கட்டுமானம், நெற்செய்கை, சவ அடக்க மையம் முதலானவற்றை பெருங்கற் கால சந்ததியினர் கொண்டிருந்தனர். இலங்கையின் சமூக உருவாக்கத்திற்கு இந்தப் பெருங்கற்கால பண்பாட்டுக்குரிய மக்களே அடித்தளமிட்டனர் (கிருஷ்ணராஜா செ, 1999:81-83).

காலவரையறைகளைச் சரிவரக் கண்டறிவதில் அறிவியல் முறை ஆய்வுகள் தான் அறுதி செய்யக்கூடியதாகும். ஆயினும் நம்பிக்கையூட்டும் வகையில் அமையும் இராவணன் காலத்துக்குரியது எனக் கொள்ளக் கூடிய நிலவடையாளங்களும் இலக்கியக் குறிப்புகளும் தொன்ம நம்பிக்கைகளும் நாம் புறந்தள்ளிவிட முடியாதனவாகும். எவ்வாறாயினும் விஜயனின் வருகைக்கு முன்பே ஈழத்தில் மேம்பட்ட நிலையில் திராவிட கலாசாரம் நிலவியமை உறுதியாகிறது.

## 2.2 வரலாற்றுக் காலத் திராவிடர் குடியேற்றங்கள்

தற்போது வரை நமக்கு கிடைக்கின்ற சந்தேகத்துக்கு இடமின்றிய ஆதாரங்களும் பாளி மொழியிலான வரலாற்று நூல்களும் கி.மு. 2ஆம் நூற்றாண்டு காலத்திலிருந்து தமிழர் குடியிருப்புகள் இலங்கையில் ஏற்பட்டமையைக் காட்டுவதாக பரணவிதான குறிப்பிடுவார் (Indrapala K,1969:46). தீபவம்சம், மகாவம்சம் முதலான நூல்களின் படி கி.மு. 250 முதல் கி.பி. 1 வரையான இரண்டரை நூற்றாண்டு காலத்தில் எண்பது ஆண்டுகள் ஈழத்தில் தமிழர்களின் ஆட்சி நிலை கொண்டிருந்தது (சிற்றம்பலம்,2000:43-45) இக்காலப்பகுதியோடு இணைந்ததாக பல்வேறு தமிழர் குடியேற்றங்கள் ஈழத்தின் பல பாகங்களிலும் நிகழ்ந்தன.

இதனால்தான் சைவத் தமிழ் மன்னர்களின் ஆட்சி பௌத்த மதத்துக்கு வீழ்ச்சியைக் கொடுக்கும் என்பதை அக்கால பாளி நூலாசிரியர்கள் பிக்குகளுக்கு உணர்ந்தினர். கி.மு. முதலாம் நூற் றாண்டில் வட்டகாமினியிடமிருந்து (பாலகம்பா) ஆட்சியைக் கைப்பற்றி 14 வருடங்கள் 10 மாதங்கள் வரை ஆட்சி செய்த தமிழர்களுக்கு எதிராக வட்டகாயினியுடன் இணையுமாறு சிங்களத் தளபதிகளுக்கு பௌத்த குருமார் ஆலோசனை வழங்கியது (மகாவம்சம் XXXIII:73-76) குறிப்பிடத்தக்கதாகும் (சிற்றம்பலம், 1996:26)

கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கும் கி.பி. 11ஆம் நூற்றாண்டில் சோழப் பேரரசுடன் இலங்கை இணைக்கப்படுவதற்கும் இடைப்பட்ட காலத்தில் பல்வேறு தமிழ்ப் படையெடுப்பு களும் ஆக்கிரமிப்புகளும் இலங்கையில் நிகழ்ந்தன (Indrapala K, 1969:46).

இதுதவிர 10க்கும் மேற்பட்ட தடவைகளில் சிங்கள ஆட்சியாளர்கள் தமது அரசியல் தேவைகளுக்காக தென்னிந்திய தமிழ்ப்படைகளை இங்கு வரவழைத்தமை பற்றி மகாவம்சம் குறிப்பிடுவதாக இந்திரபாலா சுட்டிக்காட்டுகிறார் (Indrapala K,1969:46).

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இருந்து கிடைக்கப்பெற்ற சாசனப் பொறிப்புகள் தமிழ் ஆதி பிராமி சாசனங்கள் என குறிப்பிட முடியும் என செ. கிருஷ்ணராஜா (1999:19) சுட்டிக்காட்டுவார். அனுராதபுரத்து இருக்கைத் தமிழ் பிராமிக் கல்வெட்டு கி.மு முதலாம் நூற்றாண்டின் பிராமி வரிவடிவத்தின் வளர்ச்சி நிலையைக் காட்டுவதுடன் அது தமிழ் வணிக கணத்தில் அறுவரின் பெயர்களைக் குறிப்பிடுவதும் முக்கியத்துவம் கொடுத்து நோக்கத்தக்கது (கிருஷ்ணராஜா செ, 1999:20).

ஈழத்தின் தென்கிழக்கு பிரதேசமான திருக்கோயில் முதல் அம்பலாந்தோட்டை வரையான பகுதிகள் வரலாற்றுக்கு முந்திய காலத்திலிருந்தே இந்தியாவுடனும் தென்கிழக்கு ஆசியாவுடன் அதிக தொடர்புகளைக் கொண்டிருந்தமையை அறியமுடிகிறது. இராவணன் தென்னிலங்கையின் மன்னனாக காட்டப்படுகிறான் (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2016:40). ஆதிகால மட்டக்களப்பு தேசமானது கிழக்கிலங்கையின் வடக்காக வெருகலாறையும் தெற்கே

கதிர்காமம் மாணிக்க கங்கையையும் கிழக்கே வங்காள விரிகுடாவையும் மேற்கே ஊவா மலைத் தொடர் வெல்லசப்பகுதியையும் உடையது. (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2016: 38).

தமிழகக் குறிப்புகளில் மட்டக்களப்புப் பிரதேசம் தென் இலங்காபுரி என குறிப்பிடப் படுகின்றது. மலையர் குகநாடு என்ற பெயரினையும் இது பெற்றிருந்தமை பற்றிய குறிப்புகளை யும் காண்கிறோம். மலையர் என்பது சேர நாட்டில் இருந்து வந்தவர்கள் என்பதையும் குகர் என்பது கலிங்க நாட்டினரையும் குறிக்கிறது (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2016:39).

முக்குகர் வருகை பற்றிக் கூறும் கல்வெட்டுப் பாடல் ஒன்று கலி பிறந்து 2840 களில் (கி.மு .269) முக்குவர் இங்கு வந்து குடியேறியமை பற்றித் தெரிவிக்கின்றது. திருக்கோயில் திருப்பணிக்கு ஊழியம் செய்வதற்கு இந்த முக்குவர்கள் முதன்மைப் படுத்தப் பட்டமை இக்கல்வெட்டு பாடல்களின் வழியே தெளிவாகின்றது (சிவசண்முகம் ஞா, 2000:4-5).

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து முக்கிய மிக்க இடமாக மட்டக்களப்புப் பேசப்பட்டு வருகிறது. திருக்கோயிலை மையப்படுத்திய மட்டக்களப்பு நாகர்முனை எனக் குறிப்பிடப்படுகிறது. முறைப்படியான தொல்லியல் ஆய்வுகள் நடைபெறாமை இது பற்றிய தெளிவினை நமக்கு ஏற்படுத்தவில்லை. மட்டக்களப்பு தேசத்தின் யக்குரை, லக்கரை, மயன்கணை (மையங்களை), விந்தனை, கதிர்காமம் போன்ற பகுதிகள் ஆதிக் குடிகளின் வதிவிடங்களாகக் குறிப்பிடக்கூடியவை.

ஈழத்து தமிழ் பிராமிச் சாசனங்களில் மட்டக்களப்பில் கண்டுபிடிக்கப்பட்ட 'வெளிர்' சாசனங்களும் முக்கியமானதாகும். மட்டக்களப்பில் இருந்து கதிர்காமம் வரையுள்ள கரையோரப் பகுதியில் அமைந்திருந்த குறுநில அரசமைப்பான 'பஞ்சமர்' ஆட்சி அமைப்பு கதிர்காமத்தில் நீண்ட காலம் நிலைத்து இருந்தமையை ஆதாரப்படுத்தும். இதனை கதிர் காமத்திலிருந்து பெறப்பட்ட மீன் சின்னம் பொறிக்கப்பட்ட பிராமிச் சாசனங்கள் உறுதிப்படுத்து கின்றன (கிருஷ்ணராஜா செ, 1999:21, கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2011:30 - 31). பௌத்த புனித மதச் சின்னமாகிய அரச மரக் கிளை நடப்பட்ட நிகழ்வில் கலந்து கொண்ட முக்கிய பிரமுகர்களாக பிராமணன் தவிக்கும், கதிர்காமம் சந்தணகாமம் ஆகியவற்றின் சிற்றரசர்களும் கலந்து கொண்டமை பற்றி மகாவம்சம் குறிப்பிடுகிறது (சிற்றம்பலம் சி.க, 1996:.28). இதிலிருந்து அக்காலத்தில் கதிர்காமம் வரையான சிற்றரசர்கள் முக்கியத்துவம் பெற்றிருந்தமை தெளிவாகின்றது (மகாவம்சம் XIX :54). தென்கிழக்கு இலங்கையில் முருக வழிபாடு கோலோச்சிய கல்வெட்டு ஆதாரங்களைக் காண்கின்றோம். கி.பி. 4 ஆம் நூற்றாண்டு களில் மட்டக்களப்பு மூன்று சிற்றரசுகளாக வகுக்கப்பட்டது. இதில் கதிர்காமம் உள்ளிட்ட தென்பகுதி உன்னரசுகிரியாகவும் சம்மாந்துறை உள்ளடக்கிய கல்லாறு வரையான நடுப்பகுதி மட்டக்களப்பு (Metacaloa) எனவும் கல்லாறு முதல் வெருகலாறு வரையான பகுதி மண்முனை யாகவும் பெயரிடப்பட்டது (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2011:38).

ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது வரலாற்றுதய காலப் புலப்பெயர்ச்சி தென்னிந்தி யாவிலிருந்து வந்த திராவிடர்களைக் கொண்டமைந்திருப்பதையும் இங்குள்ள சிங்கள தமிழ் மக்கள் இவர்களின் வழித்தோன்றல்கள் என்றும் கொள்வதே சரியாகும்(சிற்றம்பலம் சி. க,1994:10). பௌத்தத்தின் வருகைக்குப் பின்பே ஈழத்தில் திராவிடக் கலாசாரம் பௌத்தம் சார்ந்தோர் , பௌத்தம் சாராதோர் என மாற்றம் பெற்றது (சிற்றம்பலம் சி. க ,1994:13).

**உசாத்துணை**

1. Blaze L.E, A History of Ceylon for school, 9th Ed., Colombo,1934.
2. Canagaretnam S.O, Monograph of the Batticaloa District of the Eastern Province, Ceylon, 1921.
3. Deraniyagala, S.U, PRE- AND PROTOHISTORIC SETTLEMENT IN SRI LANKA, PROCEEDINGS OF THE XIII CONGRESS, FORLI'- ITALIA- 8- 14 September, 1996.
4. Jacques Coulardean and Iven eve, Sri Lanka: From the arrival of Homo sapiens to the Indian ocean maritime hub,,2022
5. Indrapala K , 'Early Tamil settlements in Ceylon', Journal of RAS (Ceylon), Vol XIII (New series), 1969
6. Mendis G.C ,' The Early history of Ceylon' Y.M.C.Publishing House, Russell Street, Calcutta, 1945
7. Paranavitana S, A Concise History of Ceylon, University of Ceylon, Press Board,1961
8. Senaviratna S, Pre-state Chieftain and servants of the state , Conference of the 11th International Association of Historians of Asia, Colombo, 1-5 August 1988.
9. The Mahavamsa, trn.Welhem Geiger, New Delhi, 2000
10. இந்திரபாலா கா , இலங்கையில் தமிழர், 2006.
11. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், மட்டக்களப்பு வரலாறு ஓர் அறிமுகம், மட்டக்களப்பு, 2011
12. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், மட்டக்களப்புத் தேசம் வரலாறும் வழக்காடும், சேமமடு பதிப்பகம் 2016.
13. கணபதிப்பிள்ளை ப, புராதன இலங்கை, அரியாலை, 1988
14. கணேசையர் சி, ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் சரிதம், ஈழகேசரி வெளியீடு, 1939.
15. கிருஷ்ணராஜா செ, இலங்கை வரலாறு-பாகம் 1, டிசம்பர் 1999.
16. குணராசா க, ஈழத்தவர் வரலாறு, பூபாலசிங்கம் புத்தகசாலை ,1996
17. சிவசண்முகம் ஞா, மட்டக்களப்பு குகன்குல முற்குகர் வரலாறும் மரபுகளும், விபுலம் வெளியீடு 2000.
18. சிற்றம்பலம் சி. க, பண்டைய ஈழத்தில் தமிழர்- ஒரு பன்முகப் பார்வை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், யாழ்ப்பாணம், பக். 15-28, 2000
19. சிற்றம்பலம் சி. க, ஈழத்தமிழர் வரலாறு (கி.பி 1000வரை) தொகுதி I, இந்துக்கல்லூரி வெளியீடு தொன்மை, சாவகச்சேரி, 1994.
20. சிற்றம்பலம் சி. க, ஈழத்தமிழர் தொன்மை,சென்னை, 2001
21. சிற்றம்பலம் சி. க, இந்து சமய வரலாறு,1996
22. சிற்றம்பலம் சி. க, “பண்டைய ஈழத்து யக்ச, நாக வழிபாடுகள்”, சிந்தனை தொ.ஐ , இதழ் II, பக்.121-136, ஆடி 1983.
23. செல்வாராசக் கோபால் மற்.கனகசபாபதி மட்டக்களப்பு மாநிலத்தின் வரலாற்றுக் சுவடுகள் 2005
24. தங்கேஸ்வரி க, கிழக்கிலங்கைப் பூர்வீக வரலாறு, 2007.
25. தனபாக்கியம் ஜி, இலங்கையில் தொல்லியல் ஆய்வுகளும் திராவிடக் கலாசாரமும், மணிமேகலைப் பிரசுரம், 2001
26. புஷ்பரெட்ணம் த, இலங்கைத் தமிழரும் நாக நாட்டு அரசமரமும், நியூ செஞ்சரி புக் கவுஸ்,2006
27. K.R. சிவப்பிரகாசம், விஷ்ணு புத்தர் வெடியரசன் வரலாறு, 1988,
28. நவநாயகமூர்த்தி நா, ஈழத்து வரலாற்றுச் சுவடுகள்,2002.
29. விஜயரெட்ண v,மட்டக்களப்பு வரலாறு - பூர்வீகக் குடிகளும் குமாரதெய்வ வழிபாடும், எழுநா வெளியீடு, 2013
30. ஸ்ரீனிவாச ஐயங்கார் P .T, தமிழர் வரலாறு, 1989

# 3. மட்டக்களப்பின் ஆட்சி பீடங்களும் பரம்பலும்

**ப**ண்டைய மட்டக்களப்பு என்பது கிழக்கு ஈழத்தின் வெருகல் ஆறு முதல் கதிர்காமம் மாணிக்க கங்கை வரை விரிந்து காணப்பட்ட நிலப்பிரதேசம் ஆகும் (வெல்லவூர்க் கோபால், 2011:36, விஜயரெட்ண ஏ, 2013:21). காலத்துக்கு காலம் வெவ்வேறு பகுதிகள் மாறி மாறி மட்டக்களப்பின் ஆட்சித் தளங்களாக காணப்பட்டுள்ளன. சில காலங்களில் மைய ஆட்சி ஒன்றின் ஆதிக்கத்தின் கீழ் ஆட்சி பிரதிநிதிகளை அல்லது குறுநில மன்னர்களைக் கொண்டு மொத்தப் பிரதேசமும் ஆட்சிக்குட்படுத்தப் பட்டன. சில காலப்பகுதிகளில் மைய ஆட்சியாளர்களின் ஆட்சியிலிருந்து விடுபட்டு பிராந்திய ஆட்சியாளர்களால் நேரடியாகவும் பரிபாலிக்கப்பட்டு வந்துள்ளன. அனுராதபுரம், பொலனறுவை, கண்டி, முதலான பேரரசுகளின் கீழ் சிற்றரசர்களாக வழி நடத்தப்பட்டுள்ளமையையும் வரலாற்று ஆய்வா ளர்கள் எடுத்துக் காட்டுகின்றனர் (வெல்லவூர்க் கோபால், 2011: 57).

மட்டக்களப்பு பெருநிலத்தின் ஆதிக்குடிகளாக இயக்கர்கள், நாகர்கள், வேடர்கள் முதலானோர் அடையாளப் படுத்தப்படுகின்றனர். கி.மு. ஐந்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட திராவிட குடியிருப்புகள் மட்டக்களப்பில் காணப்பட்டமைக்கு ஆதாரங்கள் காணப்படுகின்றன (தனபாக்கியம் ஜி 2001:36, தங்கேஸ்வரி க 2007:50 ). முடிநாகர்களின் ஆட்சி விஜயனின் வருகைக்கு முன்பே இலங்கையில் காணப்பட்டமையை ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை தனது ‘செந்தமிழ் ஈழமும் தமிழ்ச் சங்கமும்’ நூலில் குறிப்பிடுகிறார். மட்டக்களப்பின் ஆதி குடியினர் வேடர்களே என்ற முடிவை இங்குள்ள குமார தெய்வ வழிபாட்டின் அடிப்படையில் நின்று முன்வைக்கும் ஆய்வுகளை மௌனகுரு. சி (1998 ), செல்வ ராஜகோபால் கா.தா( 2005 ), விஜயரெட்ண. ஏ(2013) முதலானோர் தமது நூல்களின் மூலம் முன்வைக்கின்றனர். முறைப்படியான காலவரையறை களைத் தீர்மானிப்பதிலும் ஆதிக்குடிகள் பற்றிய தீர்க்கமான முடிவுக்கும்

எதிர் காலத்தில் இப்பகுதியில் நடத்தப்படக் கூடிய சுயாதீனமான தொல்லியல் ஆய்வுகளே நிலையான முடிவுகளைத் தரும். முழுமையான தொல்லியல் ஆய்வுகள் இப்பகுதிகளில் நடாத்தப் படுமாயின் இப்பகுதிக்குரிய வரலாற்றுக்காலம் இன்னும் முன்நோக்கியதாக அமையலாம். புறச்சான்றுகள் நெடுங்காலத்துக்கு முற்பட்டதான நாகரீக சமூக அமைப்பு காணப்பட்டமையை ஆதாரப்படுத்தினாலும் இதுவரை உள்ள அகச் சான்றுகளின் அடிப் படையில் இக்காலப்பகுதியை கி.மு. 454 முதற்கொண்டே தெளிவாக வகைப்படுத்த முடியும் (Mendis G.C1945:07).

ஈழ வரலாற்றையும் அதன் ஆட்சி இருக்கைகளை அலங்கரித்த மன்னர்கள் பற்றியும் வரிசைப்படுத்தும் போது அவர்களில் பலருக்கு கலிங்கர்கள் அல்லது திராவிடர்களுடனான தாய் வழி அல்லது தந்தை வழிச் சந்ததித் தொடர்புகள் காணப்படுவதை அவதானிக்கலாம். இவர்களில் பலர் நாக வம்சத்தினராகக் காணப்படுவதுடன் பெயர்களின் பின்னொட்டுகளிலும் நாகர் என்பதை குறிப்பதைக் காணலாம் (புஸ்பரட்ணம் ப, 2006:7). விஜயன் இலங்கைக்கு வருமுன் இங்கிருந்த இயக்கர்களும் நாகர்களும் மனித குலத்தவர் அல்லர் என எந்த பௌத்த பாளி நூல்கள் குறிப்பிட்டனவோ அவற்றின் வரிசைப்படுத்தலிலேயே நாக மரபு மன்னர்களையும் நாகவிகாரை மற்றும் நாகர் பெயர் தாங்கிய குடியிருப்பிடங்களையும் விதந்து பேசப்படுவதை அவதானிக்க முடிகிறது (பத்மநாதன் சி. 2016 ).

இந்த வகையில் மட்டக்களப்பின் நாக மன்னர்களின் முக்கிய இருக்கைகளாக நாக பொக்கணை (மன்னன் பிட்டி), நாகர்முனை (திருக்கோயில்), நாகன் சாலை (மண்டூர்), சூரியத்துறை (மட்டக்களப்பு பெருந்துறை) என்பவற்றைக் குறிப்பிடலாம். மட்டக்களப்பு குசலான் மலைப் பகுதி கல்வெட்டு ஒன்றில் 'காமினி தீசன் உபராஜா நாகனின் மகனான ராஜ அபயனின் மகன்' என்ற குறிப்புக் காணப்படுகின்றது (Paranavithana,1961 :61; பத்மநாதன் சி. 2016). மட்டக்களப்பின் ஆதிகுடிகளாகவும் ஆரம்ப கால ஆட்சி இருக்கைக்கு உரியவர் களாகவும் நாகர்களையும் இயக்கங்களையும் கருத முடியும். ஆயினும் இக்காலப்பகுதியில் குறிப்பிட்டுக் கூறத்தக்க ஆட்சித்தளம் இப்பகுதியில் இருந்தமைக்கு எந்த ஒரு சான்றுகளையும் கண்டு கொள்ள முடியவில்லை என்று கூறப்பட்டாலும் 2015களில் வந்தாறுமூலைப் பகுதி மற்றும் மட்டக்களப்பின் பல்வேறு பாகங்களில் கண்டெடுக்கப்பட்ட கற்கிடைகளில் "வேள்ணாகன் பள்ளி" "மணிநாகன் பள்ளி", "வேள்ணாகன் மகன் வேள்கண்ணன்' முதலான வாசகங்கள் காணப்பட்டமை குறித்து நோக்கும்போது இப்பகுதியில் நாகர்குலச் சிற்றரசு வியாபித்துக் காணப்பட்டமை உறுதியாகின்றது (பத்மநாதன் சி, 2015:20-21,பத்மநாதன் சி. 2016:95-110).

சிங்கர், கலிங்கர், வங்கர் ஆகிய மூன்று வர்ணத்தினரதும் குடியேற்றங்கள் கலிங்க தேசத்திலிருந்து ஈழம் வந்ததாக பல்வேறு வரலாற்று நூல்கள் (வெல்லவூர்க் கோபால், 2011:45) விளக்குகின்றன. வட கலிங்கத்தின் சிங்க புரத்திலிருந்து வந்தவர்கள் சிங்கர்கள். இவர்களையே சிங்களவர் எனக் குறிப்பிடுகின்றோம். ஆயினும் 'சிம் ஹலடீவ்' எனும் சமஸ்கிருத மொழிச் சொல்லின் பொருள் கருவாப்பட்டை தீவு என்பதாகவும் கருவாப்பட்டை முதன்மையாக விளையும் நாடாக இலங்கை இருப்பதாலேயே இப்பெயர் வழங்கப்பட்டதாகவும் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை (1905:06) குறிப்பிடுவார். கங்கைக்கரையில் படகோட்டும் மரபில் இருந்து வந்தவர்கள் வங்கர்கள் எனவும் கலிங்கத்தின் முக்கிய குடியிருப்புகள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இங்கு வந்து கலந்ததாகவும் (வெல்லவூர்க் கோபால், 2011:48) கூறப்படு கின்றது. இக்காலம் கலிங்கரான இரஞ்சலனின் காலம். இதனை கி.மு. 234 என மட்டக்களப்பு மான்மியம் (நடராஜா எப் .எக்ஸ்.சி, 1998:25-26) கூறும்.

இதனிடையே திமிலைதீவுப் பகுதியை இருக்கையாக கொண்டு மீன்பிடித் தொழிலை மேற்கொண்ட சமூகமான திமிலர், கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து மட்டக்களப்பில் வாழ்ந்து வருகின்றமையை வரலாற்றுச் சான்றுகளில் காணலாம் (வெல்லவூர்க் கோபால், 2011: 46-47). மட்டக்களப்புக்குத் திமிலர்கள் எப்போது எங்கிருந்து வந்தார்கள் என்பதில் தெளிவற்ற நிலையே காணப்படுகிறது. கி.மு. ஐந்தாம் நூற்றாண்டுக் காலப்பகுதியில் பண்டுவசுவின் ஆட்சிக்காலத்தில் யாழ்ப்பாணம் கீரிமலை பகுதியில் இருந்து இவர்கள் வெளியேற்றப்பட்டு மட்டக்களப்பு பாணமைத்துறையை அண்டி வந்தடைந்தனர் என்ற குறிப்பை காணமுடிகிறது (வெல்லவூர்க் கோபால், 2011:47).

மட்டக்களப்பில் முக்குவர்களின் வருகை இடம்பெற்றதாகக் கூறப்படும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இறுதியில் முக்குவர்க்கும் திமிலருக்கும் இடையில் சண்டை நடைபெற்ற குறிப்பு களைக் காணமுடிகின்றது. பின்வரும் கல்வெட்டுப் பாடல் (சிவசண்முகம் ஞா, 2000:4) திமிலர்கள் வெளியேற்றப்பட்டு முக்குகர் மட்டக்களப்பில் ஆதிக்கம் பெற்றமையைக் காட்டுகிறது.

**“கலியப்தம் இருபது நூறு உடன் எண்ணூறு எட்டடைந்து வர்ச்சரம்**

**என்றுரைப்பர்**

**வலிமையுடன் மட்டுநகர் வந்திறங்கி,**
**புலி புகுந்த பசுநிரல் போல்**
**திமிலர் யாவும்**
**பொன்று விழப்பொருது கொன்று புகழே பூண்டு, நலியாத**
**திரையியெனும் துறையில் மூழ்கி**
**நடந்து வருங்காலம் சிலை நாட்டலுற்றார்.**
**உற்றகாலத்தில் ஒரேழு முற்குகர்,**
**பெற்ற நாட்டின் பிரசைகளானவர்**
**சுற்றமோடும் துணைவர்கள் தம்மோடும்**
**நற்றவத்தினர் நாடினர் இவ்விடம்.**

இச்சண்டைகளில் பட்டாணியர்கள் முக்குவர்களுக்கு உதவிய குறிப்புகள் முக்கியத் துவம் கொடுத்து நோக்கக் கூடியது. ஆயினும் ஈழத்தில் பட்டாணியர்களின் வரவுகள் பற்றிய ஆய்வுகளை ஒப்பிட்டு நோக்கும் போது திமிலர்களின் வெளியேற்றம் கி.பி. நாலாம் நூற்றாண்டு களுக்குப் பின் தான் நிகழ்ந்திருக்க முடியும் (வெல்லவூர்க் கோபால், 2011:47) இதன்படி மட்டக்களப்பில் திமிலர்களின் முழுமையான வியாபகம் ஆறு நூற்றாண்டுகள் அமைந்திருந்ததாக கருதலாம். இவர்கள் வெருகல் கரைக்கு அப்பால் நகர்ந்து வாழ்ந்தாலும் இவர்கள் முக்குகர்க ளுடன் கலந்து வாழ்ந்தமை பற்றியும் கருதப்படுகிறது (வெல்லவூர்க் கோபால், 2011:47-48). கி.மு. ஐந்தாம் நூற்றாண்டுகளில் திராவிடக் குடியிருப்புகள் மட்டக்களப்பில் நிகழ்ந்தமை பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருந்தோம் (தனபாக்கியம் ஜி, 2001:36; தங்கேஸ்வரி க 2007: 50).

கி.மு. 454 இல் அபயனின் மறைவுக்குப் பின் இலங்கை 17 ஆண்டுகள் அதாவது கி.மு. 437 வரை ஆட்சி அதிகாரம் ஏதும் நிலைநிறுத்தப்படாத காலமாகவும் போர் இடம் பெற்ற காலமாகவும் காட்டப்படுகின்றது (வெல்லவூர்க் கோபால், 2011:63-64). இக்காலப் பகுதியில் இயக்கர், நாகர் சிற்றரசுகள் மீண்டும் தம்மை நிலை நிறுத்திக் கொண்ட காலமாக வரலாற்றாசிரியர்கள் சித்தரிக்கின்றனர் (வெல்லவூர்க் கோபால், 2016:62). பண்டுகாபயனுக்கும்

அவனது எட்டு மாமன்மார்களுக்கும் இடையிலான தொடர்ச்சியான அதிகாரக் கலகம் நடைபெற்ற காலம் இது. இயக்கர்களின் உதவியுடன் பண்டுகாபயன் இதில் வெற்றி பெறுகிறான். இதுவரை தலைநகரமாக இருந்த உபதிஸ்ஸ நுவர அழிவடைகிறது (முத்துத்தம்பிப்பிள்ளை,ஆ. 1903:09).

நீண்ட காலம் அரசற்றிருந்த இலங்கையில் பாண்டு காபயனுடைய காலத்தில் (கி.மு. 432 - 360) புதிய ஆட்சியமைப்பு மீளமைக்கப்படும் போது, கடம்ப நதித் தீரத்தில் (மல்வத்து ஓயா) அவன் புதிய நகரம் ஒன்றை நிர்மானித்தான். அதற்கு அனுராதபுரம் எனப் பெயரிட்டான். இயக்கர்களுக்கு நகரின் நாற்புறமும் குடியிருப்புகளை வழங்குகிறான். வெவ்வேறு சமய நம்பிக்கை கொண்ட 500 பேரின் குடியிருப்புகள் அரசனால் வழங்கப்பட்டிருந்தன (Blaze L E, 1934:14). அவர்களின் வணக்கத் தலங்களுக்கு வருடாந்த ஒதுக்கீடுகள் செய்தான். பிக்குகளுக்கு மட்டுமன்றி இந்து பிராமணர்களுக்கும் பிரத்தியேக வதிவிடங்களை அமைத்துக் கொடுக்கிறான் (மகாவம்சம், X:102). இக்காலப்பகுதியில் மட்டக்களப்பில் பல சிறு சிறு சிற்றரசுகளின் ஆட்சி நாகர்முனை (திருக்கோயில்), உன்னரசுகிரி (உகந்தை), மட்டக்களப்பு (சம்மாந்துறை), ஏரவில, வெருகல், திருகோணமலை பகுதிகளில் நிகழ்ந்தன (தங்கேஸ்வரி க, 2007:61).

கி.மு. 312களில் மட்டக்களப்பில் சிறிகுலசேனனுடைய ஆட்சி நிகழ்ந்தமை பற்றி மட்டக்களப்பு மான்மியம் குறிப்பிடும் (நடராசா எப்.எக்ஸ்.சி, 1998:26). தேவநம்பியதீசனின் ஆட்சி காலத்தில் (கி.மு. 247-207) கிழக்கு ஈழப் பகுதி உருகுணை இராச்சியத்தின் ஆட்சித் தொடர்பில் இருந்தது. கஜாகம எனப்படும் கதிர்காமம் மற்றும் கண்டனாகம எனப்பட்ட கல்லோயா பகுதிகள் சத்திரிய வன்னியர்களால் ஆளப்பட்டு வந்த குறிப்புகளைக் காண முடியும் (குணராசா,க 1996: நவநாயகமூர்த்தி நா, 2002:31). சத்திரிய வன்னியர்களின் கல்வெட்டுக்கள் தெற்கே கதிர்காமம் முதல் வடக்கே ஏறாவூர் வரைப் பரவிக் காணப்படுகின்றன. இக்கல்வெட்டுகளின் அடிப்படையில் பத்து சகோதரர்களின் கூட்டாட்சி இப்பகுதியில் கோலொட்சியமையைக் கொள்ளமுடிகிறது (சிற்றம்பலம் ,சி.க 1994:15-16). சத்திரிய வன்னியர்களில் நாற்படை வன்னியர்களும் அடங்கியிருந்தனர் எனும் ஆய்வாளர்களின் குறிப்புகள் முக்கியத்துவத்துடன் நோக்கத்தக்கவை ( நவரத்தினம் சீ . எஸ் ).

மட்டக்களப்பை முதன்முதலில் முழுமையாக இருக்கையாக்கி ஆட்சி செய்தவன் என்ற சிறப்பினை சேனனின் மகனான கூத்திகன் பெறுகிறான். இவனது காலம் கி.மு. 236-214. இவன் சம்மாந்துறையை இருக்கை ஆக்கி ஆட்சி செய்ததை வரலாற்று நூல்கள் உறுதி செய்கின்றன (வெல்லவூர்க் கோபால், 2016:5). சேர நாட்டுடன் தொடர்புடைய இந்த ஆட்சி பல்வேறு வள நலமும் கொண்டு மிளிர்ந்த காலமாக தமிழர் சார்புடைய வரலாற்றாசிரியர்கள் எடுத்துக்காட்டுகின்றனர் (நவநாயகமூர்த்தி நா, 2002:47). அதேவேளை, இக்காலப்பகுதியில் அனுராதபுரத்தில் சேனனின் ஆட்சி காணப்பட்டமை பற்றிக் குறிப்பிடப்படுகின்றது. அக்காலப்பகுதியில் கதம்ப நதி (அருவி ஆறு) அனுராதபுரத்திற்கு அருகாகத் திசை திருப்பப்பட்டதாக (குணராசா, க 1996:33) குறிப்பிடப்படுகின்றது. பாரிய நேரடியான நீர்வழிப் போக்குவரத்துப் பாதையிலிருந்து அரச மாளிகைகள் உள்ள இடங்கள் வரை அமையும் குறுகியதான நீர்மார்க்கம் எதிரிகள் இலகுவில் அணுகி விடுவதைப் தடுக்கும் வகையில் அமைக்கப்படுவதுண்டு.(கிட்டங்கித் துறையில் இருந்து மட்டக்களப்புத் தரவை வழியான பாதையையும் இவ்வாறே உணரலாம்). பௌத்த பாளி நூல்கள், 22 வருடகாலம் நடைபெற்ற

இந்த ஆட்சி பற்றி பெரிய விவரிப்புகளைத் தராமல் குதிரைப் படை வீரர்களான இரு தமிழர்களின் ஆட்சி நிலவியமையை மட்டும் சுட்டிக்காட்டி முடிக்கின்றன (மகாவம்சம், XXI:11)

கூத்திகளின் ஆட்சியின் போது மட்டக்களப்பில் (சம்மாந்துறையில்) தனித்த ஆட்சி நிலை நிறுத்தப்படுகின்றது. மல்கம்பிட்டி பகுதியில் மண் எடுக்கப்பட்டு தனித்துவமான கோட்டை அமைத்ததான பதிவும் சிங்காரத்தோப்பு எனும் அட்டப்பள்ளம் பகுதியில் விருப்பு விடுதி அமைக்கப்பட்ட குறிப்பும் இது குறித்த ஆதாரங்களாகக் கொள்ளக் கூடியவை (வெல்லவூர்க் கோபால், 2011:64-65).

கி.மு. 205 களின் பின் எல்லாள மன்னனின் ஆட்சிப் பொறுப்பின் கீழ் ஒரு சமூகநிலைப் பட்ட ஆட்சி காணப்பட்டது. சமூகநிலை ஆட்சி என்பது உள்ளூர்க் குறுநிலத் தலைமைகளின் கீழ்ச் செய்யப்படும் ஒரு ஆட்சி முறையாகும். கி. மு 161களில் எல்லாள மன்னனின் வீழ்ச்சி வரை இந்த நிலையே தொடர்ந்தது. எல்லாள மன்னனின் ஆட்சிக்காலத்தில் மட்டக்களப்பு ஆலயங்கள் பலவற்றுக்கும் அவனால் மானியங்கள் வழங்கப்பட்டமைக்கான குறிப்புகளையும் காணமுடிகின்றது. சிங்கள விகாரங்களுக்கும் மானியங்கள் கொடுக்கப்பட்டமை பற்றி அறிகிறோம் (நடராசா வே.க 1969:73). எல்லாள மன்னனின் ஆட்சியில் பல்வேறு குறுநிலத் தமிழ் மன்னர்கள் காணப்பட்டனர் என்பதற்கு துட்டகைமுனுவின் படை எல்லாள மன்னனுடன் போரிடுவதற்கு முன்னரான காலப்பகுதியில் 31 தமிழ் மன்னர்களுடன் போரிட்டு அவர்களை வெற்றி கொண்டனர் எனும் குறிப்பினை மகாவம்சத்தில் (XXV: 75) காணலாம். மஹியங்கனை, அம்பதீர்த்தம், சர்ப்பக்கோட்டை, அந்தர சொர்ப்பம், நாழி சொர்ப்பம், கச்ச தீர்த்தம், கொத்த நகரம், நந்திக் கிராமம் என பல தமிழர் கோட்டைகளை வெற்றிகொள்ள வேண்டியிருந்ததாக கூறப்படுகின்றது (குணராசா க,1996:43) . எல்லாள மன்னனுடனான போரில் ஒரு வருட காலத்துக்கு நீடித்த துட்டகைமுனுவின் படை நகர்ந்த மார்க்கம் மட்டக்களப்பில் நிலவிய சிற்றரசர்களின் வியாபிப்பைக் காட்டுகிறது.

மட்டக்களப்புத் தமிழகம்

துட்டகைமுனுவின் படை நகர்ந்த மார்க்கம் (நன்றி - மட்டக்களப்புத் தமிழகம்)

பாலகம்பா(வட்டகாமினி) ஆட்சியை கைப்பற்றிய போது இடம்பெற்ற ஏழு பாண்டிய மன்னர்களின் படையெடுப்பு பற்றி மகாவம்சம் (மகாவம்சம், XXXVI: 54-56) குறிப்பிடுகின்றது. உருகுணையை ஆண்ட தீசன் என்ற சிற்றரசன் (மகாவம்சம், XXXVI:39-41) ஏழு தமிழ் மன்னர்களுடன் சேர்ந்து அனுராதபுரத்துக்கு எதிராக கிளர்ச்சி செய்ததாகக் கூறப்படுகிறது (நவநாயகமூர்த்தி. நா, 2002:56-57). இதில் இருவர் நாடு திரும்பிவிட (குணராசா க, 1996:48, தங்கேஸ்வரி, 2007:164) புலகந்தன் (கி.மு.103- 100) பாகியன் (கி.மு. 95 -100), பணயமாரகன் (கி.மு. 94-91), பிலயமாரகன்(கி.மு. 91-90), தத்திகன்(கி.மு. 90-89) என சுழற்சி முறையில் அனுராதபுரத்தை தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தனர்.

கி.மு.77 வரை மட்டக்களப்பு அனுராதபுர அரசின் கீழ் ஒரு சிற்றரசாகவே காணப்பட்டது (வெல்லவூர்க் கோபால், 2011:65). கி.மு. 82 முதல் மட்டக்களப்பின் ஆட்சிப் பொறுப்பில் சிறிகுலன் ஆண்டதாக மட்டக்களப்பு பூர்வ சரித்திரத்தில் தெரிவிக்கப்படுகின்றது(கமலநாதன் சா. இ, கமலநாதன் க, 2005:15). கி.மு. 82களில் கலிங்கப் படையெடுப்பு ஒன்று நிகழ்ந்த தாகவும் அதற்கு இரஞ்சலன் என்பவன் பொறுப்பேற்று வந்ததாகவும் மட்டக்களப்பு மான்மியம் குறிப்பிடுகின்றது (நடராஜா எப்.எக்ஸ்.சி, 1998:25). இந்தக் காலக்கணிப்புகள் சில முன்பின் முரண்பாடுகளைக் கொண்டவை என்பதையும் மனங்கொள்ள வேண்டும்.

கி.மு. 77 களின் பின் அனுராதபுரம் நாகர்களின் ஆட்சிக்குட்படுகிறது. அக்காலப் பகுதியில் கி.மு. 77-கி.மு. 50 வரை கல்லாட நாகன், கி.மு. 50- கி.மு. 39 வரை சோரநாகன் முதலானோர் அனுராதபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தனர் எனும் குறிப்புகளையும் காணமுடியும். நாகர்கள் பௌத்தர்களுடன் கலப்புற்று அதன் வழிவந்த நாக மன்னர்கள் பௌத்தத்தைக் கடைப்பிடித்தமை மற்றும் பேணி வளர்த்தமை கொண்டு அவர்களும் சிங்கள பௌத்தர்களாகப் பார்க்கப்பட்ட போக்கை மகாவம்சத்தின் கூற்றுகளில் இருந்து தெளியலாம் (மகாவம்சம் XXXII: 26-30). இவர்களின் தாய் வழி, தந்தை வழித் தொடர்புகள் இவர்களில் பலர் தமிழர்கள் என்பதை காட்டுகின்றது. பாலகம்பாவின் சகோதரர்களில் ஒருவராக கல்லாட நாகன் குறிப்பிடப்படுவதுடன் பாலகம்பாவுக்கு முன்னர் அனுதாரபுரத்தின் இவனது ஆட்சி நிகழ்ந்தமை பற்றியும் குறிப்பிடப்படுகின்றது. இதன் வழி நோக்குகையில் பௌத்தத்துடன் கலந்தவர்களாக நாக மன்னர்கள் பார்க்கப்பட்டார்கள். ஆயினும் மகாவம்சம் முதலான பாளி நூல்கள் பௌத்த மதத்தை ஆதரிக்காத மன்னர்களைத் தமிழர்கள் (Damale) என முத்திரையிட்டு காட்டுவதை கவனிக்க வேண்டும்.

இக்காலப்பகுதியில் இரஞ்சலன் மட்டக்களப்புக்கு வந்த செய்தியையும் இவன் சோரநாகனுடன் திறை செலுத்துதல் தொடர்பில் ஒப்பந்தம் செய்து கொண்டமையையும் மட்டக்களப்பு மான்மியம் (நடராஜா எப் .எக்ஸ்.சி, 1998:25) பதிவு செய்கிறது.

இரஞ்சலனின் தலைமையிலான கலிங்கப் படையெடுப்பு நாகர்களின் ஆட்சியை முடிவுக்கு கொண்டு வந்ததாகச் சில குறிப்புகள் காணப்பட்ட போதிலும் (வெல்லவூர்க் கோபால், 2016:64-65) இயக்கர்களின் ஆட்சியை விந்தினை, மஹியங்கனை, லக்கலை, கதிகாமம் ஆகிய பகுதிகளிலிருந்து அகற்றிய போராகவே இதனைக் கொள்ளவேண்டும். ஏனெனில், சிறிகுலனின் ஆட்சியின் பின் மட்டக்களப்பில் கி.மு. 38- கி.மு. 18 வரை வாகூரனும் பின்னர், கி. பி. 8 வரை பிரசன்ன சித்துவும் சிற்றரசர்களாக ஆட்சி செய்த குறிப்புகளைக் காணமுடிகிறது (நடராஜா எப் .எக்ஸ்.சி, 1998:26-27). இக்காலப்பகுதியில் நாகர்களுக்கும் கலிங்கர்களுக்கும்

இடையில் ஒன்றிணைந்த ஒற்றுமை காணப்பட்டமை இங்கு கவனிக்கப்பட வேண்டியதாகும். தொடர்ந்து இக்காலப்பகுதியில் புவனேகபாகு தன் மனைவி தம்பதி நல்லாள் எனும் சோழ இளவரசியுடன் வருகை தருகிறான். இது இடம்பெற்ற பகுதி தம்பிலுவில் ஆகும். இதன் பின்னான காலப்பகுதியில் தான் நாகர்கள் உடனான உறவில் விரிசல் ஏற்பட்டு வாகூரன், பிரசன்னசித்து ஆகியோருக்கு புவனேகபாகுவுடன் நட்பு ஏற்படுகிறது. திருச்சோழன், புவனேகபாகு, தம்பதி நல்லாள் ஆகியோர் சுப்ரமணியர் ஆலயத் திருப்பணிகளில் ஈடுபட்டதாக மட்டக்களப்பு மான்மியம் குறிப்பிடுகிறது. (நடராஜா எப்.எக்ஸ்.சி, 1998:28)

உன்னரசுகிரியின் ஆட்சிப் பொறுப்பு புவனேகபாகுவின் பின் அவனது மகன் மனுனேகபாகு விடம் (மேகவர்ணன்) செல்கிறது. இக் காலம் கி.பி. 48 என வரையறைப்படுத் தலாம். இக்காலப்பகுதியில் மட்டக்களப்பு பிரசன்னசத்துவின் மகன் தாசுதன் வசம் இருக்கிறது. இக்காலப்பகுதியில் தாசுதனுடன் இணைந்து திருக்கோயில் ஆலயத்தை மனுனேகபாகு புனரமைத்தான். சோழ நாட்டுச் சிற்பிகளை கொண்டு ஆலயம் புனரமைக்கப்பட்டு குடமுழுக்கு செய்யப்பட்ட செய்திகளை காணலாம் (வெல்லவூர்க் கோபால், 2011: 68).

ஏறக்குறைய இந்த காலப்பகுதியில் (கி.பி. 79 இல்) ஆடகமுனு எனும் மன்னன் அனுராதபுரத்தில் ஆட்சி புரிந்த குறிப்பை மகாவம்சம் தருகிறது (மகாவம்சம் XXXV: 1-8). ஆடகமுனுவுக்கு முன்னர் ஆட்சிப்பொறுப்பில் அனுலா தேவியை அரசியாக கொண்டு ஆட்சி செய்த செய்தவர்களாக சிவா, வட்டுகன், தீசன், நீலியா ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர் (மகாவம்சம் XXXIV: 27). இவர்களில் தமிழர்களும் அடங்குவதை மகாவம்சம் உறுதிப்படுத்தும். இதற்கு முற்பட்ட ஆட்சியில் சோரநாகன், இளநாகன், மாமல்ல நாகன் ஆகியோரின் ஆட்சி அனுராதபுரியில் நிகழ்கிறது.

கி.பி. முதலாம் நூற்றாண்டின் பிற்கூறில் (கி.பி. 78 இல்) ஆடக சுந்தரியின் வரவு பற்றி வரலாற்று ஆவணங்கள் தெரிவிக்கின்றன. ஆயினும் இதை ஒரு வரலாற்று இடைச் செருகலாக சில ஆய்வாளர்கள் காட்டுகின்றனர்(வெல்லவூர்க் கோபால், 2011:69) ஆடக சுந்தரி பாணமையில் வந்திறங்கியதாகவும், மட்டக்களப்பு, மாமாங்கம், தாந்தாமலை, திருக்கோயில் முதலான ஆலயங்களுடன் இவளது வரலாறு இணைத்துப் பேசப்படுகிறது. இவளது காலத்தை அனுராதபுரியின் தேத்தீசன் (கி. பி. 261-கி.பி. 275) மற்றும் மகாசேனனுடன் (கி.பி. 275 - 302 ) இணைத்து பேசப்படுகின்ற காலவேறுபாட்டையும் காணமுடிகின்றது (வெல்லவூர்க் கோபால், 2016:68). இந்த வேறுபாட்டை மட்டக்களப்பு மான்மியம் (நடராஜா எப்.எக்ஸ்.சி, 1998:39). “பூதப்படைப்புடையவள் நூற்றாண்டுகளுக்கு மேல் இருக்க வேண்டும்” என்று குறிப்பிடுகின்றது. ஆடகசுந்தரி மகாசேனனைத் திருமணம் செய்ததாக குறிப்பிடும் மட்டக்களப்பு மான்மியம் மகாசேனனை ஒரு வைதூலிய சைவனாகக் காட்டுகிறது (நடராஜா எப்.எக்ஸ்.சி, 1998:39). அதேவேளை மகாசேனன் பிராமணிய ஆலயங்களை அழித்து விகாரைகளை அமைத்தான் என்கின்ற கருத்தை மகாவம்சம் பதிவு செய்கிறது (மகாவம்சம் XXXVII:40-41). கிழக்கிலங்கையின் கோகர்ண விகாரை இவ்வாறு அமைக்கப்பட்டதே எனவும் எரகாவில் (தற்போதைய எருவில்), பிராமண காலந்தை(தற்போதைய பழுனுகம) ஆகிய இடங்களில் உள்ள ஆலயங்கள் இவனால் அழிக்கப்பட்டவை எனவும் வரலாற்று நூல்கள் குறிப்பிடுகின்றன (தனபாக்கியம் ஜி,2001:105-106). ஆடக சுந்தரியின் வரலாறு இவ்வாறு முரண்பட்ட பதிவுகளை தருகிறது.

உன்னரசுகிரிக்கு கி.பி. 270களில் சிங்க குமாரன் ஆட்சிக்கு வருகிறான். உகந்தை முருகன் ஆலயத்தில் மலைக்கோயிலையும் அடிவாரத்தில் உள்ள கோயில் ஒன்றையும் இவனே கட்டியதாக கூறப்படுகிறது (வெல்லவூர்க் கோபால், 2011:71). இக்காலப்பகுதியில் மட்டக்களப்பு பிரசேதுவின் ஆட்சிக்குட்பட்டது ( நடராஜா எப்.எக்ஸ்.சி, 1998:40) என்பது மட்டக்களப்பு மான்மியத்தின் குறிப்பாகும். மட்டக்களப்பில் பல்வேறு ஆலயத் திருப்பணிகள் நிகழ்ந்த காலமாக இக்காலப் பகுதியைக் கொள்ளமுடியும். இக்காலம் அனுராதபுர ஆட்சி அபயநாகனின் கீழக் கொண்டுவரப்பட்ட காலம். தனது அண்ணன் வீரதிஸ்ஸவுடன் முரண்பட்டு பல்லதிட்ட என்னுமிடத்தில் பதுங்கி வாழ்ந்தபின் தமிழர்களுடன் இணைந்து படை திரட்டி மீண்டுவந்து அனுராதபுரத்தை இவன் கைப்பற்றினான் என மகாவம்சம் (மகாவம்சம் XXXVI; 50) தெரிவிக்கின்றது. தமிழர் முதன்மை பெறுகின்ற இக்காலப் பகுதி ஆய்வாளர்கள் மேலும் ஆய்வுசெய்ய வேண்டியவொன்றாகும்.

மட்டக்களப்பு பிரசேதுவின் பின் அவனது மகன் தினகர சேனனின் (தின சேனன்) ஆட்சி பொறுப்பின் கீழ் வருகிறது. உன்னரசுகிரிக்கு கி.பி. 318 இல் சிங்க குமாரனின் மகன் சிறிசிங்கன் பொறுப்பாக்கப்படுகிறான். அதனைத் தொடர்ந்து வரும் காலங்களில் மட்டக்களப்பு முழுவதும் சிறிசிங்கனின் மகன் பானுவின் பொறுப்பிலும் பின்னர் அவனது மகன் அமரசேனனின் அதிகாரத்தின் கீழும் செல்கிறது. இக்காலப் பகுதியை மட்டக்களப்பு மான்மியத்தின் அடிப் படையில் (நடராஜா எப் .எக்ஸ்.சி, 1998:45) கி.பி. 364 எனக் கூறலாம்.

கி.பி. 382 களில் மட்டக்களப்பின் ஆட்சியிருக்கை குணசிங்கம் வசமாகிறது. இவன் அமரசேனனின் மகன். குணசிங்கனின் ஆட்சிக்காலம் மட்டக்களப்பில் முக்கிய வரலாற்று நிகழ்வான இளவரசி உலக நாச்சியின் வரவு இடம் பெற்ற காலம் ஆகும். இந்த வகையில் இது முக்கியத்துவம் மிக்கது. உலக நாச்சியுடன் அவளது தம்பி உலகநாதனும் வந்ததாக கூறப்படுகின்றது. இக்காலப்பகுதி கலிங்கத்தின் பௌத்தம் பெருவளர்ச்சி பெற்றிருந்த காலமாகும். உலகநாச்சி புத்தரின் தசனத்துடன் சிவலிங்கம் ஒன்றையும் கொண்டு வந்ததாகவும் கொள்ளப்படுகின்றது. இதற்கு சமானமாக சிங்கள வரலாற்று நூல்களில் (Culavamsa Part II, 1998 37:92) ஹேமமாலா எனும் இளவரசி கலிங்கத்தில் இருந்து இலங்கை வந்ததாகவும் அவளுடன் இளவரசன் தந்தாவும் வந்ததாகவும் அவர்கள் புத்தரின் தசனத்தைக் கொண்டு வந்ததாகவும் கூறப்படு கின்றது. ஆயினும் இந்தக் காலப்பகுதி கீர்த்தி ஸ்ரீ மேகவர்ணனின் காலப் பகுதியாக அங்கு காட்டப்படுகின்றது. இக்காலப் பகுதி கி.பி. 296 - 324 என்று கூறப்படுவது கொண்டு இக்காலப் பகுதி பற்றிய குழப்பத்தைத் திருத்தி அமைக்க வேண்டிய வரலாற்றுத் தேவை வரலாற்று ஆசிரியர்களுக்கு உள்ளது. இத்தகைய கால மாறுபாடுகள் தொடரும் ஒரு தெளிவின்மைக்குக் காரணமாவதுண்டு.

மௌரியப் பேரரசு தன் தேச எல்லையை அகலமாக்கிக் கொள்வதற்கான நீடித்த கொடூர போரின் பின் அசோகச் சக்கரவர்த்தி மனம் திருந்தி அமைதி வழியில் பௌத்தத்தில் சங்கமித்த போது கலிங்கத்திலும் ஈழத்திலும் பௌத்தம் அமைதிக்கான வழியாகப் பரவியிருந்தது. இதன்பின் கலிங்கத்தை மௌரியர்களிடமிருந்து காரவேலர் மீட்டெடுக்க பின்னர் குகன் வழி மரபினரான கங்கர்களின் ஆட்சி கலிங்கத்தில் நிலை கொள்கிறது. வரலாற்று எழுத்து போக்குகளின் வழியே நோக்கும்போது கலிங்கத்தை ஆண்ட கங்கர் குலப் பெண்ணாகவே உலகநாச்சியைக் கொள்ள வேண்டியுள்ளது. உலகநாச்சி புத்தரின் தசனம் மற்றும் சிவலிங்கம்

என்பவற்றை தன்னுடன் ஏககாலத்தில் கொண்டு வந்தது ஏன் என்பது கருத்தூன்றி நோக்கத் தக்கது. மேகவண்ணனிடம் தசனத்தைக் கையளித்த பின்னர் உலக நாச்சியின் விருப்பின் பேரில் மட்டக்களப்பின் சிற்றரசனாக குணசிங்கனிடம் அவளுக்கான வாழிடம் அல்லது சிற்றரசு பிரதேசம் ஒன்றை வழங்குமாறு கோரப்படுகின்றது. அவளுக்காக மண்முனையில் சிற்றரசு ஆக்கப்பட்டமையும் கோயிற்குளம் பகுதியில் சிவாலயம் இவளால் அமைக்கப்பட்டமை பற்றியும் கூறப்படுகின்றது. உலகநாச்சியுடன் கலிங்கத்திலிருந்து வந்த பெருமளவு குகன் குடியினர் புதுக்குடியிருப்பு, முனைக்காடு பகுதியில் குடியமர்த்தப்பட்டதாவும் சொல்லப்படு கின்றது. மேலும் கொக்கட்டிச்சோலையில் பழங்குடி வேடர்கள் வழிபட்டு வந்த சிவலிங்கம் ஒன்று கொக்கட்டிமர அடியில் கண்டெடுக்கப்பட்டதாகவும் உலகநாச்சியினால் இவ்விடத்தில் தான்தோன்றீச்சரம் அமைக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. இங்கு வாழ்ந்து வந்த வேடர்கள் இவர்களால் ஆக்கிரமிக்கப்பட்டனர் என்ற கருத்தியல் இங்கும் மேற்பட்டு நிற்பதையும் அவதானிக்க வேண்டும்.

கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் பின்னான காலம் தமிழ்நாட்டில் களப்பிரர் ஆட்சி நிகழ்ந்த காலம். இவர்களை பௌத்த ஆதரவாளர்கள் போலவே வரலாற்றாசிரியர்கள் விளக்குவார்.(நடராஜா வே.க. 1969:130) களப்பிரர் காலத்தில் பௌத்த விகாரைகளுக்கு அவர்கள் தானம் கொடுத்த கல்வெட்டுக்கள் உள்ளன என்பார் பரணவிதான (Nicholas C.W & Paranavithana S, 1961:123). இரண்டாம் மகாநாமன் (கி.பி. 412-434) பாண்டிய வம்சத் தினரான தமிழ் மனைவியை கொண்டிருந்தான். மகாநாமனின் பின் அவனது மகன் செங்கோடன் (சொத்திசேனன்) ஆட்சியை பெற்றான். ஆயினும் தொடர்ந்து அவனால் ஆட்சியை தக்க வைத்துக் கொள்ள முடியவில்லை (நடராஜா வே.க. 1969:112 ). இவ்வாறான குழப்ப நிலையில் பாண்டு தலைமையிலான பாண்டியர்கள் இலங்கை மீது படையெடுத்தனர். கி.பி. 436- 463 வரை அனுராதபுரத்தை அரசிருக்கையாக்கி பாண்டியர்கள் ஆண்டனர் (வெல்லவூர்க் கோபால்,2011:73). பாண்டுவின் பின் (கி.பி.429-434) அவன் மகன் பாரிந்தன்(பாரிததேவன்) (கி.பி.434 - 437), குட்டப்பரிந்தன்(கி.பி.437 - 452), திரிதரன் (கி.பி.452), தாத்தியன் (கி.பி.452 - 455), பித்தியன் (கி.பி.455 - 460) என இவ்வாறு தொடர்ந்து சென்றது அவ்வாட்சி. உருகுணை உட்பட மட்டக்களப்பு சிற்றரசு இவர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. பித்தியனை வென்று தொடர்ந்து தாதுசேனன் ஆட்சிக்கு வருகிறான் (தங்கேஸ்வரி,2007 :164-165 நடராஜா வே.க. 1969:131).

தாதுசேனனின் 18 வருட ஆட்சிக் காலத்தின் பின் அவனது மகன் காசியப்பன் அவனை மதிலில் வைத்துக் கட்டி கொலை செய்கிறான். இவனது காலம் கி.பி. 478-497 வரையாகும். காசியப்பனின் இளையமகன் முகலானன் (முகிலன்) தமிழ்நாட்டுக்குத் தப்பிச் சென்று மீண்டும் படை திரட்டி வந்து கி.பி. 512 வரை அனுராதபுரியை தலைநகராகக் கொண்டு ஆண்டதாக கூறப்படுகிறது (நடராஜா வே.க. 1969:136). பின் வந்த காலங்களில் அவன் மகன் குமாரதாசன் முதற் கொண்டு பலரது ஆட்சி பற்றிக் கூறப்படுகிறது. கவிதை ஈடுபாடு கொண்ட குமாரதாசன் மகாகவி காளிதாசனின் நண்பன் எனவும் காளிதாசனின் இலங்கையில் நிகழ்ந்த களங்கம் பொருந்தியதாகக் கூறப்படும் மரணமும் வரலாற்றில் பதிவாகியுள்ளது. (முத்துத்தம்பிப்பிள்ளை. ஆ, 1903:25) இக்காலப்பகுதியில் மைய ஆட்சியில் ஆட்சி மொழியாக சமஸ்கிருதம் இருந்தமையையும் கவனிக்கலாம். இக்காலப்பகுதியில் மட்டக்களப்பில் நலிவடைந்த பிராந்திய ஆட்சி நிகழ்ந்தமை பற்றியே அறியமுடிகின்றது.

இரண்டாம் அக்ர போதி காலத்தில் (608 - 618) சாளுக்கிய மன்னரான இரண்டாம் புலிகேசி வெற்றியீட்டிய பின் கலிங்க அரசன் இலங்கை வந்தான் (நடராஜா வே.க. 1969 ; Nicholas C.W & Paranavitana S, 1961:135-140) நலிவடைந்த கலிங்கர்களின் ஆட்சியை மீளக் கட்டமைத்து கி.பி. 633 வங்கலாடன் ஆட்சிப் பொறுப்புக்கு வருகிறான். இக்காலப்பகுதியிலும் அடிக்கடி தமிழ்நாட்டிலிருந்து படைகளை அனுராதபுரி வந்து போரிட்ட நிகழ்வுகளும் பதிவாகியுள்ளன. (வெல்லவூர்க் கோபால்,2011:74) இத்தகைய தொடர்புகளால் ஈழத்தில் பல தமிழர் குடியிருப்புகள் நிகழ்ந்தன.

மூன்றாம் அக்ரபோதியிடமிருந்து (கி.பி. 632) ஜெதிட்டதீசனும் தடாசிவனும் அரசை கைப்பற்றியபோது அக்ரபோதி இந்தியாவுக்கு தப்பியோடி தமிழ் படைகளுடன் மீள வந்து ஜேதிட்டனைத் தோற்கடித்தான். பின் தடாசிவன் இந்தியாவிலிருந்து தமிழ் வீரர்களைத் திரட்டி வந்து மீண்டும் அரசனானான். இது அனுராதபுர அரசியலில் மீண்டும் மீண்டும் நிகழ்ந்தது. இதனால் தமிழ் நாட்டுப் படை வீரர்களின் செல்வாக்கு அனுராதபுர இராச்சியத்தில் மேலோங்கியிருந்தது. இவ்வாறாக நாலாம் அக்ரபோதி காலத்தில் (கி.பி. 667- 683) படைத் தலைவனும் இரண்டு முக்கிய அமைச்சர்களும் தமிழர்களாக விளங்கினர்.

மூன்றாம் அக்ரபோதி காலத்தின் பின் பிரதான அமைச்சராக இருந்த பொத்தக்குட்டன் என்ற தமிழன் அதிகாரத்தைப் பெற்றான். பின் வரத்ததாடனை அரசனாக்கினான். பின் ஆட்சி அதிகாரம் பல்லவர்களுடைய ஆதரவுடன் மானவர்மனிடம் (கி.பி. 784-718 )வருகிறது (சூளவம்சம், பக். 109; 47- 66). இக்காலப்பகுதியில் மட்டக்களப்பு உட்பட்ட உருகுணை தனி அரசாக விளங்குகிறது. வங்கலாடனின் சந்ததியினர் கி.பி. 750 வரை மட்டக்களப்பை ஆண்டதற்கான குறிப்புகளை சில வரலாற்றாசிரியர்கள் காட்டுகின்றனர் (வெல்லவூர்க் கோபால்,2011:24) .

எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பொலநறுவை நிதிய அதிபர்களின் நிர்வகிப்பில் மட்டக்களப்பு உட்பட்டிருந்தமையைக்காணமுடிகின்றது. அதேவேளை நட்பு பூர்வமான நெருங்கிய தொடர்புகளும் காணப்படலாயின. மட்டக்களப்பு சிற்றரசுகளுக்கும் பொலநறுவைக்கும் இடையில் திருமணத் தொடர்புகள் நிகழ்ந்தமை பற்றி மட்டக்களப்பு மான்மியத்தில் குறிப்புகள் காணப்படுகின்றன. ஆயினும் இக்குறிப்புகளை வேறு ஆதாரங்கள் கொண்டு உறுதிப்படுத்த முடியவில்லை.

கி.பி. 833களில் ஆறாம் அக்ரபோதியின் மகன் மித்தவேலசேனனின் ஆட்சி நடைபெறுகிறது. இதன்போது பாண்டிய படையெடுப்பு நிகழ்கிறது. சேனன் பாண்டியரோடு நல்லுறவு பேணி இங்கிருந்து எடுத்துச் சென்ற பொருட்களை மீட்டு வருகிறான். பின் ஐந்தாம் காசியப்பன் காலத்தில் (கி.பி. 913இல்) பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து பாண்டிய மன்னரை கொன்று அவரது மகனை பாண்டிய நாட்டுக்கு அரசனாகியதாகக் கூறப்படும் கதையும் உண்டு (முத்துத்தம்பிப்பிள்ளை. ஆ, 1903:27).

ஐந்தாம் மகிந்தனின் ஆட்சிக்காலத்தின் பின் (கி.பி. 981) இலங்கையில் சோழர்களின் படையெடுப்பு நிகழ்கிறது. கி.பி. 983களில் சோழர்களின் ஆதிக்கத்தின் கீழ் அனுராதபுரம் உட்பட வடக்கு கிழக்கு வருகிறது. சோழர் ஆட்சிக்காலத்தில் சோழமண்டலம் இலங்கை உள்ளிட்ட பெரும் இராட்சியமாகக் காணப்பட்டது. முதலாம் இராஜராஜன் எனப்படும் அருள்மொழித்தேவனின் ஆட்சியின் கீழ் இது அமைந்தது (நடராஜா வே, க,1969:7). இக்காலப் பகுதியில் மட்டக்களப்பின் சிற்றரசனாக தர்மசிங்கன் (இவன் கலிங்கன்) ஆட்சி செய்கிறான்.

ஈழத்தை உள்ளடக்கிய சோழமண்டலம் மும்முடிச் சோழ மண்டலம் என போற்றப்பட்ட இப்பெரும் ஆட்சிக்காலத்தில் வேளைக்காரர் எனப்படும் வன்னியர் குடியேற்றம் இலங்கையில் நடைபெற்றது. மட்டக்களப்பிலும் வேள வன்னியர்களின் குடியேற்றம் நடைபெற்றமை பற்றியும் 1976 தமிழாராய்ச்சி மாநாட்டு கட்டுரையில் குறிப்பு உள்ளது (மட்டக்களப்பு மாநாடு நினைவுமலர், 1976:7).

ஆயினும் கி.மு.மூன்றாம் நூற்றாண்டுக்கு முந்தியதாகவே கதிர்காமம் முதல் கல்லோயாப் பள்ளத்தாக்கு வரையான பகுதிகளில் சத்திரிய வன்னியர்களின் ஆட்சி நடைபெற்றமை பற்றிக் குறிப்பிடப்படுகின்றது. சோழராட்சிக் காலத்தில் மட்டக்களப்பு ஆட்சிப் பிரதிநிதி கட்ட காமத்தில் இருந்தமை பற்றியும் ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் வரை கட்டகாமம் வன்னியர் வீடு வன்னியர்களின் சுற்றுலா வாசஸ்தலமாகவும் இருந்தமையை வெல்லவூர்க் கோபால் சுட்டிக்காட்டுவார். (வெல்லவூர்க் கோபால், 2011:36)

இராஜராஜனின் பின் அவனது மகன் இராஜேந்திரன் (கி.பி. 1012-1044), இரண்டாம் குணசேகரன்(கி.பி. 1044- 1053), இரண்டாம் இராஜேந்திரன் (கி.பி.1053-1055) ஆகியோர் மண்டலத்தை ஆட்சி செய்கின்றனர். இக்காலப்பகுதியில் உருகுணை பகுதியில் கதிர்காமத்தைத் தலைநகராகக்கொண்டு சிற்றரசர்களாக விக்கிரமபாகு, விக்கிரமபாண்டு, பராக்கிரமபாண்டு ஆகியோரின் ஆட்சி காணப்படுகிறது. பாண்டியர்களுக்கு சார்பான இச்சிற்றரசுகளின் பாதுகாப்பில் பாண்டியர் தங்கள் மணிமுடிகளை உருகுணையில் மறைத்து வைத்த சங்கதியை அறிந்து கி.பி. 1017இல் உருகுணைக்குப் படை அனுப்பி சோழர் மணிமுடி கொண்ட வரலாறுகளைக் காணுகின்றோம். சோழர் தம் ஆட்சியில் இருக்கையாகப் பொலநறுவையை கொண்டிருந்தனர்.

மட்டக்களப்பில் குணசிங்கனின் (கி.பி. 978) ஆட்சியின் பின் அவனது மகன் கதிர்சுதன் (கி.பி. 1013) ஆட்சிக்கு வருகிறான். சோழப் பேரரசின் ஆட்சியின் கீழ் ஆட்சி பிரதிநிதி நிர்வகிக்க சிற்றரசு முறையில் மட்டக்களப்பின் நிர்வாகம் கொண்டு செல்லப்படுகிறது. இந்த காலப்பகுதியில் மட்டக்களப்பு ஏழு நிர்வாகப் பிரிவுகள் ஆக்கப்பட்டிருந்தது

(வெல்லவூர்க் கோபால், 2016:76).

1. கதிர்காமம் - கட்டகாமன்
   (இவன் பெயரில் கதிர்காமத்திற்கு அருகில் கட்டகாமம் எனும் ஊர் உள்ளது)
2. அக்கரைப்பற்று - அகுராகு
3. கரவாகு- நீலாவண சேனன்
4. மண்முனை தெற்கு - புலியமாறன்
5. மண்முனை வடக்கு- வவுணசிங்கன்
6. ஏறாவூர் - சத்துவண்டன்
7. வாகரை - கொட்டக்கச்சன்

இந்த காலப்பகுதியில் (கி.பி. 1013 அளவில்) மண்முனை, உன்னரசுகிரி உள்ளிட்ட முழு மட்டக்களப்புக்கு கதிர்சுதன் சிற்றரசை ஏற்கிறான் (மட்டக்களப்பு மான்மியம், 1998: 53). இக்காலப்பகுதி மட்டக்களப்பு பல்வேறு துறைகளில் மேம்பாடு கண்டமை பற்றிய குறிப்புகளை சரித்திர ஏடுகளில் காண்கிறோம். தமிழ்க் கலைகள் அறிமுகம் செய்யப்பட்டு மேம்பட்டமை பற்றியும் ஆலயங்களில் சிற்பங்கள், ஓவியங்கள் பொலிவு பெற்றமை குறித்தும் அறிய முடிகிறது. கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரர் ஆலயம், திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயம் என்பன புனரமைக்கப்பட்டன. வாணிபத் தலங்களாகவும் சிறு துறைமுகங்களாகவும்

வாழைச்சேனை, மட்டக்களப்பு, கல்முனை, திருக்கோயில், கோமாரி என்பன விருத்தி பெற்றன (வெல்லவூர்க் கோபால்,2016:75 ).

கி.பி. 1017-1029 வரை சோழப் பேரரசின் முழு ஆதிக்கத்தின் கீழ் இலங்கை காணப் பட்டது. கதிர்சுதனுடைய ஆட்சிக் காலத்தில் இந்தியாவில் முகமது சுசினியின் நிர்ப்பந்தங்களால் தென்னிந்தியாவிலிருந்து வெளியேறிய குகக் குடியைச் சேர்ந்தவர்கள் கல்லேறுமுனை (தற்போதைய கல்முனை) துறையில் இறங்கியதாகக் கூறப்படுகின்றது.

கதிர்சுதனைத் தொடர்ந்து மதிசுதனுடைய ஆட்சி மட்டக்களப்பில் நிலைபெறுகிறது. இவன் சோழராட்சிக்கு உட்பட்டு இணக்கமாக ஆட்சி புரிந்ததாக அறியமுடிகிறது. சோழ பிரதிநிதியின் மகளையே இவன் திருமணம் செய்ததாகவும் கூறப்படுகிறது. நாகர் இயக்கர்களையும் தன் அரசின் பிரதிநிதிகளாக்கி பதவிகளை வழங்கியதுடன் பத்திரகாளி, முருகன் வழிபாடுகள் மேலோங்கவும் செய்தான். இவனது காலத்தை கி.பி. 1030 எனக்கொள்ளலாம். மண்டு நாகன் கட்டிய மண்டூர் காளி கோவிலையும் கோயில் போரதீவு முருகையன் கோயிலையும் இவனே புனரமைத்தான். இவனது காலத்தில் தொண்டைநாட்டு சிப்பிகளை கொண்டு போரதீவு சித்திரவேலாயுதர் கோயில் புனரமைப்புச் செய்யப்பட்டு குடமுழுக்கு செய்யப்பட்டதாகவும் குறிப்புகள் காணப்படுகின்றன.

மதிசுதனின் பின் மட்டக்களப்பின் ஆட்சிப் பொறுப்பை அவனது ஒரே மகனான நாதன் பெறுகின்றான். இவன் தாய்வழியில் சோழர் குலப் பெண்ணைத் திருமணம் செய்கிறான். கோயில் போரதீவுக்கு அருகாமையில் உள்ள நாதனை எனும் அணை இவன் பெயரில் அழைக்கப்படுவதையும் நாதனை வெளிகண்டம் முதலிய பெயரீடுகளையும் இங்கு நோக்கலாம். சோழர் ஆட்சிக்காலத்தில் குறிப்பாக குலசேகரனின் காலத்திலே இலங்கையிலும் வைணவ சமயம் முக்கியப் படுத்தப்பட்டு முன்னெடுக்கப்பட்டது.

நாதனின் ஆட்சியின் பின் அவனது மகன் தினசிங்கன் ஆட்சிப் பொறுப்புக்கு வருகிறான். இவன் சோழ நாட்டரசன் வீரசோழனின் மகளை திருமணம் செய்தான் என்பதை ஆதாரங்கள் (வெல்லவூர்க் கோபால்,2011:78) உறுதி செய்கின்றன. இதன் கால கணிப்பில் மாறுபாடுகளையும் நோக்க முடிகிறது. ஈழத்தில் சோழர் ஆட்சி முடிவுற்ற காலம் கி.பி. 1070 என சில கணிப்புகள் தெரிவிக்கின்றன. ஆயினும் சிங்கள வரலாற்று ஏடுகளில் கி.பி. 1055 இல் மன்னன் விஜயபாகு, சோழனிடம் இருந்து இலங்கையை மீட்டான் எனும் பதிவை காண முடியும். சிங்கள வரலாற்று நூல்களின் படி இவன் உருகுணையில் முடிசூடினான். ஆயினும் விஜய ராஜபுரம் எனும் சிறப்பு பெயருடன் பொலநறுவையை இராசதானியாக்கி மட்டக்களப்பு உட்பட பரவலான ஆட்சியை பாண்டியர் கலிங்கர் ஆகியோரின் உதவியுடன் நிலைநிறுத்திக் கொண்டதாக அறியமுடிகிறது. விஜயபாகுவின் ஆட்சிக்காலம் முதற்கொண்டு கலிங்கமாகன் காலம் (கி.பி. 1215) வரையான 145 வருடங்கள் மட்டக்களப்பில் தனித்துவமான தனி ஆட்சி நடைபெற்ற குறிப்புகள் காணப்படவில்லை. (வெல்லவூர்க் கோபால், 2011:82) ஆயினும் கோமரங்கடைவலையில் 2021இல் கண்டுபிடிக்கப்பட்ட புதிய கல்வெட்டு சோழர்களுடைய அதிகாரம் இலங்கையில் கி.பி. 1070க்குப் பின்னும் உறுதி மிக்கதாக இருந்தமையே காட்டுகிறது. (புஸ்பரெட்ணம்.ப, 2021)காலக்கணிப்பில் உள்ள மற்றொரு குழப்பநிலை சில ஆய்வாளர்களின் குறிப்புகளிலிருந்து கணிக்கும்போது மட்டக்களப்பில் தினசிங்கனின் ஆட்சிக்காலம் கி.பி. 1118 இல் தொடங்குவதாகும். இக்காலம் முதலாம் விஜயபாகுவின் ஆட்சிக் காலத்துக்குப் பின்னான விக்கிரமபாகுவின் ஆட்சிக்காலத்தை உள்ளடக்குகிறது.

சோழர் ஆதரவு பெற்ற தினசிங்கனின் ஆட்சி மட்டக்களப்பில் விஜயபாகுவுடன் இணைந்ததாக நடைபெற்றிருக்க வாய்ப்பில்லை என்பது வரலாற்றாளர்கள் பலரதும் முடிவு.

மட்டக்களப்பு மான்மியம் உறுதியற்ற தின சிங்கனின் ஆட்சிக்காலம் குறித்த குறிப்புகளை பதிவு செய்கிறது (நடராசா எவ்.எக்ஸ்.சி, 1998: 57-59.) தினசிங்கன் சோழப் பிரதிநிதியாக விளங்கிய அணிகங்கன் மூலம் கலிங்க தலைவர்களுக்கு அழுத்தம் கொடுக்கத் திட்டமிட்டதான குறிப்பும் முக்கியம் கொடுத்து நோக்க வேண்டிய ஒன்றாகும். கோமரங்கடவல கல்வெட்டின் குறிப்புகளின் படி கி.பி. 1215இல் ஈழமண்டலமான மும்மணிச் சோழ அரசுப் பிரதிநிதியான குலோத்துங்க சோழக் காலிங்கராஜன் என்பவன் கலிங்க மாகனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தான் என்ற செய்தியைக் காண்கிறோம். கலிங்கர்களுக்கு பாண்டியர்களுடனும் சோழர்களுடனும் காணப்பட்ட தொடர்புகள் மேலும் பகுப்பாய்வு செய்யப்பட வேண்டிய ஒன்றாகக் காணப்படுகின்றது.

விஜயபாகு, கலிங்கர் பாண்டியர்களுடன் நெருக்கமான தொடர்புகளை பேணி வந்தான். இதனால் சைவ சமயத்துக்கு ஆதரவு கொண்ட ஆட்சிமுறையே இங்கு நிலவி வந்தது. குருகுலச் சூரியத்தரையன் என்னும் தமிழர் விஜயபாகுவின் படைத் தலைவராக விளங்கிய குறிப்புகளையும் காணமுடியும். விஜயபாகுவைத் தொடர்ந்து விக்ரமபாகுவின் ஆட்சிக் காலமும் அதனை தொடர்ந்து வந்த கஜபாகுவின் ஆட்சிக்காலமும் கலிங்க பாண்டிய செல்வாக்கு மிக்க காலமாகவே காணப்பட்டது (வெல்லவூர்க் கோபால், 2011:85). இந்து மதத்துக்கு பெருமதிப்பு அளித்ததுடன் மன்னர்களின் மானிய உதவிகளும் கிடைக்கப் பெற்றன.

கி.பி. 1153 களில் பொலநறுவையை இராசதானியாகக் கொண்டு ஆட்சிப்பீடமேறிய மகா பராக்கிரமபாகு இலங்கையில் தலைசிறந்த மன்னராக விளங்கியமை வரலாற்று ஏடுகளில் விவரிக்கப்படுகின்றன. இவனது படைகளில் தளபதியாக விளங்கியவனாக ஆதித்தன் எனும் தமிழன் வரலாறுகளில் பேசப்படுகின்றான். இவன் தென்னிந்தியாவுக்கு படைகளை அனுப்பியதாக சூளாவம்சத்தில் குறிப்பிடப்படுகின்றது. மகா பராக்கிரமபாகுவுடன் இணைத்துக் குறிப்பிடப்படும் மற்றொரு விடயம் அவனால் இராமேஸ்வரம் ஆலயத்தின் பகுதி கட்டப்பட்டமை பற்றிய குறிப்புகளாகும். மகா பராக்கிரமபாகு தலைசிறந்த மன்னனாக எமது வரலாறு கண்டு கொண்டுள்ளமை வெளிப்படையாகும். பாண்டிய கலிங்கத் தொடர்புகளில் வெளிப்படையாக இவற்றை நோக்கலாம்.

கி.பி. 1186 களில் பராக்கிரமபாகுவின் மரணத்துக்குப் பின் இலங்கையில் மைய ஆட்சி நிலையற்ற தன்மை கொண்டதாக அமைகிறது. அதன்பின் இரண்டாம் விஜயபாகு முதல் மாகோன் வரைப் பலரது ஆட்சி நடைபெற்றதாக அறிகிறோம். இவர்களில் பலர் கலிங்க வம்சத்தை சேர்ந்தவர்களாக அறியப்படுகின்றனர். இவர்களில் கலிங்கரான நிசங்கமல்லன் முக்கிய மிக்கவன். இத்தகைய கலிங்கத் தொடர்புகள் மட்டக்களப்பில் கலிங்க தொடர்புகொண்ட சிற்றரசுகளை நிறுவிக் கொண்டன. இந்தவகையிலாக சுகத்திரன், தர்மசிங்கன் ஆகிய மட்டக்களப்பின் பிரதேச அரசுகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பொலநறுவையின் ஆட்சி பிரதிநிதிகளின் மேற்பார்வையின் கீழ் இவை அமைந்திருக்கும் வாய்ப்புகள் பற்றியும் ஏற்றுக்கொள்ளமுடியும்.

கி.பி. 1215 இல் மாகோனின் ஆட்சி இலங்கையின் பெரும்பகுதியை உள்ளடக்கியதாக பொலநறுவையில் அமைந்தது. சூளவம்சத்தின் கருத்துப்படி 24 ஆயிரம் படைவீரர்களுடன் மாகோன் இலங்கைக்கு படையெடுத்ததாகக் கூறப்படுகிறது.

கலிங்க மாகோனின் முடிசூட்டு விழா குறித்த கோமரங்கடவலயில் கண்டுபிடிக்கப்பட்ட புதிய கல்வெட்டு (2021) சோழர் ஆட்சிக் காலம் பற்றி முன்னர் சொல்லப்பட்ட பல கருத்துக் களை மீள்வாசிப்புக்கு உட்படுத்தும் வகையில் காணப்படுகிறது. கல்வெட்டின் படி கி.பி. 1215 ஆம் வருடம் குலோத்துங்க சோழனின் ஈழ மண்டலமான மும்முடிச் சோழ மண்டலத்தின் அரசுப் பிரதிநிதியான குலோத்துங்க சோழக் காலிங்கராயன் என்பவன் கங்கராஜ காலிங்க விஜயபாகுக்கு( கலிங்க மாகனுக்கு) வீராபிசேகம் செய்வித்தான் என்கின்ற செய்தி கிடைக்கிறது. கலிங்கமாகனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்த பின் கல்வெட்டு காணப்பட்ட இடத்திலுள்ள கோமரங்கடவலைச் சிவன் கோயிலில் வழிபாடு செய்ததாகவும் அருகில் சக்திக்கென கோயில் எழுப்பிய செய்திகளையும் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. (புஸ்பரெட்னம். ப, 2021)

மும்முடி சோழர்களின் ஆட்சிக்காலத்தில் சைவக் கோயில்கள் சூறையாடப்பட்டமை குறித்தும் சோழர்கள் தமிழ் சைவ மதத்தை ஆதரிக்காமல் வைணவத்தை ஆதரித்தமை பற்றியும் ஈழத்தின் வரலாற்று குறிப்புகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் செய்திகள் குறித்து மீளச் சிந்திக்க வேண்டியுள்ளது.

மாகோனைக் கலிங்க மன்னனாக மட்டக்களப்பு மான்மியம் எடுத்துக்கூறுகிறது. கலிங்கரான மனுவரதனின் புதல்வனாகவும் இவன் மனைவி அகமதி எனவும் மட்டக்களப்பு மான்மியம் விபரிக்கும். மாகோனின் ஆட்சிக் காலத்தில் வெருகல் முதல் கதிர்காமம் வரையான மட்டக்களப்பு பிரதேசம் ஏழு வன்னியைகளாக (நாடுகாடுப் பற்று, பாணமைப் பற்று, அக்கரைப்பற்று, சம்மாந்துறை பற்று, கரவாகுப் பற்று, மண்முனைப்பற்று) பிரித்து ஏழு குடி முறைகளை உருவாக்கி ஆட்சி செலுத்தப்பட்டது (வெல்லவூர்க் கோபால், 2016:11).

கலிங்கமாகோன், விஜயபாகு என்னும் சிறப்புப் பெயர் கொண்டு அழைக்கப்பட்டான் என்பது பற்றித் திருக்கோயில் சாசனங்களின் குறிப்புகளில் இருந்து அறிய முடிகின்றது (வெல்லவூர்க் கோபால், 2016:12) வேறு குறிப்புகளில் இவன் விஜயபாகு என அழைக்கப்பட்ட குளக்கோட்டனுடன் இணைந்து பல்வேறு பணிகளில் ஈடுபட்டதாக அறியமுடிகின்றது (தங்கேஸ்வரி க,1995:57). குளக்கோட்டன் பற்றிய முழுமையான விவரிப்புகளிலிருந்து (தங்கேஸ்வரி க,1995:61, தங்கேஸ்வரி க,1997:45-46) அவன் சோழகங்க வம்சத்தை சேர்ந்தவன் என்பதையும் கி.பி. 1255 வரை மாகோனின் ஆட்சி நிகழ்ந்தமை பற்றியும் உறுதிபடக் கூறமுடியும்.

மாகோனுக்கு எதிராக தொடர்ச்சியாக சிங்கள மன்னர்களிடம் இருந்து எதிர்ப்பு காணப்பட்டது. பாண்டியர்களின் உதவியுடன் பலமுறை படையெடுப்புக்கள் மேற்கொள்ளப் பட்டன. ஆயினும் கி.மு. 1256 இல் மூன்றாம் பராக்கிரமபாகு பெரும்படையுடன் எதிர்கொண்டு மாகோனை ஆட்சியிலிருந்து அகற்றினான் (Sivaretnam. C,1968:39-40).

கி.பி. 1255 களில் மாகோனின் ஆட்சி வீழ்ச்சியுற்ற பின்னர் மூன்றாம் விஜயபாகுவும் மூன்றாம் பராக்கிரமபாகுவும் தம்பதெனியாவை தமது ஆட்சி இருக்கையாக்கினர். இக்காலப் பகுதியில் பல்வேறு பாண்டியப் படையெடுப்புக்கள் நிகழ்ந்தமை குறித்த குறிப்புகளை அவதானிக்க முடிகிறது (தங்கேஸ்வரி க,1995:140-145). 1284 இல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் பொலநறுவையைக் கைப்பற்றி கி.பி. 1287இல் மீண்டும் மூன்றாம் பராக்கிரமபாகு வுக்கு அதனை கையளித்த குறிப்புகளை சேரன் மாதேவி கல்வெட்டு முதலானவற்றை ஆதாரமாகக் காட்டி ஆய்வாளர்கள் குறிப்பிடுவர் (வெல்லவூர்க் கோபால், 2011:89).

கி.பி. 1301 களில் மீண்டும் விஜயபாகு ஆட்சியை கைப்பற்றினான். கி.பி. 1303 இல் புவனேகபாகுவின் ஆட்சி யாப்பகூவவில் நிறுவப்படுகிறது. கி.பி. 1314இல் மீண்டும் நாலாம் பராக்கிரமபாகு பொலன்னறுவையை இராசதானி ஆக்குகிறான் (Codrington H. W, 1994:78-82). இதில் சில காலமாறுபாடுகள் இங்கும் பதிவாவதை அவதானிக்கலாம் (மெண்டிஸ் .ஜி.ஷி, 1933:125-131).

இக்காலப்பகுதிகளில் மட்டக்களப்பின் மீது மைய ஆட்சி தன் அதிகாரத்தைச் செலுத்த முடியாத போக்கைக் காணமுடியும். இக்காலப்பகுதியில் பரதசுந்தரன், இராசசுந்தரன், யாக சேனன், குகச்சந்திரன் ஆகிய சிற்றரசுகள் மட்டக்களப்பை ஆட்சி புரிந்தமை பற்றி அறிய முடிகின்றது (வெல்லவூர்க் கோபால்,2011:90). வரலாற்று நூல்களுக்கிடையில் சில காலமாறுபாடுகளைக் காண முடிகின்ற போதும் கி.பி. பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நான்கு திக்கதிபர்களைக் கொண்டு கண்டி அரசின் கீழான ஆட்சி முறைமை மட்டக்களப்பில் காணப்பட்டிருக்க வேண்டும்.

ஆறாம் பராக்கிரமபாகுவின் காலப்பகுதியில் கரையார்களுக்கும் முக்குகர்களுக்கும் இடையிலான கரவா சண்டை இடம்பெற்ற குறிப்புகளை காண முடிகிறது. சோழர்களினதும் பாண்டியர்களினதும் பங்குபற்றுதல் இந்த சண்டையில் முக்கியத்துவம் பெற்றிருந்தது. 1473 செம்பக பாண்டியனுடைய ஆட்சியை இதனுடன் தொடர்புபடுத்திப் பார்க்க முடியும் (Codrington H. W, 1994:90-91; Sivaretnam C,1968:37). மட்டக்களப்பு முக்குகர்களின் மேலாண்மை அதிகம் காணப்பட்ட பகுதியாகவே காணப்பட்டு வந்தது.

கி.பி. பதினாறாம் நூற்றாண்டுகளின் முதற்கூறில் மாருதசேனன் (பங்குடாவெளிக் கண்ணாப்போடி) தனக்கு சார்பான திக்கதிபர்களின் துணைகொண்டு மட்டக்களப்பை தனியரசாக நிர்வகித்தான். இவனுக்கும் போர்த்துக்கேயருக்குமிடையில் தொடர்புகள் இருந்தமை பற்றி அறியப்படுகின்றது. கண்டி அரசிலிருந்து விடுபடுவதில் அவனின் ஆர்வம் காணப்பட்டது. போர்த்துக்கேயத் தளபதிக்கு கோயம்பரா பாதிரியார் எழுதிய கடிதம் ஒன்றில் மட்டக்களப்பு மன்னன் கிறிஸ்தவ மதத்திற்கு மதம் மாறவிருப்பதாகக் குறிப்பிடப் படுகின்றது. இவ்வாறு மதம் மாறியதாகக் கருதப்படும் மட்டக்களப்பு மன்னன், மாருதசேனனாகத் தான் இருக்கவேண்டும் எனக் கருதப்படுகின்றது (சிவராம். த, 1993:19-20). மாருதசேனனின் இரண்டாவது மணவினை குறித்தும் அவன்மீது வரலாற்றில் அதிருப்தி பதிவுசெய்யப்படுகின்றது. திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலய நிருவாகப் பொறுப்பிலிருந்தும் அகற்றப்பட்டு அவன் மகன் எதிர்மன்னசிங்கனுக்கு பதவி வழங்கப்படுகின்றது. மாருதசேனனுக்குப் பின் அவனது மகன் எதிர்மன்னசிங்கம் கி.பி. 1540 களில் மட்டக்களப்பின் ஆட்சி பொறுப்பை ஏற்றான். எதிர்மன்னசிங்கம் காலத்தில் மட்டக்களப்பானது உன்னரசுகிரி, மட்டக்களப்பு, போர்முனை நாடு, மண்முனை, ஏறாவூர் ஆகிய ஐந்து நிர்வாகப் பிரிவுகளைக் கொண்டு காணப்பட்டது.

எதிர்மன்னசிங்கனின் மறைவுக்குப்பின் (கி.பி. 1585இல்) மட்டக்களப்பின் ஆதிக்கம் கண்டி இராச்சியத்தின் கீழ் செல்கிறது. இக்காலப்பகுதியில் போர்த்துக்கேயர் கோட்டை இராட்சியத்தில் காலூன்றிய நிலையில் தளபதியான அசிவீற்றோ கிழக்கிலங்கையைக் கைப் பற்றும் திட்டத்தை முன்வைக்கின்றான். போர்த்துக்கல் இதற்கு உடனடியாக உடன்படவில்லை (Chandra Richard De Silva, 1967: 185-192). இக்காலப்பகுதியில் கண்டி மன்னனின் நேரடி கட்டுப்பாட்டின் கீழ் மட்டக்களப்பு ஏழு வன்னிமைப் பிரிவுகளாக ஆளப்படுகிறது.

காலத்துக்குக் காலம் ஆட்சி செய்த அரசுகளுடன் இணைந்தும் தவிர்த்தும் முதன்மை கொண்டும் சில காலங்களில் குறைந்த ஆதிக்கங்களோடும் தனித்துவமான சிற்றரசு ஆட்சி யொன்று பண்டைய மட்டக்களப்பில் நடைபெற்றது. தனித்தனி சிற்றரசர்களாக ஆட்சி செய்தமை மட்டுமன்றி சிற்றரசுகளுக்கிடையே ஆதிக்க போர் நிகழ்ந்தமை பற்றியும் காணமுடியுகின்றது.

1600களில் மட்டக்களப்பு வன்னியர் கண்டியுடன் தொடர்புகளைக் கொண்டிருந்த அதேவேளை போர்த்துக்கேயருடனும் தொடர்புகளைக் கொண்டிருந்தனர். இத்தகைய தனித்தியங்கிய நிலை 1803வரைத் தொடர்ந்தது (சிவராம் . த, 1993:23)

மட்டக்களப்பு வாவியினது பழுகாமம் ஆற்றின் வியாபாரத் தீர்வைகளையும் வரிகளையும் தனதாக்கிக் கொள்வதில் பழுகாமம் சிற்றரசன் செல்லப் பண்டாரம் உரிமை கோரினான். இதனால் போரதீவு சிற்றரசன் தர்ம சங்கரனுடன் (தர்ம சங்கரியன்) செல்லப் பண்டாரத்துக்கு சண்டை ஏற்பட்டது. 1611களில் கண்டி மன்னன் செனரத்தின் அவையில் இதற்கான விசாரணை நிகழ்கிறது. விசாரணையில் கொட்டியாரம் சிற்றரசன் இடலி, யாழ்ப்பாணம்– புத்தளம் ஆட்சிப் பிரதிநிதிகள், மட்டக்களப்பு சிற்றரசன் குமார பண்டாரம், பாணமை சிற்றரசன் சமரவாகு ஆகியோரும் கலந்து கொண்டதாகவும் விசாரணையின் பின் பழுகாமம், போரதீவு சிற்றரசர்களுக்கு உடல் ரீதியான தண்டனை வழங்கப்பட்டு சண்டை யிடுவதைத் தவிர்க்க உத்தவிட்டதாகவும் S.O கனகரெட்னம் (Monograph of the Batticaloa District of the Eastern Province, Ceylon,1921:11) குறிப்பிடுவார். கி.பி. 1614 களில் பழுகாமம் சிற்றரசனுடன் நடைபெற்ற சண்டையில் மட்டக்களப்பு சிற்றரசன் குமார பண்டாரம் தோல்வியை கண்டதும் மட்டக்களப்பும் (சம்மாந்துறை) பழுகாமத்தின் ஆட்சியின் கீழ் வருகிறது (வெல்லவூர்க் கோபால், 2016:15). இது குறித்து பிலிப்பஸ் பல்டியஸ் (Philippus Baldaeus, 1958:54–55) தனது குறிப்புகளில் மட்டக்களப்பு சிற்றரசன் சூழ்ச்சியால் கொல்லப்பட்டான் என்ற குறிப்பை பதிவு செய்கிறார். 1602களில் இஸ்பில் பேர்கனின் வருகையின் போது போரதீவில் தர்ம சங்கரதன் சிற்றரசு செய்தமை பற்றி பேர்குசன் குறிப்பிடுவார் (Journal of RAS Ceylon-1889, Vol:IX, No.38).

கி.பி. 1622 களில் கிழக்கிலங்கை போர்த்துக்கேயர்களின் ஆதிக்கத்துக்குட்படுகிறது. இந்தக் காலப்பகுதியில் இலங்கையில் ஒல்லாந்தர்களின் கால் பதிப்பு நிகழ்ந்து பல பகுதிகள் அவர்களின் வசம் வந்து விட்டது. போர்த்துக்கீசியர்களின் நிர்வாகம் காணப்பட்ட போதிலும் சிற்றரசர்கள் தங்கள் பிரதேசங்களில் சுயாதிக்கம் கொண்டவர்களாகவே காணப்பட்டனர். இதற்கு எடுத்துக்காட்டாக கி.பி. 1626களில் வடமேற்கு பிரதேசங்களில் இருந்து போத்துக் கேயரால் வெளியேற்றப்பட்ட 4000 முஸ்லிம்கள் மட்டக்களப்பு இராசாக்களின் துணையுடன் கண்டி மன்னன் கேட்டுக்கொண்டதற்கிணங்க மட்டக்களப்பு பகுதியில் குடியேற்றப்படும் குறிப்பை காணலாம் ( வெல்லவூர்க் கோபால்,2016:16; Scritto da Marco Ramerini). ஆயினும், 1636 செப்டெம்பர் 9ஆந் திகதி கண்டி மன்னன் இராஜசிங்கன் ஒல்லாந்தருக்கு எழுதிய கடிதத்தில் தன்னை மட்டக்களப்புக்கான கோமான் (Earl of Batticaloa) எனக் குறிப்பிடுகின்றார் (Jornal of RAS, Vol. 18, No.55 1904:169). போர்த்துக்கேயரை வெளியேற்றும் கண்டி அரசரின் முயற்சியில் மட்டக்களப்பின் பல்வேறு குறுநில மன்னர்களின் பங்களிப்பும் காணப்பட்டமையை அறியமுடிகிறது. கண்டி அரசர் இராசசிங்கனின் வேண்டுகோளுக்கு இணங்க 1637 ஒக்டொபர் 29ஆந் திகதி இராப்பொழுதில் ஜான் தைசன் எனும் ஒல்லாந்துப் பிரதிநிதி கல்முனையை வந்தடைந்தான். அங்கிருந்து சம்மாந்துறைக்குச் சென்று அவ்வழியாக “பங்கரகம்மான” எனும் இடத்தில் கண்டி மன்னனைச் சந்தித்ததாகக் கூறப்படுகின்றது (Journal of RAS, Vol. 18, No.55

1904:171). நற்பிட்டிமுனை அக்காலத்திலும் நீர்வழிப் போக்குவரத்து கருதி அரசியல் முக்கியத்துவமிக்க ஒன்றாகக் காணப்பட்டது.

1638 மே18 இல் போர்த்துக்கேயர்களிடமிருந்து மட்டக்களப்பை ஒல்லாந்தர் கைப்பற்றினர். ஆயினும் கிழக்கு முழுமையையும் உடனடியாக ஆட்சிக்கு உட்படுத்தாமல் வில்லியம் ஜெக்கப் கோஸ்டரின் தலைமையிலான 100 வீரர்களை மட்டும் விட்டு கண்டி இராச்சியத்தின் பொறுப்பில் விட்டு விட்டனர். பின் 1668 ருத்திஸ் (Roothaes) தலைமையில் மீண்டும் படையெடுத்து மட்டக்களப்பை ஒல்லாந்தர் தம் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவந்தனர் (Scritto da Marco Ramerini).

1670இல் பீட்டர் டீ கிறாவ் தலைமையிலான டச்சுத் துருப்புகள் கிழக்கின் கட்டுப் பாட்டுப் பகுதிகளை விரிவுபடுத்தினர். காரைதீவையே முக்கிய நகர பகுதியாகக் கொண்டு செயற்பட ஆரம்பத்தில் திட்டமிடப்பட்டபோதிலும் சின்னக் கலத்தேயில் (சிறிய கல்லாறு) பாதுகாப்பு அரண் அமைப்பதற்கான திட்டமிடலுக்காகவும் காரைதீவை நகரமாக்க பெருமளவு காடு துப்பரவு செய்யவேண்டிவரும் என்பதனாலும் கல்முனையை முதன்மைப்படுத்தினர் (Memoirs of Rickloff Van Goens, 1663-1675:44). சின்னக்கலத்தே டெல்லே (Chinnecallette Delle) எனக் குறிப்பிடப்பட்ட சிறிய கல்லாறு பகுதியில் கோட்டை ஒன்று ஒல்லாந்தரால் கட்டப்பட்டது (Ranjith Jayasena and Pieter Floore, 2010:235-260) (இது இப்போதைய கோட்டைக்கல்லாறு ஆகும்) தொடர்ந்து பாணமை, யால, மாகமம் வரை புறக் காவல் நிலையங்களை டச்சு அரசு விரிவுபடுத்தியது. டச்சு அரசின் செயற்பாடுகளை கண்டி அரசு எதிர்த்தது. 1670 இல் கண்டிய படைகளின் தாக்குதலுக்கு மட்டக்களப்பு, கல்லாறு கோட்டைகள் உட்பட்டன. இந்த சந்தர்ப்பத்தில் வன்னிய போடிகள் கண்டிக்கு ஆதரவாக செய்யப்பட்டனர். இதுவரை யாழ்ப்பாண தளபதியின் கட்டுப்பாட்டிலிருந்த கிழக்கு கரையோரத்திற்கு 1671இல் தனியான தளபதி நியமிக்கப்பட்டார். 1672-73 காலப்பகுதியில் மட்டக்களப்பு டச்சுக் கோட்டை கண்டியர்களால் முற்றுகையிடப் பட்டது. இதில் மட்டக்களப்பு தலைமைகள் கண்டிக்கே ஆதரவு வழங்கினர். இது குறித்து ரிக்லோப் வான் தன் குறிப்பில் “மட்டக்களப்பு முக்குவர் மூர்க்கத்தனம் படைத்தவர்கள், உண்மையற்ற மோசமான மனிதர், இவர்கள் அனைவரையும் கைது செய்து புளியந்தீவு, கல்லாறு சிறைகளில் அடைக்கவேண்டும். இளஞ் சிங்க வன்னியன் கிடைத்தால் கொழும்பு அல்லது யாழ்ப்பாண சிறையில் அடைக்க வேண்டும் “ எனக் குறிப்பிடுவார் (Memoirs of Rickloff Van Goens,1663-1675:44).

1763 ஓலாணிஸ் கட்டுப்பாட்டில் டச்சுக்காரர்கள் தம் எல்லையைக் கல்முனை வரை விஸ்தரித்துக் கொண்டனர் (Scritto da Marco Ramerini) 1766 கண்டி அரசுக்கும் ஒல்லாந்தர்களுக்கும் இடையில் ஒப்பந்தம் மேற்கொள்ளப்பட்டு மட்டக்களப்பு ஒல்லாந்தராதிக்கத்தின் கீழ் கொண்டு வரப்பட்டது. ஆயினும் மட்டக்களப்பில் வன்னிய போடிகளின் உள்ளூர் ஆட்சி அதிகாரங்கள் அதே நிலையிலேயே காணப்பட்ட வரலாற்றுக் கூறுகளை காணமுடிகிறது. இக்காலப்பகுதியில் பிரான்கி (Francke) மட்டக்களப்பின் தளபதியாக 08 ஒக்டொபர் 1766 இல் நியமிக்கப்பட்டார் (Journal of RAS Ceylon, Vol:XX, Jan 1931). பிரான்கியின் நிருவாகத்தில் உள்ளூர்த் தலைமைகளுக்கும் டச்சு அரசுக்குமிடையில் வரிவிதிப்பு தொடர்பான உடன்பாடுகள் காணப்பட்டன. 1784 இல் ஜேகோப் பெர்னாண்ட்

மட்டக்களப்பின் தளபதியானார். பேர்னான்ட் விவசாய நடவடிக்கைகளை இப்பிரதேசத்தில் விருத்தி செய்தார். அரச தங்குமிடம், நெற்களஞ்சியம், போக்குவரத்து மற்றும் அஞ்சல் சேவைகளும் விருத்தி செய்யப்பட்டன (Schrikker, A. F. 2007 :89-93).

கி.பி. 1796 இல் மட்டக்களப்பை பிரித்தானியர் கைப்பற்றினர். Mr. Garrow இக்காலப் பகுதியில் மட்டக்களப்பின் கலக்ட்டராகக் கடமையாற்றினார். (ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் பற்றிய விரிந்த குறிப்புகள் மற்றைய அத்தியாயங்களில் விபரிக்கப்பட்டுள்ளன).

### மட்டக்களப்பின் பூர்வகுடிகள் யார் ?

மட்டக்களப்பின் வரலாறு குறித்து பேசும் பல்வேறு நூல்கள் இதுவரை வெளிவந்துள்ளன. கல்வெட்டுகளும், செப்பேடுகளும், ஓலைக்குறிப்புகள் பலவும் இந்த வரிசையில் வந்து நிற்கின்றன. அவை ஒன்றையொன்று முற்றாக ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் வெட்டியும் ஒட்டியும் நீண்டு செல்லும் ஒரு தொடர்ச்சி போன்ற பாவனையை நமக்குத் தருகின்றன. இந்த நூல்களின் நிரூபிப்புகள் பொதுவாக மட்டக்களப்பில் பூர்வக் குடிகளாக இயக்கர்கள், நாகர்கள் என்பதையே முன்னுரிமைப்படுத்திப் பேசுகின்றன. அதனூடாக நாகர்களே திராவிடர்கள் என்ற கருத்தியலும் ஊன்றிநிற்கச் செய்யப்படுவதுண்டு. பாளி, பௌத்த வரலாற்று நூல்களின் விவரிப்புகளான 'இயக்கர், நாகர்கள் மனித வம்சமே அல்ல, அவர்கள் அமானுஷர்கள்' என்ற மாயையை உடைத்தெறிந்து மட்டக்களப்பின் பூர்வீகக் குடிகளாக திராவிட வம்சத்தினர் மிக நீண்ட நெடும் காலத்தின் முன்னிருந்து இங்கு பல்வேறு பகுதிகளிலும் பண்பட்ட நாகரீகச் செழுமையோடு வாழ்ந்து வருகிறார்கள் என்பதையே நிறுவ முயன்றன.

மட்டக்களப்பின் வரலாற்றைப் பேசும் ஆரம்ப நூல்களான மட்டக்களப்பு பூர்வ சரித்திரம் (கமலநாதன் சா. இ , கமலநாதன் க.: 2005) மற்றும் அதன் திருந்திய மற்றொரு வடிவமாகக் கொள்ளக்கூடிய மட்டக்களப்பு மான்மியம் (1998) என்பன மட்டக்களப்பு வரலாறு குறித்து எழுதப்பட்ட வெறும் அனுமானங்களையும் கட்டுக் கதைகளையும் கொண்ட நூல் என்பதும் அது உண்மையான ஆதாரபூர்வமான வரலாறாக அமையவில்லை என்பதும் தொடர்ந்து சுட்டிக் காட்டப்பட்டு வருகின்றன விடயங்களே. சாதிய அரசியலும் குழும முன்னுரிமைப் படுத்தல்களும் தவிர்க்க முடியாதபடி இந்த நூல்களில் மேலோங்கி அமைந் திருப்பதும், முன்பின் முரணான கருத்துக்களை கொண்டிருப்பதுமான பல்வேறு பலவீனங்கள் சுட்டிக் காட்டப்படுகின்றன. இந்தப் பின்புலத்தில் முறைப்படியான தொல்லியல் சான்றாதாரங் களுடன் மட்டக்களப்பின் வரலாறு மீள எழுதப்பட வேண்டும் என்பதுவும் ஒரு பெரும் கோரிக்கையே. வரலாற்றாளர்கள் இந்தக் கோரிக்கைகளை சிரமேற்கொண்டு ஒழுக இதுவரை யாதொரு வழியும் கிடைக்கவில்லை என்பதுவும் உண்மை.

அதன்பின் வந்த வெல்லவூர்க் கோபாலின் 'மட்டக்களப்பு வரலாறு ஒரு அறிமுகம்' (2011) , 'மட்டக்களப்புத் தேசம் வரலாறு வழக்காறும்' (2016) , க. தங்கேஸ்வரி எழுதிய 'கலிங்க மாகோன் வரலாறு' (1995), 'மட்டக்களப்பு குகன்குல முற்குகர் வரலாறும் மரபுகளும்' (2000), மட்டக்களப்பு வரலாற்றுப் பின்னணி, கிழக்கிலங்கை பூர்வீக வரலாறு' (2007) முதலான நூல்கள் ஓரளவு தொல்லியல் ஆதாரங்களுடன் மட்டக்களப்பின் வரலாற்று அம்சங்களை பதிவு செய்ய முனைகின்றன என்ற கருத்தும் முக்கியமானது. ஆயினும் இவற்றிலும் மட்டக்களப்பு மான்மியம் முதலான நூல்களின் தாக்கமும் பாதிப்பும் மிகுந்து காணப்

படுகின்றமையை பலரும் சுட்டிக்காட்டினர். முழுமையான தொல்லியல் ஆய்வுகள் இப்பகுதி களில் செய்யப்படாத வரை மட்டக்களப்பின் முழுமைபடுத்தப்பட்ட வரலாற்றை கண்டடைய முடியாது. அதற்காக மட்டக்களப்பு மான்மியம் முற்றுமுழுதாக ஒதுக்கி விடக் கூடியதல்ல. அதுவே, மட்டக்களப்பு வரலாற்றுக்கான தொடக்கப்புள்ளி.

இந்தத் தளத்தில் நின்று மட்டக்களப்பின் பூர்வக்குடிகள் பற்றியும் தங்களுக்குள் வகுத்துக் கொண்டுள்ள சாதி வழி முதன்மைப்படுத்தலையும் பேசுகின்ற நூல்களுக்கிடையில் ஒரு மாற்று சிந்தனையை கிளறிவிடும் வகையில் கலாநிதி செல்வராசகோபால் அவர்களின் 'யார் இந்த வேடன்'(1965) வெளிவந்தது. வேடர்களே மட்டக்களப்பின் பூர்வகுடிகள் என்பதை முன்னிறுத்தும் ஆதாரங்களை அது பேசியது. இதற்காக அதன் ஆசிரியர் நீதிவிசாரணை ஒன்றைச் சந்திக்க வேண்டி ஏற்பட்டதாகவும் கூறப்படுகின்றது. இந்த சிந்தனையின் தொடர்ச்சியாக 1998 களில் வெளிவந்த கலாநிதி சி மௌனகுரு அவர்களின் 'மட்டக்களப்பு மரபுவழி நாடகங்கள்' எனும் நூல் களநிலை ஆய்வு முறைகளையும் மட்டக்களப்பின் பாரம்பரிய வழிபாட்டு முறைகளையும் அடிப்படையாகக் கொண்டு மட்டக்களப்பின் பூர்வகுடிகளாக வேடர் அமைவதை எடுத்துக்காட்டுகின்றது. மட்டக்களப்பின் ஆன்மீகப் பண்பாட்டின் முக்கிய கூறாக விளங்கும் குமார தெய்வ வழிபாட்டு முறையையும் அதில் மேற்கொள்ளப்படும் வேடுவர்களுக்குரிய வழிபாட்டு முறைகளும் இவரது முக்கிய சுட்டிக் காட்டுகளாக காணப்பட்டன. இன்றும் மட்டக்களப்பின் ஆங்காங்கே பரவிக் காணப்படும் வேடுவக் குடியிருப்புகளும் இங்குள்ள தேசத்து கோயில்கள் மற்றும் முக்கிய ஆலயங்களில் வேடுவர்களின் மரபுவழி வழிபாட்டு முறைகள் உள்ளடங்கி இருப்பதுவும் இதற்கு முக்கிய ஆதாரங்களாக முன்வைக்கப்பட்டுள்ளன. இந்த அடிப்படையை அடியொற்றி ஏ. விஜயரெட்ன (விஜய்) அவர்களின் 'மட்டக்களப்பு வரலாறு– பூர்விகக் குடிகளும் குமாரதெய்வ வழிபாடும்' எனும் நூல் 2012 இல் வெளிவந்தது. மட்டக்களப்பின் பூர்வீக மக்கள் யார்? என்பதைக் கண்டறிவதில் மட்டக்களப்பில் விரவிக் காணப்படும் குமார தெய்வ வழிபாட்டு முறைகளையும் கொண்டும் மட்டக்களப்பின் பூர்விகக் குடிகளாக வேடர்கள் அமைவதை இவர் எடுத்துக் காட்டுகின்றார். குமாரக் கடவுளாகவும் முருகனாகவும் இருந்த தமிழர்களின் வணக்கமுறை ஸ்கந்த, சுப்பிரமணிய வழிபாடாக மாற்றமுற்றமையை அவர் சுட்டிக் காட்டிகிறார்.

மட்டக்களப்பின் பூர்வகுடிகளாக பல இன மரபுக் குழுக்களை குறிப்பிடலாம். இயக்கர்கள், நாகர், வேடர், புலியர், கழுவர், திமிலர் என இது வரிசைப் படுத்தப்படுகிறது. இவர்கள் யாவரும் திராவிட பண்பாட்டுக்குள் அடக்கப்பட கூடியவர்களா? என்ற கேள்வியும் இங்கு எழுகிறது. இயக்கர்களின் ஒருபகுதியினர் தானா இந்த வேடங்கள்? என்ற கேள்வியும் இங்கு வருகிறது. நாகர்கள் பின்வந்த திராவிடக் குடிகளுடனும் சிங்கள மக்களுடனும் ஒன்று கலந்து விட்டனர். இதில் திமிலர், கழுவர், புலியர், மற்றைய சமூகத்துடன் ஒன்று கலந்து தமிழர் என்ற பொது அடையாளத்திற்கு உள்ளாகி விட்டனர். பூர்வீக் குடிகளாக வாழ்ந்த மக்களுடன் காலத்துக்கு காலம் ஏற்பட்ட இந்திய குடியேற்றங்களினாலும் வந்திணைந்த மக்கள் ஒன்று கலந்த கலப்பினூடாக இன்றைய சமூக அமைப்பு தோன்றியது என்பதையும் புரிந்து கொள்ள முடிகிறது. இதன் வழியே பூர்வக் குடிகள், குடியேற்றக்குடிகள் என்ற இரண்டு சமூக அமைப்புகளை வரலாற்றாசிரியர்கள் காட்ட முனைகின்றனர். ஆயினும் மட்டக்களப்பின் பூர்வகுடிகளை பொதுவாக இயக்கர், நாகர், வேடர்களைக் கொண்ட திராவிட பண்பாட்டுக்குரியவர்கள் என வகைப்படுத்துவதும் அதில் வேடர்களை இயக்கர்

களுள் அடக்கமாக்கி விட்டு அதில் பண்பாட்டில் முன்னிலை கொண்டவர்களாக நாகர்களை காட்டுவதும் வரலாற்று நூலாதாரங்களில் இருந்து உணரக்கூடியதாயுள்ளது. நாகர் வழிவந்த மன்னர்களை வகைப்படுத்தியும், 'நாக' என்ற முன்னொட்டு கொண்ட இருக்கை பிரதேசங்களைக் காட்டியும் நாகர்களை முதன்மை குடுமமாகவும் அவர்களின் தொடர்ச்சியே இன்றைய மட்டக்களப்பு சமூகமாக கொள்வதும் காணப்படுகிறது.

குமார தெய்வச் சடங்குகள் மற்றும் வேட வழிபாட்டு முறைகளையும் ஆலய வரலாற்றில் வேடர் வழிபட்ட இடமாக அவை காணப்படுவதையும் இன்னும் சில ஆதாரங் களையும் கொண்டு வேடர்களே மட்டக்களப்பின் பூர்வ குடிகள் என நிறுவ முயலும் போக்கை இங்கு காண்கிறோம். வேட குடியிருப்புகள் விந்தனை, தம்பானை, கழுவன்கேணி, வாழைச் சேனை ஆகிய இடங்களில் இன்றுவரைக்காணப்படுவதும் வேடர்களின் ஆலயங்களும் வேடமொழியில் அமையும் சடங்குகள் என்பனவும் வேடர்கள் மட்டக்களப்பின் ஆதி சமூக அமைப்பில் முக்கிய அம்சம் என்பதை நமக்கு உறுதிபடக் காட்டுகின்றன. இவற்றையெல்லாம் நோக்கும் போது வேடர்கள் மட்டக்களப்பின் பூர்வகுடிகள் தான் என்பதில் உடன்படவே முடியும்.

குமார தெய்வ வழிபாட்டுக்கு சமானமாக மட்டக்களப்பு எங்கும் பரவியிருக்கும் நாகதம்பிரான் வழிபாடு, நாககன்னி வழிபாடு, நாக கன்னிக்கு சடங்காடுதல் முதலானவை நாக மரபின் தொடர்ச்சியாக கொள்ளுவதும் அது பெரும் தெய்வ வழிபாட்டுடன் ஒன்றிணைந்து ஒன்றித்த சடங்குகளாகக் காணப்படுவதையும் அவதானிக்க முடிகிறது. நாடெங்கிலும் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுக்களில் நாக எனும் குல மரபுச் சொல் அல்லது முன்னொட்டு மன்னர்களின் பெயருடனும் பிரதானிகளின் பெயருடனும் காணப்படுவதையும் அவதானிக் கலாம். மட்டக்களப்பு கல்லடிச்சேனை, வேரம் பகுதியில் அண்மையில் (2015) கண்டெடுக் கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் 'வேள் நாகன் மகன் வேள் கண்ணன்' என அமைந்திருக்கும் வாசகங்களை பேராசிரியர் பத்மநாதன் சுட்டிக்காட்டுவார். இவை கி.பி. முதலாம் நூற்றாண்டு ரியவை. குசலான் மலை உள்ளிட்ட பல்வேறு இடங்களில் காணப்படும் நாக வழிபாட்டு அம்சங் களையும் பேராசிரியர் பத்மநாதன் சுட்டிக் காட்டுவார். வரலாற்றுச் செய்திகள், தொல்லியல் சான்றுகள் போன்றவற்றின் மூலமும் ஆய்வு முடிவுகளினதும் முடிவுகளாக இயக்கர்கள் வேடர் களுக்குள் கலந்தனர் என்பதையும் நோக்குவதோடு நாகர்கள் பின்வந்த குடியேற்றக்காரர்களோடு சேர்ந்து ஒரு நாகரீக வளர்ச்சிக்குள் முன்னகர்ந்தமையை முடிவாக கொள்ள முடியும்.

இது தவிர மருத்துவ ஆராய்ச்சிகள் குறிப்பாக இலங்கை மக்களின் இழைமணி மரபணு நிறமூர்த்த mt(DNA) வரிசைப்படுத்தல் ஆய்வு ஒன்றில் இன்று வரை இலங்கையில் வாழுகின்ற இனங்களுக்கிடையிலான இனக்கலப்பு பற்றி எல்.ரணவீர குழுவினால் மேற்கொள்ளப்பட்ட மருத்துவ ஆய்வில் முக்கியமான முடிவுகள் சில அடையப்பட்டன (Lanka Ranaweera et al, 2014: 28). இதில் தமிழர், சிங்களவர், வேடர், இந்தியத் தமிழர் ஆகியோ ருக்கிடையிலான நிறமூர்த்த தொடர்புகள் அது யுரேசிய மற்றும் இந்திய துணைக்கண்ட மக்களின் நிறமூர்த்த ஒழுங்குகளுடன் தொடர்பு படுத்தப்பட்டு ஆராயப்பட்டன. இந்த ஆராய்ச்சி யில் வேடர்கள் மற்றைய இனக் குழுமங்களுடனும் இந்திய துணைக்கண்ட மக்களின் நிறமூர்த்த வரிசையுடனும் மிகக் குறைந்த அளவு இடைத் தொடர்புகளைக் கொண்டு தனித்துவம் மிக்கவர்களாக காணப்பட்டமை கண்டறியப்பட்டுள்ளது. இலங்கையின் ஏனைய இனக் குழுமங்கள் தங்களுக்கிடையில் இனக்கலப்புகளைக் கொண்டிருக்கின்ற அதேவேளை வேடர்கள் மற்றவர்களுடன் கலப்புறாத தனித்துவம் மிக்கவர்களாக காணப் பட்டனர் (Lanka

Ranaweera et al 2014:28-36). இதிலிருந்து இலங்கையின் இன்றுவரை பெரிதும் கலப்புறாத பூர்வக் குடிகளாக வேடர்களைக் கொள்ளமுடியும். ஆயினும் நாகரீக முன்னகர்வில் தம் பண்பாட்டுச் சின்னங்களைப் பெரிதும் பதித்த மட்டக்களப்பின் பூர்வக்குடியாக நாகர்கள் காணப்படுகின்றனர்.

**உசாத்துணை**


1. Blaze L.E, A History of Ceylon for school, 9th Ed., Colombo,1934.
2. Canagaretnam S.O, Monograph of the Batticaloa District of the Eastern Province, Government printers, Ceylon 1921.
3. Codrington H.W , Short History of Ceylon, 1994.
4. Chandra Richard De Silva, The Portuguese Ceylon 1617-1638, Colombo, 1967
5. Culavamsa Part II, trn.Welhem Geiger, New Delhi,1998.
6. Journal of RAS Ceylon-1889, Vol:IX, No.38
7. Journal of RAS Ceylon-1931, Vol:XX, No. ,Jan.1931.
8. The Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society of Great Britain & Ireland, Vol. 18, No. 55 (1904), pp. 166-276 (111 pages)
9. Lanka Ranaweera, " Mitochondrial DNA history of Sri Lankan ethnic people: their relations within the island and with the Indian subcontinental populations", Journal of Human Genetics, 2014.
10. Mendis G.C ,' The Early history of Ceylon' Y.M.C.Publishing House, Russell Street, Calcutta,1945.
11. Paranavitana S, A Concise History of Ceylon, University of Ceylon, Press Board,1961
12. Philippus Baldaeus, True and exact Description of the Great island of Ceylon,The Ceylon Historical Journal Vol. VIII- July 1958- April 1959 No. 1-4.
13. Ranjith Jayasena and Pieter Floore, DUTCH FORTS OF SEVENTEENTH CENTURY CEYLON AND MAURITIUS: AN HISTORICAL ARCHAEOLOGICAL PERSPECTIVE, pp.235-260, 2010
14. Scritto da Marco Ramerini , La storia di Batticaloa (Sri Lanka) durante la dominazione portoghese eolandero
15. Schrikker, A. F. (2007), Dutch and British colonial intervention in Sri Lanka, 1780- 1815: expansion and reform. Leiden: Brill. Retrieved from https://hdl.handle.net/1887/5419
16. Sivaretnam. C,The Tamils in Early Ceylon, Colombo,1968.
17. The Mahavamsa, trn.Welhem Geiger, New Delhi, 2000.
18. The Dutch Record of the Ceylon Government No.3, '' Memoirs of Rycklofff Van Goens 1663- 1675", Govt. Press, Colombo 1932.
19. கமலாநாதன் சா.சி,கமலநாதன்.க, மட்டக்களப்பு பூர்வ சரித்திரம், குமரன் புத்தக இல்லம், கொழும்பு 2005
20. கவிக் கோ வெல்லவூர்க் கோபால் , மட்டக்களப்பு வரலாறு ஓர் அறிமுகம், மட்டக்களப்பு, 2011
21. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், மட்டக்களப்புத் தேசம் வரலாறும் வழக்காடும், சேமமடு பதிப்பகம் 2016.
22. குணராசா க, ஈழத்தவர் வரலாறு 1996
23. சிற்றம்பலம் சி. க , ஈழத்தமிழர் வரலாறு (கி.பி. 1000வரை) தொகுதி I , இந்துக்கல்லூரி வெளியீடு தொன்மை,சாவகச்சேரி, 1994.
24. சிவராம். த , "16 ஆம் நூற்றாண்டில் மட்டக்களப்பு", மட்டக்களப்பு பிரதேச சாகித்திய விழா – நினைவுமலர், 9–10 ஆவணி 1993.
25. சிவசண்முகம் ஞா , மட்டக்களப்பு குகன்குல முற்குகர் வரலாறும் மரபுகளும், விபுலம் வெளியீடு 2000.
26. செல்வாராசக் கோபால் கா. தா, (மற்.) கனகசபாபதி, மட்டக்களப்பு மாநிலத்தின் வரலாற்றுக் சுவடுகள் 2005
27. தங்கேஸ்வரி க, கிழக்கிலங்கைப் பூர்வீக வரலாறு , 2007
28. தங்கேஸ்வரி க, கலிங்க மாகோன் வரலாறு , அன்பு வெளியீடு, 1995
29. தங்கேஸ்வரி க, குளக்கோட்ட தரிசனம், அன்பு வெளியீடு, 1997

30. தனபாக்கியம் ஜி, இலங்கையில் தொல்லியல் ஆய்வுகளும் திராவிடக் கலாசாரமும், மணிமேகலைப் பிரசுரம், 2001
31. பத்மநாதன் சி. இலங்கைத் தமிழர் வரலாறு-கிழக்கிலங்கையில் நாகரும் தமிழும் (கி.மு.250- கி. பி.300), இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 2016.
32. பத்மநாதன் சி, மட்டக்களப்பில் நாகர்களின் பண்பாட்டுச் சின்னங்கள் பக்.17-27, மொழிதல் , தொ.2 எண் 1, சுதந்திர ஆய்வு வட்டம், 2015.
33. புஷ்பரெட்ணம் ப, இலங்கைத் தமிழரும் நாக நாட்டு அரசமரமும், நியூ செஞ்சரி புக் கவுஸ், 2006
34. புஷ்பரெட்ணம் ப , "இலங்கை தமிழர் வரலாறு பற்றி இதுவரை அறியப்படாத புதிய கல்வெட்டு திருகோணமலையில் கண்டுபிடிப்பு",வீரகேசரி மின்னிதழ் கட்டுரை, 22 நவம்பர் 2021.
35. மட்டக்களப்பு மாநாட்டு நினைவுமலர் , அனைத்துலக தமிழாராய்ச்சி மன்றம், இலங்கைக்கிளை மாநாடு, 1976, மட்டக்களப்பு.
36. முத்துத்தம்பிப்பிள்ளை. ஆ, இலங்கைச் சரித்திர சூசனம் ,நாவலர் அச்சகம், யாழ்ப்பாணம், 1903
37. மெண்டிஸ் ஜி. ஷி , இலங்கையின் பூர்வசரித்திரம் ,(மொழிபெயர்ப்பு ஜி.சி இராமசாமி ), கொழும்பு 1933.
38. மௌனகுரு சி, மட்டக்களப்பு மரபுவழி நாடகங்கள் , விபுலம் வெளியீடு, 1998
39. நடராசா எவ். எக்ஸ் சி மட்டக்களப்பு மான்மியம் , 1998
40. நடராஜா வே, க, பண்டைய ஈழம் , இரண்டாம் பதிப்பு, கரவெட்டி, 1969
41. நவநாயகமூர்த்தி, ஈழத்து வரலாற்றுச் சுவடுகள்,2002
42. விஜயரெட்ண எ,மட்டக்களப்பு வரலாறு - பூர்வீகக் குடிகளும் குமாரதெய்வ வழிபாடும், எழுநா வெளியீடு 2013

# 04. நற்பிட்டிமுனையின் அமைவிடமும் நிர்வாக ஒழுங்கமைப்புகளும்

## 4.1 அமைவிடமும் பெயர் வழியும்

**ந**ற்பிட்டிமுனை நீண்டகால ஆட்சித்தள வரலாறு கொண்ட கிராமமாகும். நற்பிட்டிமுனை வரலாற்றுக் காலத்திலிருந்தே திக்கதிபர் தளமாகவும் இராசாக்கள் கூடுமிடமாகவும் கரவாகுபற்று வன்னிமையின் தலமாகவும் இருந்து வந்துள்ளது ( நடராசா எவ். எக்ஸ். சி, 1998:24).

தொடக்ககாலத்தில் நற்பிட்டிமுனை என்பது தற்போதைய மணல்சேனை, சேனைக்குடியிருப்பு ஆகிய கிராமங்களை உள்ளடக்கியதாக கிட்டங்கி துறை வரையான பகுதிகளை கொண்ட அகன்ற நிலப்பரப்பை குறிப்பிடப் பயன்படுத்தியமையை அறியமுடிகின்றது. ஐக்கிய அமெரிக்க புவியியல் சபையின் நியம அலுவல்முறைப் பெயர் வழக்கு எனும் ஆவணத்தில் நற்பிட்டிமுனை Naippattimunai எனக் குறிக்கப்பட்டிருப்பதுடன் அது அமைந்துள்ள புவியியல் ஆள்கூறுகளாக வடக்கு அகலாங்கு 07° 25" (7.417) மற்றும் கிழக்கு நெட்டாங்கு 81° 45" (81.800) என்பன குறிப்பிடப் படுகின்றன. புவியியல் ஆள்கூறுகளின் அடிப்படையில் இந்த அமைவிடம் தற்போதைய கிட்டங்கி ஆற்றங்கரைக்கு அண்மித்த இடமாகும். அத்துடன் நற்பிட்டிமுனை சன அடர்த்தி மிக்க பகுதி (Populated Area) என்பதை குறிப்பதற்காக PPL என்ற குறியீடு காட்டப்பட்டுள்ளது (Gazetteer 49,Office of Geograph, Dept. of the interiors, Washington DC, June 1960:224)

1935 அரச வர்த்தமானியில் நற்பிட்டிமுனை பதிவுக்காரர் பிரிவினுள் நற்பிட்டிமுனை, சேனைக்குடியிருப்பு, பாண்டிருப்பு, கரவாகு வட்டை(நற்பிட்டிமுனைக் கண்டம்) ஆகியவை அடக்கப்பட்டிருந்தது (இலங்கை அரச வர்த்தமானி இல.8145, செப்.13, 1935)

நற்பிட்டிமுனையின் அமைவிடம் குறித்து சைமன் காசிச்செட்டி அவர்கள் தொகுத்து வெளியிட்ட அரச ஆவணமான The Ceylon gazetteer

(1838:171)இல் மட்டக்களப்பிலிருந்து 17 மைல் தொலைவில் மட்டக்களப்பு வாவியின் ஒரு கரையில் அமைந்திருக்கும் சன அடர்த்திமிக்க நகரம் எனக் குறிப்பிடுவார். 1858இல் சமர்ப்பிக்கப்பட்ட பெரிய பிரித்தானிய பாராளுமன்ற அறிக்கைப் பத்திரம் ஒன்றில் "..... Naypatemone- the southern extremity of the Batticaloa lake" எனக் குறிப்பிடுவது கொண்டு நோக்கும்போது (The report on the past and present states of her majesty's possessions, 1858:333) நற்பிட்டிமுனை என்பதன் ஆரம்ப எல்லைகளாக கிட்டங்கித் துறை வரையான நிலப்பகுதி கருத்தில் கொள்ளப்பட்டு இருந்தமையைப் புரிந்து கொள்ளலாம். இதே கருத்தை ஆங்கிலேயர் காலத்தில் வெளியான Coconut planters manual எனும் நூலும் குறிப்பிடுகின்றது (Ferguson.J,1907:21). தற்காலத்தில் சேனைக்குடியிருப்பு தனியான கிராமமாகப் பெயர்குறிக்கப்பட்ட போதிலும் விவசாயக் காணிப்பதிவுகளில் அது 'நற்பிட்டிமுனை மேற்குக் கண்டம்' எனக் குறிப்படுவதையும் இங்கு கவனிக்கலாம்.

நற்பிட்டிமுனையைச் சூழ்ந்ததாக மட்டக்களப்பு வாவி வளைந்துவர, பட்டிப்பளை ஆற்றின் கிளை வாவியுடன் வந்திணையும். இவ்வாறு அகண்ட வாவி ஒடுங்கிய ஒரு கிளை ஆற்றுடன் இணைந்த இடம் என்ற வகையில் போக்குவரத்து மற்றும் குடியியல் முறைமையில் மட்டுமன்றி அரசியல் ரீதியான கேந்திர முக்கியத்துவத்தையும் நற்பிட்டிமுனை கிராமம் பெற்றிருந்தது. கிட்டங்கித் துறையிலிருந்து பண்டைய மட்டக்களப்பு எனக் கொள்ளப்படும் சம்மாந்துறை வரையான ஆட்சிப் பகுதிக்கு சம்மான் எனப்படும் சிறிய வகை படகுகளே பயணித்தன என்ற செய்தியை வரலாற்றில் காண்கிறோம் (Donald Furguson, 1998:93 &172). சம்மாந்துறை சார்ந்து அமைந்திருந்த அரச மாளிகைக்கு அரணாக இந்த ஒடுங்கிய நீர்வழி பேணப்பட்டது எனலாம். பெருக்கு காலத்தில் தொடர்ச்சியான ஆறாக தெரிந்த பட்டிப்பளை கிளையாறு மற்றைய காலங்களில் சிறியரக வள்ளங்கள் செல்லும் ஓடையாகப் பதிவு செய்யப்படுவதை கவனிக்க முடியும் (Donald Furguson, 1998:15). சோழ இளவரசியான சீர்பாததேவி வீரமுனைப் பகுதியில் வந்திறங்கிய குறிப்புகளிலிருந்து கிட்டங்கி துறையிலிருந்து வீரமுனை வரை நீர் மூலமான தொடர் வழி காணப்பட்டு பின் தூர்ந்து போயிருக்கலாம் எனக் கருத முடியும். பின்னர் 1602இல் இஸ்பில்பேர்கன் முதலாவது ஒல்லாந்த தளபதியாக இலங்கை வந்த போது கிட்டங்கி ஊடாகப் பயணித்ததான குறிப்புகளை காணலாம் (Danielle Dravon,2019:47-47). இஸ்பில்பேர்க்கனின் வருகை குறித்து Donald Furgusonஇன் குறிப்புகளில் "இடையில் கோயில் விமானத்துடனான ஊரில் (திருக்கோயிலாக இருக்கும்) படகை அனுப்பி விசாரித்த போது மட்டக்களப்பு மேலும் வடக்காக இருப்பதாக கூறினர். அன்று பிற்பகலே குடாபோன்று கப்பல்கள் நிறுத்தப்பட்டிருந்த மட்டக்களப்பின் துறைப்பகுதியை அடைந்தோம். ஒரு மைல் தொலைவில் மன்னனின் நகரம் இருந்தது(Donald Furguson 1998:14–15) எனக் குறிப்பிடுகின்றார். 't Historiael Journael' (1605) சஞ்சிகையில் வெளியிடப் பட்டுள்ள நிலப்படம் இஸ்பில்பேர்க்கன் பயணம் செய்த பாதையை மேலும் உறுதிப் படுத்துகின்றது.

Source: Balthasar Floris van Berckenrode> Zelon in 't Historiael Journael,1605, engraving, 203 × 295 mm. Allard Pierson, OF 63–801, University of Amsterdam (இஸ்பில்பேர்க்கனின் பயணப் பாதையைக் காட்டும் நிலப்படம்).

அதன் பின்னர் மற்றொரு ஒல்லாந்தரான Ove Giedde 1620 இல் இதே பாதையில் பயணித்த போது இடையில் சகதி நிரம்பிய பகுதிகளைச் சந்திக்கின்றார் (Brohier R L, 1961:5). கிட்டங்கித் துறையிலிருந்து நற்பிட்டிமுனையின் மையம் வரையிலான பகுதியில் பட்டிப்பளை ஆறும் மட்டக்களப்பு வாவியும் இணைகிறது. இந்த இணைவுக்கு நேர் எதிரே நற்பிட்டிமுனை ஸ்ரீ மகா விஷ்ணு ஆலயம் தற்போது அமைந்துள்ள இடம் காணப்படுகின்றது. கிட்டங்கித் துறையின் ஆரம்பகால இறங்குதுறை (பாலம் அமைக்கப்பட முன்னர்) இப்பகுதியில் அமைந்திருந்தது. ஏனெனில் அக்கால வணிக மையமாக ஸ்ரீ கந்தசாமி ஆலயம் அமைந்துள்ள பகுதி காணப்பட்ட குறிப்புகள் உள்ளன. இந்த இணைவை அடுத்து பட்டிப்பளை ஆற்றின் ஒடுங்கிச் செல்லும் பகுதியை காணலாம். இதன் முடிவுப்பகுதியில் வண்டல் மண்மூடிய சகதிப்பகுதி காணப்படுகிறது. இதைப்பற்றி Brohier குறிப்பிடுகையில் இப்பகுதி வயல் நிலமாக அல்லது சதுப்பு நிலமாக மாறி இருக்கக் கூடும் எனக் கூறுகிறார். இதிலிருந்து சம்மாந்துறையூடாக தரைவழியாக கண்டிக்குச் செல்கிறார்.




Ove Giedde 1620 இல் மட்டக்களப்பு வாவியூடாக நற்பிட்டிமுனை வரைப் பயணித்த பாதை முறிகோடுகளால் (Source : Brohier Rl, 1961:8)

## நற்பிட்டிமுனை என்ற பெயர்வழி

நற்பிட்டிமுனை என்ற பெயர்வழி பற்றிப் பல செவிவழி முடிவுகளும் கருத்துக்களும் கூறப்படுகின்றன. சுற்றியுள்ள பட்டிப்பளை ஆற்றின் கிளை மற்றும் வயல்காணிகளை ஊடறுத்து "நா" வடிவில் நீண்டிருக்கும் முனை என்பதாக "நாப்புட்டிமுனை" என்ற பெயர் வழங்கப்பட்டது எனவும் அதுவே "நாப்புட்டி" என்று வழங்கப்பட்டு வந்துள்ளதாகவும் நூலாதாரங்கள் மூலம் தெளியலாம். (கமலாம்பிகை லோகிதராசா, 2012:.31)

இங்கு "புட்டி" என்பது திடலான உயர்ந்த நிலம் எனும் பொருள் மனங்கொள்ளத்தக்கது. நாப்புட்டி என்ற பெயர் வழங்கப்பட்டமையை பண்டைய வரலாற்று நூல்கள் குறிப்பிடுகின்றன (நடராசா எவ். எக்ஸ் சி,1998:24). இது திரிபுற்று நாப்பிட்டிமுனை, நற்பிட்டிமுனை என வழங்கப்படுவதாகவும் கருதப்படுகின்றது. வரலாற்று ரீதியிலும் நாட்டார் வழக்கிலும் உள்ள கதைகளின் அடிப்படையில் ஆரம்ப காலத்தில் இவ்வூர் 'நாற்படைமுனை' என அழைக்கப் பட்டதாகக் கூறப்படுகிறது (அரசரெத்தினம் எஸ், 2022:xxiv). நாலு தட்டுப் படைகள் வாழ்ந்த இடம் என்று இதற்கு விளக்கங்களும் சொல்லப்படுகின்றன. வன்னியர்களின் ஒரு பிரிவினரான "நாற்படைவன்னியர்"களின் குடியேற்றங்கள் இப்பகுதியில் ஏற்பட்டதால் இப் பெயர் ஏற்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. நாற்படை வன்னியர் பற்றி 'கல்லாடம்' செய்யுள்(செய் 37:9-11),

**'கருமுகிற் கணிநிறத் தழற்கட் பிறையெயிற்**
**றரிதரு குட்டி யாயபன் னிரண்டினைச்**
**செங்கோன் முளையிட் டருணீர் தேக்கிக்**
**கொலைகள வென்னும் படர்களை கட்டுத்**
**திக்குப்பட ராணை வேலி கோலித்**
**தருமப் பெரும்பயி ருலகுபெற விளைக்கு**
**நாற்படை வன்னிய ராக்கிய பெருமான்'**

எனக் குறிப்பிடும். மொழி ஞாயிறு ஞா. தேவநாயப்பாவாணர் தனது 'தமிழர் வரலாறு' நூலில் (1972:116) குறிப்பிடுவது போல தமிழ் குறுநில வேந்தர்களில் ஒரு பிரிவினராக நாற்படை வன்னியர் விளங்கிவந்தனர். நாலு தட்டுப் படைகளைக் கொண்ட கடமை வீரர்களான வன்னியர் இலங்கை வன்னியர்களின் தோற்றுவாயாய் அமையும் குறிப்பை கே. இந்திரபாலா The origin of the Tamil chieftaincies of Ceylon கட்டுரையில் உறுதிப்படுத்துவார் (Indirapala K,1970:120-129; பத்மநாதன் சி, 1970:17-21). இலங்கையில் குடியேறிய ஆரம்பகால சத்திரிய வன்னிய பரம்பரையில் நாற்படை வன்னியர்களும் காணப்பட்டனர் என வன்னியும் வன்னியர்களும் எனும் நூலில் சி. எஸ் நவரத்தினம் குறிப்பிடுவார். கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அதாவது தேவநம்பியதீசன் காலத்தில் தென்கிழக்கு ஈழப்பகுதியாகிய உருகுணையில் கதிர்காமம் மற்றும் கல்லோயா பள்ளத்தாக்குகளில் சத்திரிய வன்னியர்களின் வியாபகம் காணப்பட்டமை குறிப்பிடப்படுகிறது. இதனடிப்படையில் நாற்படை வன்னியர் பதி என்பதைக் குறிப்பிடும் "நாற்படைமுனை" என்ற பெயர் திரிந்து நற்பிட்டிமுனை என வந்தது எனலாம். சோழராட்சிக் காலத்தில் வேளைக்காரப் படைகள் ஈழத்திற்கு பெருமளவுக்கு வந்தனர் எனவும் அவர்கள் பல்வேறு இடங்களிலும் குடியேறியமை பற்றியும் அறியமுடிகிறது. நற்பிட்டிமுனையில் வன்னிய கோத்திரத்தார்களுக்கு வழங்கப்பட்ட பெயரீடுகளில் "வேள வன்னிமை" என்ற பெயர் வழக்கு பல கால நிரைகளிலும் காணப்பட்டமையை அரச வர்த்த மானிகளின் பதிவாகியுள்ள நிலச் சுவாந்தரர் பற்றிய குறிப்புகள் மூலம் அறியலாம் (அரச வர்த்தமானி இல. 6168, திகதி 1907.02.01 (ம.) இல. 4904, திகதி 1889.01.11). நிலைமைப்போடி பெரிய கரவாகுப்போடியாரின் தந்தையாரும் வேளவன்னிமை என்று அழைக்கப்பட்டார் என்பதும் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும்.

இந்த அடிப்படைகளை வைத்து நோக்கும் போது நற்பிட்டிமுனையில் ஆரம்பக்

குடியேற்றமாக கலிங்ககுக மரபினரின் குடியேற்றம் இடம் பெற்றதுடன் அதனைத் தொடர்ந்து வந்த காலங்களில் வன்னியர் குடியேற்றங்கள் நிகழ்ந்திருக்க முடியும். ஆட்சி மையங்களில் வன்னியர் ஆதிக்கம் பெற்றமை வன்னியர்களின் ஆதிக்கத்தை இப்பகுதிகளில் மேலும் வலுவுடையதாக ஏற்படுத்தியிருக்கும் என்ற முடிவுக்கு வரலாம். நற்பிட்டிமுனைக் கிராமத்தில் கூத்திகன் காலத்திலும் அதற்குப் பின்னாக சோழர் காலத்திலும் குடியேற்றங்கள் நிகழ்ந்தன என்பார் சரித்திர ஆய்வாளர் என்.கே.எஸ். திருச்செல்வம் (தென்கிழக்கு இலங்கையின் பண்டைய இந்து சமய வரலாறு (பொ.ஆ.மு.5100 முதல் பொ.ஆ.1000 வரை), 2015:43-44)

நற்பிட்டிமுனை எனும் பெயர் வழக்கானது சைமன் சாசி செட்டி எழுதிய Ceylon Gazetteer (1834) இல் Naypattimoone எனப் பல இடங்களில் வழங்கப்பட்டுள்ளமையைக் காணலாம். 1843இல் J. W பென்னட் என்பவர் எழுதிய 'Ceylon and it's capabilities' என்னும் இலங்கையின் இயற்கை வளங்கள், சுதேச உற்பத்தி மற்றும் வர்த்தக வசதிகள் பற்றிய சுற்றுலாக் குறிப்புகள் அடங்கிய நூலில் நற்பிட்டிமுனையை Naypattri-Moone என குறிப்பிடுகிறார் (1893 : 2K). அவரது குறிப்பில் மட்டக்களப்புக்கு அடுத்ததாக நற்பிட்டிமுனைக்கு பயணிப் பதான குறிப்பையும் இங்கு ஏற்றுக் கொள்ளப்படக் கூடிய தரத்திலான ஓய்வு மனை (Rest house) காணப்பட்டமை பற்றியும் குறிப்பிடுகிறார். இங்குள்ள வீதியினூடாகப் பயணிக்கும் போது வீதியின் இருமருங்கிலும் யானை எருக்கு, எருக்கு என்பன காணப்பட்டமை பற்றியும் உள்ளூரில் இவை மருந்துக்கு பயன்படுத்தப்படும் முறைகளையும் விவரிக்கிறது இந்நூல் ( 1893:2K ).

Edward Thornton எழுதிய 'A Gazetteer of the Territories Under the Government of the Viceroy of India' (1886) எனும் நூலில் "NAYPATTIMUNE : Village in Eastern Ceylon, seventeen miles south- east of Batticaloa, on the banks of the lake which runs up from that town எனக் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இவற்றின்பால் நோக்கும்போது நற்பிட்டிமுனை என்பது கிட்டங்கி ஆறுவரை நீண்ட நிலப் பரப்பாக ஒரே பெயர்கொண்டு அழைக்கப்பட்ட கிராமம் என்பது தெளிவு.

Rev. James Cordiner அவர்களினால் தொகுக்கப்பட்ட 'A description of Ceylon' எனும் நூலின் இரண்டாம் பாகத்தில் 1800 முதல் 1803 வரை பலரது பயணக் குறிப்புகளை வெளியிட்டுள்ளார். 1802 ஏப்ரல் – மே மாதங்களில் அப்போதைய இலங்கை ஆளுநர் பிரெடிக் நோத் அவர்கள் இலங்கை வைத்தியசாலைகளின் மேலாளராகக் காணப்பட்ட தோமஸ் கிறிஷ்டியுடன் இணைந்து திருகோணமலையில் இருந்து மட்டக்களப்பு ஊடாக மாத்தறை வரை மேற்கொண்ட பயணக் குறிப்புகள் காணப்படுகின்றன. இதனை தோமஸ் கிறிஸ்டியே தொகுத்திருந்தார். மே மூன்றாம் திகதி காலையில் மட்டக்களப்பிலிருந்து தொடங்கிய நீர்வழிப் பயணம் கல்லாறு ஊடாக நற்பிட்டிமுனைக்கு வருகிறது. கல்லாறு முகத்துவாரத்தில் நீர்த்தடை சுவரை பார்வையிட்ட பின் இரவு 10:00 மணிக்கு நற்பிட்டிமுனை கிட்டங்கித் துறையை அடைகின்றனர். நற்பிட்டிமுனையில் அமையப்பெற்ற உயர் தரத்திலான விருந்தினர் விடுதி பற்றி இக்கட்டுரையில் குறிப்பிடப்படுகின்றது. நற்பிட்டிமுனை அரச நெற்களஞ்சியத்தை நிருமானித்தவரான பேனான்ட் அவர்களே இவ்விடுதியையும் அமைத்ததாகக் குறிப்பிடப்படு கின்றது. இவர்கள் தரைவழிப்பயணத்தில் உபயோகிப்பதற்கான பல்லக்கு மட்டக்களப்பிலிருந்து வேறொரு வள்ளத்தில் அனுப்பப்பட்டிருந்தது. அது நற்பிட்டிமுனைக்கு வந்து சேருவது தாமதமானதால் மறுநாள் பிற்பகல் 2:00 மணிவரை பிரடிக்ட் நோத் அவர்கள் நற்பிட்டிமுனை யிலேயே தங்கியிருந்தார். நற்பிட்டிமுனை இக்குறிப்பில் Nayapalamony எனக் குறிப்பிடப்படுவது

கவனிக்கத்தக்கது (James Cordiner A M,1807:135-136). இலங்கை ஆளுநர் மேன்மைதங்கிய பிரடிக் நோத் அவர்கள் ஏறக்குறைய ஒருநாள் முழுவதும் தங்கியிக்கும் வகையிலான விருந்தினர் விடுதி 1800களில் நற்பிட்டிமுனையில் காணப்பட்டமை இக்கிராமத்திற்குப் பெருமையே.

இலங்கை காலாற்படையின் 51ஆவது படைப்பிரிவின் அறுவைச் சிகிச்சை நிபுணரான தோமஸ் அன்டனி ரீடர் 1801 இல் ஜூலை 10ந் திகதி கிட்டங்கியூடாகப் பயணித்திருந்தார். இரு படகுகளை ஒன்றாக சேர்த்துக் கட்டிய அமைப்பில் இடைவெளியில் கூடார அமைப்பு செய்யப்பட்டு அதில் பல்லக்கு வைக்கப்பட்டிருந்ததாகவும் அதில் அவர் அயர்ந்து தூங்கி விட்டதாகவும் நற்பிட்டிமுனையை அடைந்த பின் தான் கண்விழித்ததாகவும் குறிப்பிடுவார் (James Cordinar A. M, 1807:145-146). நற்பிட்டிமுனை மக்களின் பண்புகள் பற்றி மிகவும் புகழ்வார் ரீடர். நற்பிட்டிமுனை Nayiapatamoona என இக்கட்டுரையில் குறிப்பிடப்படுகின்றது.

**10*th July*, 1801.** At half past six o'clock in the evening I left Batticaloe on a raft constructed of two large canoes joined together a considerable distance from each other, across which planks were laid; and a pandal was erected over it, under which my palanquin was placed, and I slept comfortably until we arrived at Nayiapatamoona, a distance of about thirty English miles. This place is delightfully situate at the extremity of the river, which is nearly a mile broad. The air is cool and pleasant, and the country abounds with game of all kinds. The people here are not only attentive and civil, but they wish to pay adoration to me. They insisted on supplying all my bearers and coolies with rice, and other articles, and would not accept of any money, although I endeavoured to persuade them as much as I could, and told them that I travelled at the expence

இக்கட்டுரையில் நற்பிட்டிமுனை மக்களின் பண்புகள் மற்றும் சூழல் என்பன பற்றி மிகவும் புகழ்வார் ரீடர். எந்தவிதமான பணத்தையும் வாங்க மறுத்து மக்கள் காட்டிய இன்முக உபசரிப்பும் நன்னயமும் மற்றைய ஊர்களைவிட நற்பிட்டிமுனை மீது மதிப்பை ஏற்படுத்துவதாக குறிப்பிட்டுள்ளார்.

இவற்றில் இருந்து நாய்ப்பட்டிமுனை என்ற உச்சரிப்பு அந்நிய ஆட்சியாளர்களின் பதிவுகளிலும் ஆவணங்களிலும் வேறுபட்ட வடிவங்களில் வழங்கப்பட்டிருப்பதையும் கவனிக்கலாம். 1695களில் ஒல்லாந்தர்களால் வரையப்பட்ட வரைபடங்களில் NayPatmonoene என இப் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. இன்னும் சில ஆவணங்களில் Naypatemone என இப்பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது. சிலர் "நெற்பிட்டிமுனை" என்பதுவே மூலப்பெயர் எனவும் வாதிடுவர். Julia Arrumounth அவர்களின் இலங்கை வரைபடத்தில் நற்பிட்டிமுனையை Waypattimoonne எனப் பதிவு செய்யப்படுகின்றது. 1874 இல் வெளியிடப்பட்ட Minutes of the Methodist conferences என்ற நூலில் கரவாகுப் பகுதிக்குரிய மெதடிஸ்த மதபோதகர் பிரிவாக நற்பிட்டிமுனை Naipatur எனக் குறிப்பிடப்படுகின்றது (Rev.John Wesley,A.M, 1874:310).

சேர் அலெக்சாண்டர் ஜோன்சன் பிரித்தானிய இலங்கையில் பிரதம நீதியரசராகப் பதவி வகித்தவர். அவர் 1806களில் திருகோணமலையில் இருந்து அம்பாந்தோட்டை வரைப் பயணம் செய்தார். அவர் தனது பயணக் குறிப்புகளில் 1806 நவம்பர் 12ஆந் திகதி புதன்கிழமை நற்பிட்டிமுனையூடாகப் பயணித்ததாகக் குறிப்பிடுவார். இவர் நற்பிட்டிமுனை என்பதை “Nayptemooney” என குறிப்பிடுகிறார் (Brohier R L, 1945:74).

1818களில் நற்பிட்டிமுனை ஒரு வர்த்தக முக்கியத்துவமிக்க இடமாகக் காணப்பட்டமை யையும் வணிகச் சிறப்புகளையும் கீழ் வரும் குறிப்பு காட்டுகின்றது.

From Neypattimony to Batticaloa, distance 17¼ miles, is an open road near the sea side, and very sandy, well cultivated with

[ 144 ]

Cocoanut, and some Palmyra trees; several populous villages; the inhabitants Malabars, and Moors, who appear to be very industrious and comfortable; Batticaloa is a considerable place, the residence of a Collector and a Military post with a small Fortress, situated on an Island in the lake, or river, that extends from Neypattimony and is navigable for Boats or Canoes, which are chiefly used for conveying the produce of the country from one part to another.

The traveller may be supplied here, with Fowls, Rice &c. in great plenty and at a very moderate rate.

(The Ceylon Calendar ,1818:143-144)

இங்கு நற்பிட்டிமுனையை மையப்படுத்தி மட்டக்களப்பை விபரிப்பதும், மட்டக் களப்புத் துறை நற்பிட்டிமுனையில் இருந்து உற்பத்திப்பொருட்களின் பரிமாற்றத்தைப் பெறுகின்றது என்கின்ற குறிப்பும் நற்பிட்டிமுனை வர்த்தக ரீதியில் முக்கியத்துவம் பெற்றமை யைக் காட்டுகின்றது.




[1695 இல் ஒல்லாந்தர்களால் வரையப்பட்ட வரைபடம்]

‘நாற்படைமுனை’, நாப்புட்டி’ என வழங்கப்பட்ட தனித்துவமிக்க பெயர் வழக்குகள் பல்வேறு திரிபுகளின் ஊடாக நற்பிட்டிமுனை எனத் தற்காலத்தில் வழங்கப்பட்டு வருகிறது எனத் தெளிவு கொள்ளலாம். நற்பிட்டிமுனையின் கேந்திர முக்கியத்துவமும், பன்னாட்டுப் பயணிகளாலும் இப்பெயர் பதிவு செய்யப்பட்டமையாலும் இத்தகைய மாறுபட்ட பெயர் வழக்குகள் அமைந்தன எனலாம்.

## 4.2 கிட்டங்கித் துறையும் நற்பிட்டிமுனையும்

மட்டக்களப்பு மண்ணை படுவான்கரை, எழுவான்கரை எனப் பிரிக்கும் மட்டக்களப்பு வாவியின் வடக்கு எல்லையாக பங்குடாவெளியும் தெற்கு எல்லையாக கிட்டங்கி துறையும் காணப்படுகிறது. இதில் வரலாற்றுக் காலத்திலிருந்து அரசரண் முக்கியத்துவமிக்க ஒரு இடமாக கிட்டங்கித்துறை விளங்கிவருகிறது. அதுமட்டுமன்றி பண்டப்பரிமாற்றம் மற்றும் போக்குவரத்து முக்கியத்துவமிக்க துறைமுகமாகவும் கிட்டங்கித் துறை காணப்பட்டது.

1877 காலப்பகுதியிலேயே கல்முனைக்கும் மட்டக்களப்புக்குமிடையிலான கிறவல் வீதி முதன்முதலில் இடப்பட்டது (Monograph of Batticaloa district, Canagaretnam S O,1921:73). அவ்வீதியும் கூட கல்லடி வரையுமே அமைந்திருந்தது. இதனால் 1924 ஆம் ஆண்டு கல்லடி பாலம் பூர்த்தி அடையும் வரையில் மட்டக்களப்புக்கான தரைவழிப் போக்குவரத்து கடினமா னதாகக் காணப்பட்டது. லேடி மெனிங் பாலம் எனப்படும் கல்லடிப் பாலம் அமைக்கப்படும் வரை முக்கியத்துவமிக்க ஒரே போக்குவரத்து மார்க்கமாக கிட்டங்கி துறை- மட்டக்களப்பு நீர்வழி மார்க்கமே விளங்கியது.

மலைநாட்டுப் பிரதேசங்களில் இருந்து கண்டி ஊடாக கொண்டுவரப்பட்ட வாசனைத் திரவியங்கள் உள்ளிட்ட பொருட்களும் கிட்டங்கி துறையூடாகவே கொள்கலன்களில் மட்டக்களப்பு வரை கொண்டு செல்லப்பட்ட குறிப்புகளைக் காண்கிறோம். அவை அங்கிருந்து கப்பல் வழியாக வெளிநாடுகளுக்கு கொண்டு செல்லப்பட்டன (நவநாயகமூர்த்தி நா, தினக்குரல் 12.04.2001, பக்.06).

கல்முனை மட்டக்களப்பு கிறவல் வீதி அமைப்பட்டமைக்கான நிதிப் பாதீட்டில் மனித வலுவுக்கான கொடுப்பனவே முக்கியத்துவம் பெற்றிருந்தது. பெரும் தொழில்நுட்ப வசதிகள் இல்லாத அக்காலத்தில் கூடைகளையும் மண்வெட்டிகளையும் மட்டும் கொண்டு நம் முன்னோர்களின் உழைப்பில் இந்த வீதி உருவாக்கப்பட்டது என்ற செய்தியே அது என்பதை நாம் மனங்கொள்ள வேண்டும்.

கிட்டங்கித் துறையின் மற்றொரு முக்கியத்துவம் மட்டக்களப்பு வாவியின் முடிவு அந்தத்துடன் பட்டிப்பளை ஆற்றின் கிளை இணைந்து கலக்கும் நிலவியல் முக்கியத்துவமிக்க பகுதி நற்பிட்டிமுனைக்கு நேராக அமைகிறது. பண்டைய மட்டக்களப்பு இராசதானி என கூறப்படுகின்ற சம்மாந்துறை ஒரு அரசரண்மிக்க இராசதானியாக விளங்குவதில் இந்த நிலவியல் சிறப்பு முக்கியத்துவமிக்கதாக நோக்கக்கூடியது. அகன்ற வாவிப்பகுதி மிக ஒடுங்கிய கிளையாறுடன் இணைந்து ஒடுங்கியதாக செல்வதால் நீர் வழியான பாரிய படை நகர்வுகளை தடுக்கக் கூடியதாக இவ்விடம் அமைகிறது. இங்கிருந்து சம்மாந்துறை வரை ‘சம்மான்’ எனப்படும் ஒருவகை ஒடுக்கமான ஆட்கள் பயணிக்கும் வள்ளங்களே செல்லக் கூடியதாக இந்த கிளையாறு காணப்பட்டமையை வரலாற்றுப் பதிவுகள் காட்டுகின்றன. (சம்மாந்துறை

எனும் பெயரும் இதுகுறித்து ஏற்பட்டதாக கொள்ளப்படுகிறது) 1602களில் இஸ்பில்பேகனின் வருகை குறித்த குறிப்புகளிலும் இந்த முக்கியத்துவம் பதிக்கப்பட்டுள்ளது. இத்தகைய முக்கியத்துவம் காரணமாக எதிரிகள் இலகுவின் நுழைந்து விடாத அரணாக சம்மாந்துறை இராசதானி அமையவும் திக்கதிபர் ஆட்சி தளமாக நற்பட்டிமுனை அமைந்தமைக்கும் இந்த முக்கியத்துவமே காரணமாகிறது. இந்த வகையில் அரசியல் முக்கியத்துவம் மிக்க ஒரு துறையாக கிட்டங்கித் துறையை குறிப்பிடலாம்.

மட்டக்களப்பில் குடியேறிய ஆரம்ப குடிகளாக கருதப்படும் குகன் வழி மரபினரான முக்குகர் மரங்களை இங்கிருந்து இந்தியாவுக்கு கொண்டு செல்லும் நோக்கில் அடிக்கடி பயணம் செய்தனர். பின் இலங்கையின் வனப்பில் கவரப்பட்டு இலங்கைக்குப் படையெடுத்து வந்தனர். இவர்கள் வாவியினூடாக இலங்கையின் கீழ்ப்பாகம் வந்தபோது ஒரு சதுப்பேரி காணப்பட்டது. அச்சதுப்பேரியினூடே தமது ஓடத்தைச் செலுத்தினர். இங்கு மண்செறிந்ததாக காணப்பட்ட முனையை மண்முனை என அழைத்தனர். தொடர்ந்து தென் திசை நோக்கி வள்ளத்தைச் செலுத்திய போது ஒரு குறுகலாகவிருந்த எல்லையில் ஓடம் சென்றதும் அப்பாற்செல்ல வழியில்லை. அதுகண்டு “இதுமட்டும் மட்டடா மட்டக்களப்படா” என்று கூறி நின்றனர் (நடராசா எவ். எக்ஸ் சி,1998:6-7). இப்பெயரே மட்டக்களப்பு என நிலைத்து விட்டதாக மட்டக்களப்பு மான்மியம் கூறுகிறது. இதன்வழி மட்டக்களப்பு என்ற பெயர் வழக்கு வழங்க காரணமான நிலம் கிட்டங்கி முதல் சம்மாந்துறை வரையான சதுப்பேரி ஆகும். இதுவே மட்டக்களப்பின் அடையாளம். இந்த அடையாள நிலம் பின்னர் மட்டக்களப்பு மாவட்டத்தில் இருந்து பிரிக்கப்பட்டு அம்பாறை மாவட்டம் எனும் புதிய நிருவாக அமைப்புத் தோற்றுவிக்கப்பட்டது.

பதினெட்டாம் நூற்றாண்டுகளின் தொடக்கத்தில் இலங்கையின் வர்த்தகச் செயற்பாடுகளில் செட்டிநாட்டு வணிகர்கள் பெரிதும் செல்வாக்கு செலுத்தினர். செட்டியார் மரபினர் இந்தியாவின் செட்டி நாட்டு (காரைக்குடி) பகுதியிலிருந்து வர்த்தக நோக்குக்காக இலங்கையில் குடிபெயர்ந்தவர்கள் ஆவர். கிட்டங்கி வீடுகள் மூலம் பண்டங்களை பரிமாற்றஞ் செய்தல், பணக் கொடுக்கல் வாங்கல் என்பவற்றில் பெரிதும் ஈடுபட்டனர். செல்லும் இடங்களில் முருகன் கோயில் காட்டும் வழக்கமும் இவர்களிடம் காணப்பட்டது. அந்தவகையில் அண்ணாமலை செட்டியார் இத்துறையில் கிட்டங்கி வீடுகள் அமைத்து தன் வியாபாரச் செயற்பாடுகளை மேற்கொண்டார் என்று அறியப்படுகின்றது. நற்பிட்டிமுனை கந்தசுவாமி கோயிலைக் கட்டியவரான இராமநாதன் ஆறுமுகம் அவர்கள் செட்டி நாட்டு வர்த்தகர்களுடன் சேர்ந்து கிட்டங்கித் துறை ஊடாக தேக்குமர வர்த்தகத்தில் ஈடுபட்டு வந்தமை பற்றிய குறிப்புகளையும் அவதானிக்கமுடியும். கிட்டங்கித்துறையின் வள்ளங்கள் கட்டும் பகுதி ஆரம்பத்தில் தற்போதைய விஷ்ணு ஆலயம் அமைந்துள்ள இடத்தில் அமைந்திருந்தது. அங்கு இறக்கப்படும் பொருட்கள் கந்தசுவாமி ஆலய வளாகத்தில் வைத்தே விற்கப்பட்டன (கந்தசுவாமி ஆலயம் குறித்த கையெழுத்துப் பதிவு, திகதியிடப்படாதது). பண்டமாற்று வர்த்தகமே பொதுவாகக் காணப்பட்ட அக்காலப்பகுதியில் பல்வேறு பொருட்கள் நெல்லுடன் பண்டமாற்று செய்யப்பட்டன. 1896 இல் கிட்டங்கி - சடையன் தளவாய் (சடேந்தலாவ) வீதி அமைக்கப்பட்ட பின்னர் (இலங்கை அரச வர்த்தமானி இல.5434 திகதி 1896.10.30) இறங்குதுறை மேற்கு சார்ந்து நகர்ந்தது.

உலகெங்கிலும் பல்வேறு நாடுகளில் செட்டிநாட்டு வணிகர்களின் கிட்டங்கி வீடுகள் காணப்பட்ட போதிலும் இது கல்முனை துறையை சிறப்பித்துக் கூறும் பெயராக எவ்வாறு நிலைத்து விட்டது என்பதில் சர்ச்சைகள் உள்ளன. பொதுவாக செட்டிநாட்டு வணிகர்களின் பண்டக சாலைகளை குறிப்பிடும் பெயராகவே கிட்டங்கி எனும் பெயரை அவதானிக்க முடியும். ஆயினும் கிட்டங்கித்துறை இப்பெயரைப் பெற்றது மட்டக்களப்பு ஒல்லாந்தத் தளபதியான பேர்னான்ட் அவர்களினால் இப்பகுதியில் அமைக்கப்பட்ட நெற்களஞ்சியசாலை (Paddy godown) காரணமாகவே என அதாவது godown என்பதன் திரிபே கிட்டங்கி என சில நூல்கள் (The journal of the Dutch burgher union Vol XIX, October 1929 : 94 ,(ம.) Monograph of Batticaloa district, Canagaretnam S O, 1921:80) குறிப்பிட்டுள்ளன. இதுபற்றி 1804களில் வெளிவந்த “The Military Panorama, Or, Officer’s Companion, Volume 4” (1814, p.319) எனும் இராணுவ அணியொன்றின் நகர்வு குறித்த நூற்குறிப்பில் கிட்டங்கி அமைந்துள்ள நற்பிட்டிமுனைக்கு எதிராக உள்ள சவளக்கடை என்னுங்குறிப்பைக் காணலாம். இது நற்பிட்டிமுனையில் நெற் களஞ்சியம் குறித்தே கிட்டங்கி என வழங்கப்பட்டமையை வலுப்படுத்துவது போல் உள்ளது.

**13th. Marched at half-past five along a path way about half a mile from the river, the ground on each side low and swampy, with a jungle on the right: at half-past six halted at a deserted village, called Savul-Cudde, immediately opposite to where the Godown of Naypattemone stood, distant three miles and a half from Panemalle. This day was employed in getting the guns and stores out of the paddy-boat.**

நற்பிட்டிமுனையில் அரச நெற் களஞ்சியம் தற்போதைய பொது மைதானம் அமைந்துள்ள இடத்தில் காணப்பட்டமையையும் சவளக்கடையில் அரச அரிசி ஆலை அமைந்திருந்தமையையும் குறிப்பிடவேண்டும். இந்த அரிசி ஆலை ஆங்கிலேயர் காலத்தில் அமைக்கப்பட்டதாக கூறப்படுகிறது.

வில்லியம் ஓர் (William Orr) அவர்கள் 1800களில் தங்காலையில் இருந்து மட்டக்களப்பு வரை பயணித்தார். இவர் தன் பயணக் குறிப்புளை விவரமாக எழுதியுள்ளார். இதில் செப்டெம்பர் 16ஆந் திகதி கிட்டங்கி ஆற்றினூடாகப் பயணித்துள்ள குறிப்புகளை பதிவிடுகின்றார். மரங்கள் செறிந்ததும் நீர் நிறைந்ததும் பயிர் வளமுள்ளதுமான இடங்களாக இப்பகுதியை அவர் குறிப்பிடுகின்றார். கிட்டங்கி இவரது குறிப்புகளில் Keetingie எனக் குறிப்பிடப்படுகின்றது (James Cordinar A. M , 1807:126).

ஆரம்ப காலங்களில் கிட்டங்கி துறை ஊடான போக்குவரத்தில் சாதாரண வள்ளங்களும் கட்டுமரங்களும் பயன்படுத்தப்பட்டு வந்தன. தோமஸ் அன்டனி ரீடர் 1801 இல் கிட்டங்கியூடாகப் பயணித்திருந்தார். இரு படகுகளை ஒன்றாக சேர்த்துக் கட்டிய அமைப்பில் இடைவெளியில் பல்லக்கு வைக்கப்பட்டிருந்ததாகவும் அதில் அவர் அயர்ந்து தூங்கி விட்டதாகவும் கிட்டங்கித் துறையை அடைந்த பின் தான் கண்விழித்ததாகவும் குறிப்பிடுவார் (James Cordinar A. M , 1807:145-146).

1891களில் மட்டக்களப்புக்கு கிட்டங்கி போக்குவரத்து சேவையில் ‘சாம்ரோக்’ (shamrock) எனப்படும் சிறிய நீராவிப் படகை திரு. ஓ.எஸ். டி ஓ’கிறாடி அறிமுகப்படுத்தினார். பின்னர் 1894களில் நீராவி படகை சேர். ஜோர்ச் டிப்ஸ் நிறுவனம் கிட்டங்கி மட்டக்களப்புக்கிடையில்

நடாத்தியது. எலைஸ் (Alice) எனப்படும் ஒருவகை மோட்டார் படகு 1901களிலிருந்து இங்கு சேவைக்கு விடப்பட்டது (Monograph of Batticaloa district, Canagaretnam S O,1921:20-21). அக்காலத்தில் மோட்டார் படகு சேவைக்கு விடுதலுக்கான கேள்விமனுக் கோரல் மற்றும் அஞ்சல் விநியோகச் செயற்பாடுகளுக்கான ஓட்ட வீரர்களை சேவைக்கு அமர்த்தல் என்பவற்றிற்கு பகிரங்க விளம்பரங்கள் அரச வர்த்தமானிகளில் கிட்டங்கி- மட்டக்களப்பு எனக் குறிப்பிட்டு செய்யப்பட்டதிலிருந்து இத்துறையின் முக்கியத்துவத்தை அறியலாம் (இலங்கை அரச வர்த்தமானி இல.5476 மே 21, 1897, இலங்கை அரச வர்த்தமானி இல. 5793, ஜூலை 26, 1901). 1921களின் பின் கல்லடிப் பாலத்தின் வரவுடன் கிட்டங்கி - புளியந்தீவு நீர் வழிப் போக்குவரத்தின் முக்கியத்துவம் படிப்படியாகக் குறையத் தொடங்கியது. ஆயினும் தொடந்து கிழக்கையும் மேற்கையின் கிட்டங்கியூடாகக் கடப்பதற்கு பாதை (Ferry) சேவையே பயன்பட்டது. (இலங்கை அரச வர்த்தமானி இல.8776 ஆகஸ்ட், 1941) 1949களின் பின்னரே கிட்டங்கி தாம்போதி அமைப்பதற்கான முன்னெடுப்புகள் கால்கோலிடப்பட்டன.

வணிக ரீதியிலும் ஆட்சிப்பாதுகாப்பிலும் முக்கியத்துவம் பெற்ற கிட்டங்கித் துறை இன்றுவரை முக்கியத்துவம் வாய்ந்த நீர்நிலை ஆகும்.

### 4.3 நற்பிட்டிமுனை அடக்கிய நிர்வாக ஒழுங்கமைப்புக்கள்

இலங்கை எங்கும் ஒருமுகப்பட்ட இராட்சியம் கி.மு மூன்றாம் நூற்றாண்டில் நிறுவப்பட்டது போல் தோன்றினாலும் விரிந்தும் சுருங்கியும் மாறுபட்ட பிரதேச ஆட்சி பற்றிய குறிப்புகளையே எங்கும் பார்க்க முடியும். (Hettiarachchi T, 1972 :144) இந்த நிலைமையே மட்டக்களப்பிலும் பொதுவாக காணப்பட்டது.

அக்காலத்தில் வடக்கே வெருகல் ஆற்றிலிருந்து தெற்கே மாணிக்க கங்கை வரை நீண்டு மேற்கே நடுக்காடு எனப்படும் வெல்லஸ வரை உள்ளடக்கிய பகுதியே மட்டக்களப்பின் எல்லையாகக் கூறலாம். (சிவசண்முகம் ஞா ,2000:01) அதிலும் கூட, சில காலங்கள் மட்டக்களப்புக்கு என்றமைந்த தனித்த ஆட்சி அதிகாரங்களும் சில காலங்களில் பொலநறுவை, அனுராதபுரம், கண்டி அரசுகளுடன் இணைந்ததான ஆட்சியையும் கொண்டதாக மாறுபட்ட ஆட்சி அதிகார எல்லைகளை பண்டைய மட்டக்களப்பு கொண்டு காணப்பட்டது. சில காலங்களில் யாழ்ப்பாணத்துடனும் அதன் ஆட்சி அதிகார முறைகள் தொடரப்பட்டிருந்தது. இதன் சிற்றரசர்களாக உன்னரசுகிரி, சம்மாந்துறை, போரதீவு ஆகியன மாறி மாறி ஆட்சி செலுத்தும் இருக்கைகளாக அமைந்திருந்தன.

கி.பி. முதலாம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியில் சம்மாந்துறையை மையமாகக் கொண்ட பகுதியில் ஆட்சி இருக்கை விளங்கியதாகக் கூறப்படுகிறது. இக்காலப்பகுதியில் நற்பிட்டிமுனை முக்கிய மிக்க திக்கதிபர் தளமாக விளங்கியது. பின்னர் உன்னரசுகிரி குறுநில அரசாக தோற்றம் பெற மட்டக்களப்பின் எல்லை மாணிக்க கங்கை வரைநீண்டு விடுகின்றது.

கலிங்கமாகன் கி.பி. 1215 இல் மட்டகளப்பு தேசத்தை ஏழு பிரிவுகளாகப் பிரித்தபோது நற்பிட்டிமுனை கரவாகுப்பற்றுப் பிரிவில் அமைந்திருந்தது. கி.பி பதினான்காம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உருகுணை அரசின் ஆதிக்கத்தில் மட்டக்களப்பு நான்கு பிரிவுகளாக காணப்பட்டது (வெல்லவூர்க் கோபால், 2016:57). இதில் நற்பிட்டிமுனை

மட்டக்களப்பு பிரிவில் அமைந்திருந்தது. மட்டக்களப்புப் பிரிவு கல்லாறு தெற்கெல்லை முதல் அக்கரைப்பற்று வரையான பகுதிகளை உள்ளடக்கியிருந்தது.

கி.பி. 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் கண்டி அரசின் கீழ் மட்டக்களப்பு கொண்டு வரப்பட்டபோது நான்கு நிர்வாகப் பிரிவுகளாக அது காணப்பட்டது. அதன்போது நற்பிட்டிமுனை, மட்டக்களப்பு (சம்மாந்துறை) நிர்வாகப் பிரிவின் கீழ்க் காணப்பட்டது (வெல்லவூர்க் கோபால், 2012: 90). 16ஆம் நூற்றாண்டில் மாருதசேனன் மட்டக்களப்பைப் பொலன்னறுவையுடன் இணைத்து அரசாண்டான். கலிங்க வம்சத்தைச் சேர்ந்த இவன் பணிக்கர் குலப்பெண்ணை மணந்திருந்தான். இவனது மகனான எதிர்மன்னசிங்கம் 1540களில் மட்டக்களப்பை ஐந்து பிரிவுகளாக வகுத்தான். அதன்போது நற்பிட்டிமுனை மட்டக்களப்புப் பிரிவில் அமைந்தது.

நீர்வழிப் போக்குவரத்து மார்க்கங்களே முதன்மையான போக்குவரத்து மூலமாக விளங்கிய அக்காலத்தில் கிட்டங்கி துறை மட்டக்களப்பு வாவியின் தென் எல்லையாகத் திகழ்ந்தது. இது கருதி கி.பி. முதலாம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியில் சம்மாந்துறையை மையமாகக்கொண்டு ஆட்சி இருக்கைகள் திகழ்ந்த காலப் பகுதியில் முக்கியத்துவமிக்க திக்கதிபர் தளமாக நற்பிட்டிமுனை விளங்கியது. திக்கதிபர் பிரிவு என்பது சிங்கள பிரதேசங் களில் காணப்படும் திசாவை பிரிவுக்கு சமமானதாகும். மன்னராட்சி காலத்தில் மன்னருக்கு அடுத்ததாக மந்திரிகள், பிரதானிகள், திக்கதிபர்கள், நிதி பிரதிநிதிகள் என பல்வேறு பதவி வழி கட்டமைப்புகளைக் கொண்டிருந்தது. பிரதேச மட்டத்தில் இந்த கட்டமைப்பு வன்னியனார், போடியார், ஊர்ப்போடி என்ற ஒழுங்கில் அமைந்திருந்தது.

1622களின் பின் மட்டக்களப்பைக் கைப்பற்றிய போர்த்துக்கேயர் பண்டைக்கால ஆட்சிமுறையை உள்ளூர் நிலைகளில் அப்படியே பின்பற்றினர். ஆயினும் அவர்களது காலத்திலேயே முதலியார் என்ற வகுப்பு முறைசார் நிருவாக அமைப்பாக உருவாக்கப்பட்டது (Yasmine Gooneratne 1970:116-123). அக்காலத்தில் பழுகாமம், போரதீவு, பாணமை, சம்மாந்துறை ஆகிய நான்கு வன்னியத் தலைமைகள் அவதானிக்கப்பட்டன என போர்த்துக்கேய வரலாற்றாசிரியர்களான பொக்காரோ (Bocarro) மற்றும் கேரோஸ் (Queyroz) குறிப்பிடுவர் (Abesinghe TBH trn., JRASS XXXIX, 1995:46). அதன் பின்வந்த ஒல்லாந்தர்களும் முதலி பட்டம் எனும் பதவியுடன் தமக்கு சார்பான மேற்பார்வையாளர்களை நியமித்து இருந்தனர். 1638இல் ஒல்லாந்தர் ஆட்சி மட்டக்களப்பில் நிலைகொண்ட போதிலும் உடனடியாக முழுமையான தலைமைத்துவத்தைச் செலுத்தாமையைக் காணமுடிகிறது. அவர்களின் கல்முனை வரையான நீடிப்பு 1670இன் பின்பே நிகழுகிறது(Scritto da Marco Ramerini ).

மட்டக்களப்பின் உள்ளூர் தலைமைகளாக இருந்த வன்னிமைகள் ஒல்லாந்தர்களின் சுயாதீனமான ஆட்சிக்கு தம் எதிர்ப்பைக் காட்டி வந்தனர். 1766இல் ஒல்லாந்தர் கண்டி மன்னர் உடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் அடிப்படையில் மட்டக்களப்பு முழுவதையும் தமது செயற்பாட்டின் கீழ் கொண்டு வந்தனர். இந்த ஒப்பந்தத்தின் பின் மட்டக்களப்பு பிரதேசம் இரண்டு நிலமைப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. கரவாகு, சம்மாந்துறை, அக்கரைப்பற்று பாணமை, உன்னரசுகிரி, வேகம்பற்று ஆகிய மட்டக்களப்பின் தெற்குப் பிரிவுக்கு கந்தப்போடி நிலமைப் போடியாக நியமிக்கப்பட்டார்.

இக்காலப்பகுதியில் மட்டக்களப்பு எட்டு பிரிவுகளாக ஆட்சி செய்யப்பட்டது. 1794 இல் மட்டக்களப்புக்குப் பொறுப்பு வகித்த பேணான்ட் அவர்கள் உள்ளூர்த் தலைமைப்

போடிகளுடன் இணைந்து விவசாய நடவடிக்கைகளில் ஈடுபட்டார் எனும் குறிப்புகளைக் காணமுடியும் (Schrikker, A. F, 2007:90 ). கூலிகளாக வேலை செய்ப்பவர்கள் முழுமையாகப் போடிகளின் கீழ் சுரண்டப்படுவதைத் தடுப்பதற்காக பேணான்ட் கணக்குப்பிள்ளை, கங்காணி ஆகிய உள்ளூர் பதவிகளும் பயன்பாட்டிற்குக் கொண்டுவந்தார் (Schrikker, A. F, 2007:89). மட்டக்களப்புக்கான ஒல்லாந்துத் தளபதியான பேர்னான்ட் (Jecob Burnand) தனது குறிப்புகளில் மட்டக்களப்பை முக்குவத் தலைமைகள் ஏறாவூர், மண்முனை, எருவில், போரதீவு, கரவாகு, சம்மாந்துறை, அக்கரைப்பற்று என ஏழு பிரிவுகளாக பிரித்து தமது குடும்பத்தினுள் அதிகாரங்களை வைத்து ஆட்சி செய்ததாக குறிப்பிடுவார் (Dennis Gilvery,2008: 67).

1796களில் வடக்கு கிழக்கு பகுதிகள் ஆங்கிலேயர் வசமாகியது. ஒல்லாந்தர் கடைப்பிடித்த அதே நிருவாக ஒழுங்குகளேயே ஆங்கிலேயரும் கடைப்பிடிக்க விரும்பினர். இதனால் ஒல்லாந்தர் காலத் தலைமைப்போடிகளே ஆங்கிலேயர் ஆட்சியிலும் பதவிகளைத் தொடர்ந்தனர். இதேவேளை உள்ளூர்த் தலைமைகள் கண்டி இராட்சியத்துடனும் தொடர்புகளைக் கொண்டிருந்தனர். ஆங்கிலேய நிருவாகத்தின் ஆரம்ப காலப்பகுதியில் இலங்கை மெட்ராஸ் நிர்வாகத்தினால் நிர்வகிக்கப்பட்டு வந்தது. 1798இல் இலங்கைக்கான முதலாவது ஆளுநராக மேன்மை தங்கிய பிரடிக்ட் நோத் அவர்கள் நியமிக்கப்பட்டார். யாழ்ப்பாணம், காலி, மட்டக்களப்பு, கொழும்பு என நான்கு கலெக்டர் பிரிவுகளாக வகுக்கப் பட்டிருந்தன (Kannangara P.D, 1964:134). இக்காலப்பகுதியில் மட்டக்களப்புக்கான கலெக்டராக திரு. ஹரோ என்பவர் நியமிக்கப்பட்டார். 1796-97 காலப்பகுதியில் அருமைப் பெருமாள் உள்ளூர்ப் போடிகளின் தலைமையில் ஆங்கிலேய ஆட்சிக்கு எதிராக கிளர்ச்சி செய்தனர். நற்பிட்டிமுனை அரச நெற்களஞ்சியம் இதில் முற்றாக எரியூட்டப்பட்டது (சிவராம் த,1993:14). இதன் காரணமாக போடிகள் பலர் பிரச்சனைகளை எதிர்நோக்கியத்துடன் அருமைப் பெருமாள் கைது செய்யப்பட்டு கொழும்புச் சிறையில் அடைக்கப்படுகிறார். இந்த வேளையிலே 'சட்டபூர்வமற்ற முறையிலான கைதுகள் தொடர்பான சிக்கலொன்றின் காரணமாக கப்டன் தோமஸ் ஐங் அவர்கள் ஹரோயின் இடத்திற்கு மட்டக்களப்பின் கலெக்டராக நியமிக்கப்பட்டார்' என்ற வரலாற்றுக்கு குறிப்பையும் தொடர்புபடுத்தலாம். 1803இல் அருமைப்பெருமாளின் சகோதரன் தியாகப்பர் முதலானோர் ஊவா திக்கதிபர்களுடனும் கண்டிய ஆதரவாளர்களுடனும் இணைந்து ஆங்கிலேயர்களுக்கு எதிராகப் போராடுகின்றனர். 1803 செப்டெம்பர் 3ஆந் திகதி நடைபெற்ற பாரிய சண்டையில் மட்டக்களப்புப் போராட்டக்காரர்கள் எட்டுப் பேர் கொல்லப்பட்டிருந்தனர் (Toussaint J.B, 1933:166 ).

1803 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் ஆங்கிலேயர்களின் 19 ஆம் படை பிரிவின் தளபதியாக கப்டன் ஆதர் ஜோன்ஸன் தலைமையிலான படை மட்டக்களப்பைக் கையகப் படுத்தியது. கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்த தலைமைப் போடிகள் பலர் கைது செய்யப்பட்டதுடன் பலர் கண்டிக்கு பின்வாங்கி செல்ல வேண்டியேற்பட்டது. பல போடிமார்களின் சொத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டன. இந்த சந்தர்ப்பத்தில் புளியந்தீவைச் சேர்ந்த தோன் பிலிப்பு இராசகாரிய பஸ்கால் முதலி முதலானோர் ஆங்கிலேயருக்கு விசுவாசமாக செயல்பட்டு போடிகள் பலரை சிறையில் அடைக்க காரணமானதுடன் பலரது சொத்துக்களையும் தன் வசப்படுத்தியமை பற்றிய குறிப்புகளும் இங்கு முக்கியமிக்கன (சிவராம் த,1993:14-15)..

இக்காலப்பகுதியில் மட்டக்களப்பில் இராணுவச் சட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டிருந்தது. ஆங்கிலேயத் தளபதி தமக்கு விசுவாசமான சில போடிமார்களையும் வன்னியர்களையும் வைத்துக்கொண்டு மட்டக்களப்பின் நிர்வாகத்தை செய்ய முற்பட்டார். தமக்கு விசுவாசமானவர்கள் பதவிகளுக்கு நியமிக்கப்பட்டனர். ஏனையோர் பதவி நீக்கம் செய்யப்பட்டனர் (சிவராம் த , 1993:15). ஆதரவான போடிகள், விதானமார், வன்னியர்கள் ஆகியோர் ஆளுநர் பிரெடிட் நோத் அவர்களுக்கு 1803 இல் ஆதரவு தெரிவிக்கும் கடிதம் ஒன்றை வரைந்திருந்தனர். இக்கடிதத்தை இலண்டனில் பதிப்பிக்கப்பட்ட The Asiatic Annual Register-1803 வெளியிட்டிருந்தது (The Asiatic Annual Register-1803 Chronicle:1804:13).

*To his Excellency the Honourable Frederic North, Governor, Captain-General, and Commander in Chief of the British Possessions on Ceylon.*

"We, the vidaans, vanien, podies in charge of provinces, podies of extensive landed property, and native inhabitants in general of the ten provinces that compose the district of Batticaloa, having heard that the glorious peace so lately made in Europe has placed us under the dominion of a sovereign whose many and great virtues have been long known, and finding ourselves protected by a constitution that places persons and property under the guardianship of laws, mild in themselves, and, as we have found them, admirably calculated to answer such ends; therefore beg leave to assure your excellency that we feel happy at being placed on the respectable footing, and in the enviable situation of English subjects.

"We are the more impressed by a strong sense of our happiness, as Providence has been pleased to place us within the influence of such laws, and knowing them to be administered by your excellency according to their true spirit.

"We are fully sensible that all your labours have been directed to the advancement of our happiness; we will carefully instruct our children to set a just value on your humane exertions; we will offer up our prayers for the preservation of our gracious lord and sovereign the King, who has been pleased to place you over us as our governor; that your Excellency may long continue so is the first desire of our hearts, and that desire is strengthened by our knowledge of the good qualities of your heart, and the honourable motives by which you are actuated. Our prayers shall daily be offered up to the throne of mercy for your Excellency's welfare and happiness."

Signed by all the native officers and inhabitants in the district of Batticaloa.

**1803இல் மட்டக்களப்பின் போடிகள், விதானைமார், வன்னிமைகள், ஆகியோர் ஆளுனர் பிரடிக் நோத்துக்கு ஆதரவு தெரிவித்து எழுதிய கடிதம்**

(Source : Asiatic Annual Register 1803 chronicle 1804:13)

1804களின் பிற்பகுதியில் மட்டக்களப்பின் கலெக்டராக சைமன் சேவர்ஸ் அவர்கள் பணியாற்றினார். இக்காலப் பகுதியில் கரவாகுப்பற்றுக்கான நிலைமைப் போடியாக முண்டப்போடி நியமிக்கப்பட்டிருந்தார் (A Collection of legislative acts of the Ceylon government from 1796-1833,1853:77). மட்டக்களப்புக்கான கலெக்டராக இருந்த சைமன் சேர்வஸ் இந்த நியமனத்திற்கு காலாயிருந்தார். பதவி நீக்கம் செய்யப்பட்ட போடிமார் 1812 களில் தேசாதிபதியிடம் மனுச் சமர்ப்பித்திருந்தனர். அதில் தாம் அநியாயமாக பதவி பறிக்கப்பட்டதாக தெரிவித்திருந்தனர். ஆயினும் இது குறித்து சைமன் சேர்வஸ் சமர்ப்பித்த அறிக்கையில் தம்மால்

கரவாக்குப் பற்றுக்கு நியமிக்கப்பட்ட தலைமை போடி மிகப் பழமையான முக்குவக் குடும்பத்தைச் சேர்ந்தவர். எனவே அவரது நியமனம் செல்லுபடியாகும் ஒன்று எனக் குறிப்பிடுகிறார்.

1802 முதல் பிரித்தானிய முடியாட்சியின் கீழ் இலங்கையின் நிர்வாகம் கொண்டு வரப்படுகிறது. சுதேச நிர்வாக அலகுகளும் முறைமைகளும் ஆரம்பத்தில் ஆங்கிலேயர்களால் அப்படியே நடைமுறைப்படுத்தப்பட்டது. இவ்வாறு கடைப்பிடிக்கப்பட்டு வந்த கிராம ஆட்சி முறை 1818களில் ஆங்கிலேய ஆட்சியாளர்களால் மாற்றியமைக்கப்பட்டது.

ஆங்கிலேயர்களும் தனது ஆட்சி அதிகாரங்களுக்கு முதலி எனும் வகுப்பை 1798 இல் இருந்து அறிமுகப்படுத்தினர். இது 1930 வரை தொடர்ந்தது. முதலிக்கு மேலதிகமாக வாடகை வரி அறவிடுவோர் அதிகார் என அழைக்கப்பட்டனர்.

1833 ஆண்டு ஒக்டோபர் 1ஆம் தேதி கோல்புறூக் கேமரூன் ஆணைக்குழு இலங்கையை மக்களின் மொழி கலாசாரம் என்பவற்றின் அடிப்படையில் வடக்கு, கிழக்கு, தெற்கு, மத்தி, மேற்கு என ஐந்து நிர்வாக மாவட்டங்களாக பிரித்தது. இதன் போது கிழக்கின் தலைநகராய் இருந்த திருகோணமலை 1870 இல் மட்டக்களப்புக்கு மாற்றப்பட்டது (Denham E.B, 1912:16). இதன்போது மட்டக்களப்பின் தெற்கு எல்லை குமுக்கன் ஆறு வரைச் சுருங்கியது. மட்டக்களப்பு மாவட்டம் 'வன்னிமைகள்' என அழைக்கப்பட்ட ஒன்பது நிருவாகப் பிரதேசங்களாக மேலும் பிரிக்கப்பட்டிருந்தன. இந்நிருவாகப் பிரதேசத்தின் தலைவராக வன்னிமுதலியார் (Chieftain) காணப்பட்டார். ஒவ்வொரு வன்னிமைப்பிரிவும் 'உடையார் பிரிவு' அல்லது 'கோறள' என அழைக்கப்பட்ட உப பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. இவ் உபபிரிவின் தலைவர் 'உடையார்' அல்லது 'கோறள' என அழைக்கப்பட்டனர்.

இக்காலப்பகுதியில் நற்பிட்டிமுனை கரவாகுப் பற்று வன்னிமை பிரிவின் கீழ் அமைந்தது. இது பிரதேச செயலாளர் பிரிவுக்குச் சமமான ஒரு நிருவாகப் பிரிவாகக் கூறக் கூடியது. பின்னர் இப்பிரிவு கரவாகு – நிந்தவூர் என இணைந்த பிரிவாக மாற்றியமைக்கப்பட்டது. 1871 ஆம் ஆண்டு இருபத்தாறாம் இலக்க கிராம சமூக சட்டமூலத்தின் படி கிராம சமூகங்கள் உருவாக்கப்பட்டன. இவை 1938 அதிகாரமிக்க கிராம சபைகளாக தோற்றம் பெற்றன. (Ceylon: Report of the special commission on the constitution,1928:12)

1892 ஆம் ஆண்டு 18 ஆம் இலக்க சட்டத்தின்படி சிறிய பட்டின சுகாதார சபைகள் (Sanitary Board) உருவாக்கப்பட்டன. இதன்படி, 1897 கல்முனை சுகாதார சபையின் நிருவகிப்பின் கீழ் நற்பிட்டிமுனை அமைந்தது.1900களின் ஆரம்பத்தில் கரவாகுப்பற்று வடக்கு 2ஆம் வட்டாரம் என்ற உள்ளூராட்சிப் பிரிவில் மருதமுனை, பாண்டிருப்பு, நற்பிட்டிமுனை, சேனைக்குடிருப்பு ஆகியன உள்ளடங்கியிருந்தன.1906 யூன் மாத அரச வர்த்தமானி மூலம் மருதமுனை தனி வட்டாரமாக பிரிக்கப்பட பாண்டிருப்பு, நற்பிட்டிமுனை, சேனைக்குடிருப்பு கொண்டதாக கரவாகுப்பற்று வடக்கு 2ஆம் வட்டாரம் அமைந்தது (இலங்கை வர்த்தமானி இல.6128 திகதி 29 ஜூன் 1906).

1920களில் சுகாதார சபை என்பது மாற்றப்பட்டு உள்ளூர் சபை என்ற அமைப்பு இரண்டு உடையார்களின் கீழ் இயங்குவதாகவும் அமைக்கப்பட்டது. இது நகர சபை, கிராம சபை, பொதுச்சபை கட்டமைப்புகளைக் கொண்டதாக இயங்கின. இதன் அடிப்படையில் கரவாகு மேற்குக் கிராம சபையின் கீழ் நற்பிட்டிமுனை ஏற்படுத்தப்பட்டது.

1931 டொனமூர் யாப்பு அறிமுகப்படுத்தப்பட்டபோது எருவில், போரதீவுப்பற்று, பாணமைப் பற்று, வேகம் பற்று என்பன உள்ளடக்கிய மட்டக்களப்பு தெற்குத் தேர்தல் தொகுதியில் நற்பிட்டிமுனை அடங்கியிருந்தது. கல்முனை நகர சுகாதார சபையின் எல்லைகளாக வடக்கு:நற்பிட்டிமுனை -கடல் வீதி, கிழக்கு: கடல், தெற்கு: சாய்ந்தமருது கிராமம், மேற்கு: நற்பிட்டிமுனை என்பன காணப்பட்டன (இலங்கை வர்த்தமானி இல.7904 திகதி 05.02.1932). 1936களில் கரவாகு மேற்கு உப பிரிவினுள் நற்பிட்டிமுனை , சேனைக்குடிருப்பு, துறைநீலாவணை,துரவந்தியமேடு ஆகிய கிராமங்கள் அடங்கியிருந்தன (இலங்கை வர்த்தமானி இல.8202, திகதி 14.02.1936). களுவாஞ்சிகுடி முதல் பாணமை வரையான பகுதிகள் உள்ளடங்கலாக மட்டக்களப்பு தெற்கு தேர்தல் மாவட்டமாக பிரிக்கப்பட்டிருந்தது (இலங்கை வர்த்தமானி இல.8196, திகதி 23.01.1936).

1946இல் 'வன்னிமை' நிருவாக முறைமை பிரதேச இறைவரி உத்தியோகத்தர் அல்லது பிரிவுக்காரியாதிகாரி (Divisional Revenue Officer) என அதிகார அமைப்பு முறை மாற்றியமைக்கப்பட்டது. கல்லாறு முதல் கழியோடைப்பாலம் வரையான நிலப்பிரதேசம் கரவாகு-நிந்தவூர் பற்று பிரிவு காரியாதிகாரியின் கீழ் நிர்வகிக்கப்பட்டது. 1946 சோல்பரி யாப்பு தனது தேர்தல் தொகுதியின் நிருணயத்தின் படி பட்டிருப்பு, கல்முனை, பொத்துவில் அடக்கிய பட்டிருப்பு தேர்தல் தொகுதியில் நற்பிட்டிமுனை உள்வாங்கப்பட்டது.

1946 ஆம் ஆண்டு மூன்றாம் இலக்க பட்டினசபைகள் கட்டளைச் சட்டத்தின் கீழ் பட்டின சபைகள் உருவாக்கப்பட்டன. 1947இல் கல்முனை பட்டின சபை உருவாகியது. இக்காலப் பகுதியில் பெரிய நீலாவணை, துறை நீலாவணை, துரவந்தியமேடு, சேனைக் குடியிருப்பு, நற்பிட்டிமுனை ஆகியன கரவாகு மேற்கு கிராமசபையினுள் அடங்கியிருந்தன.

1955 களில் மேலும் மாற்றங்கள் கொண்டுவரப்பட்டு இலங்கை 20 மாவட்டங்கள் பிரிக்கப்பட்டபோது மட்டக்களப்பு மாவட்டம் தற்போதைய அம்பாறை மாவட்டத்தையும் உள்ளடக்கியதாக தனி மாவட்டமாக இருந்தது.

1959 இல் தேர்தல் தொகுதி எல்லைகள் மீள் நிர்ணயத்தின் போது பொத்துவில், நிந்தவூர், அம்பாறை, கல்முனை, பட்டிருப்பு ஆகிய தேர்தல் தொகுதிகள் தனித்தனியாக்கப் பட்டது. இதன்போது பட்டிருப்புத்தொகுதியிலிருந்து இப்புதிய கல்முனைத்தொகுதியின் கீழ் நற்பிட்டிமுனை கொண்டுவரப்பட்டது. கரவாகுப்பற்றுப் பிரிவுக்கு தனியான காரியாதிகாரி பிரிவு (DRO division) உருவானது (தம்பியப்பா கோபாலகிருஷ்ணன், 2021).

கல்முனை தொகுதியானது கரவாகு தெற்கு கிராம சபை, கல்முனைப் பட்டின சபை, கரவாகு வடக்கு கிராம சபை, கரவாகு மேற்கு கிராம சபை என நான்கு உள்ளூராட்சி சபைகளாகப் பிரிக்கப்பட்டது. இதன்போது நற்பிட்டிமுனை கரவாகு மேற்கு கிராம சபையின் கீழ் அமைந்தது.இது ஏழு உறுப்பினர்களைக் கொண்டதாகக் காணப்பட்டது.தமிழ் உறுப்பினர்கள் தொகை நாலு ஆகவும், முஸ்லீம் உறுப்பினர்கள் தொகை மூன்று ஆகவும் காணப்பட்டது. ஆறாம் , ஏழாம் வட்டாரங்கள் நற்பிட்டிமுனை தமிழ் பிரிவில் காணப்பட்டன.

மட்டக்களப்பு தெற்கு தொகுதியில் அடங்கியிருந்த பொத்துவில், கல்முனை, நிந்தவூர், அம்பாறை ஆகிய பகுதிகளை உள்ளடக்கியதாக திகாமடுல்ல என்ற புதிய தேர்தல் தொகுதி 1960 மார்ச் 19 உருவாக்கப்பட்டது. 1961 ஏப்ரல் 10ஆம் தேதி மட்டக்களப்பிலிருந்து அதன் தெற்கு துண்டிக்கப்பட்டு அம்பாறை என்ற புதிய நிர்வாகம் மாவட்டம் உருவாக்கப்பட்டது.

1987ல் கிராம சபை முறை ஒழிக்கப்பட்டு பிரதேச சபை உருவாக்கப்பட்டது. நிருவாக அலகான இறைவரி உத்தியோகத்தர் பிரிவு அல்லது பிரிவுக் காரியாதிகாரி பிரிவு (DRO gpupT) முறை நீக்கப்பட்டுப் பதிலாக உதவி அரசாங்க அதிபர் பிரிவுகள் (Assistant Government Agents Divisions) 1978இல் ஏற்படுத்தப்பட்டபோது முழுக் கல்முனைத் தேர்தல் தொகுதியும் ஒரு தனியான ஒற்றை உதவி அரசாங்க அதிபர் பிரிவான கரவாகுப்பற்று (கல்முனை) உதவி அரசாங்க அதிபர் பிரிவின் கீழ் கொண்டுவரப்பட்டது. 1992 ஆம் ஆண்டு உதவி அரசாங்க அதிபர் பிரிவுகள் பிரதேச செயலகங்களாக தரம் உயர்த்தப்பட்டன (தம்பியப்பா கோபாலகிருஷ்ணன், 2021).

1987ம் ஆண்டின் 15ஆம் இலக்கப் பிரதேச சபைகள் சட்டத்தின் பிரகாரம் முன்பு அமுலில் இருந்த கிராம சபைகளும் பட்டின சபைகளும் இல்லாதொழிக்கப்பட்டன. இதன்படி உருவாக்கப் பெற்ற கல்முனைப் பிரதேசசபையின் கீழ் நற்பிட்டிமுனை நிர்வகிக்கப்பட்டு பின் 1998.12.11 ஆம் திகதிய 1057/16 ஆம் இலக்க அதிவிசேட வர்த்தமானி அறிவித்தல் மூலம் 1999.06.11ஆம் திகதி தொடக்கம் கல்முனை நகரசபையாகத் தரமுயர்த்தப் பெற்று அதன் பின்னர் மீண்டும் 11.06.2001 ஆம் திகதிய 1188/1 ஆம் இலக்க அதிவிசேட வர்த்தமானி அறிவித்தல் மூலம் 2002.04.15ஆம் திகதி தொடக்கம் மாநகர சபையாகவும் தரமுயர்த்தப் பெற்றது (தம்பியப்பா கோபாலகிருஷ்ணன், 2021).

1989 இல் கல்முனை வடக்கு உப பிரதேச செயலாளர் பிரிவு பிரிக்கப்பட்டு அதன் நிர்வாகிப்பின்கீழ் நற்பிட்டிமுனை கொண்டுவரப்பட்டது. கல்முனை வடக்கு பிரதேச செயலகத்தை தரம் உயர்த்தும் கோரிக்கைகளை அதன் ஆரம்பத்திலிருந்து மக்கள் முன்வைத்து வருகிறார்கள். ஆயினும் அரசியல் சதுரங்கத்தில் அதிகார திணிப்பு குறித்த சிந்தனை காரணமாக கல்முனை வடக்கு செயலகம் இன்று வரைக் கனியவில்லை.

## 4.4 நற்பிட்டிமுனையின் இயற்கை வள சிறப்பும் நிலக்காட்சிமையும்

#### நீர் நில வளங்கள்

நற்பிட்டிமுனை சுற்றிவர வயல் நிலங்களையும் அதனை அடுத்து வயல்வெளிகளை ஊடறுத்துச்செல்லும் பட்டிப்பளை ஆற்றில் கிளையாறையும் கொண்ட அழகிய கிராமமாகும். வளமிக்க நிலத்தையும் நீர்ப்பரப்புகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது. பட்டிப்பளை ஆற்றிலிருந்து தெற்காகவுள்ள வயல்கள் 'பள்ளத்து வயல்' என அழைக்கப்படுகின்றது. பட்டிப்பளை கிளையாற்றுக்கு வடக்காக ஊர் நோக்கியமைந்த வயல்களில் ஆற்றிலிருந்து நேரடியாக பாசணம் பெறுபவை தலைமாட்டு வயல்கள் எனப்படும். கால்மாட்டு வயல்நிலங் களுக்கு நீரைக் கொண்டு செல்வதற்காகப் பல பாகங்கைகளையும் இடையிட்டுக் காண முடியும். அதுவும் அழகு தரும் கட்டமைப்பாக விளங்குவன.

பட்டிப்பளை ஆறு மீன்பிடித்தல் மற்றும் நீர்த்தேவைகளுக்காக ஆரம்பகாலத்தில் பெரிதும் பயன்படுத்தப்பட்டு வந்தது. இதனால் பாகங்கைகள் ஆற்றுக்கு பயணம் செய்யும் வழியாகவும் இருந்தன. பெருக்குக் காலத்தில் பாகங்கைகளும் நீராடக் பயன்பட்டன. இற்றைக்கு இருபது முப்பது வருடங்களுக்கு முந்திய காலப்பகுதியில் வயல் நிலப்பகுதியில் முள்ளிக்காய், கொட்டிக் கிழங்கு, ஒல்லிக்காய் என்பவற்றை உணவுக்காக பெற்றுக்

கொள்ளும் இடமாகவும் விளங்கியது. தோணிகளில் வலைவீசி மீன் பிடிப்பது மட்டுமன்றி, கட்டுக் கரப்பு, வாளிக்கரப்பு, கொண்டடி முதலானவற்றின் மூலமும் மீன் பிடிக்கப்பட்டது. அத்தாங்கு கூனி பிடிப்பதில் பயன்பட்டது. இது தவிர சாப்பை, பன்புல் வகைகளும் இங்கு இயற்கையாக வளர்ந்தன. ஆற்றுக்கு மறுகரையில் நாணல் காடுகள் காணப்படுகின்றன.

இதில் முக்கியமான பாகங்கைகளாக கோயில் பாகங்கை, பாலத்துப் பாகங்கை, காலிப் பாகங்கை என்பன அதிகம் பேசப்படுகின்றன. பாலத்துப் பாகங்கை ஆற்றுடன் இணையும் இடத்தில் மரத்தாலான பாலம் ஒன்று முன்னர் காணப்பட்டது. ஆற்றுக்கு மறுபக்கம் காணப் பட்ட பள்ளத்து வயல்களுக்கு செல்வதற்கு இந்தப் பாலம் பயன்பட்டது. கோயில் பாகங்கை ஸ்ரீ கந்தசுவாமி ஆலயத்துக்கும் அருகில் முடிவடையும் பாகங்கை ஆகும். கோயில்களின் தீர்த்தோற்சவ நிகழ்வுகள் இந்த பாகங்கையில் நடைபெறுவதுண்டு. நற்பிட்டிமுனையின் கிழக்கு எல்லையில் கல்முனை வெளி வயல்கள் காணப்படுகின்றன. பட்டிப்பளை ஆறு இப்பகுதியில் சம்மாந்துறை நோக்கித் திருப்பமடையும். இப்பகுதியில் உள்ள ஆற்றின் கட்டு வண்ணவட்டுவான் கட்டு எனப்படும். (தாழை வட்டவான், வம்மி வட்டவான், கொன்றை வட்டவான், விழா வட்டவான், வண்ணை வட்டவான், வேப்ப வெட்டுவான் ஆகிய இடப்பெயர் களையும் அது மரத்துடன் தொடர்புபட்டு நிற்பதையும் காணலாம். அவற்றுக்கு அருகாகக் காணப்படும் குளங்களில் வாய்க்கால் மூலம் நீர் திருப் பப்படுதலையும் அவதானிக்கலாம். தாழை வட்டவான் சந்தி பெரிய குளத்தின் அருகாகக் காணப்படுவதையும் அறிவோம்).

நற்பிட்டிமுனையில் காரையடிக் குளம், வாலாட்டிக் குளம், பனையான் குஞ்சிக் குளம் முதலான சிறுகுளங்கள் காணப்பட்டன. குடியேற்றங்கள் காரணமாக தற்போது இந்தக் குளங்கள் அளவில் மிகச் சுருங்கி விட்டன. குளங்களை அண்டிய ஈர நிலம் இல்லாமல் போனதால் பல்வேறு தாவர, விலங்கு வர்க்கங்கள் இல்லாமல் போயின. குளங்களை அண்டியதாக திராய், பொன்னங்காணி முதலான கீரை வகைகள் இயல்பாய் வளர்ந்தன. இவை இன்று காணமுடியாமல் போய்விட்டதுடன் பல மூலிகைத் தாவரங்களும் அழிந்து விட்டன.

**மண்ணும் காலநிலையும்**

தாழ் நிலஉலர் வலயத்துக்குரிய வருடாந்த மழைவீழ்ச்சி 1100mm கொண்ட DL 2b வலயத்தில் நற்பிட்டிமுனை காணப்படுகின்றது. கல்சியம் குறைந்த கபில மண் (Non calcic brown soil), முதிராத கபில இருவாட்டி மண் (Immature Brown Loam) ஆகியவற்றையும் வண்டல் களி மண் (Alluvial) சார்ந்த மண்வகைகளை கொண்டதாக இப்பகுதி காணப்படுகிறது. வண்டல் மண் கொண்டதும் நீர்ப் பிடிப்புக்குரியதுமான பகுதிகள் நெற்செய்கைக்கு ஏற்றதாகக் காணப்படுகின்றது. மேட்டுநிலப் பயிர்களான கத்தரி, புகையிலை, மரக்கறிகள், காசுப்பயிர்கள் என்பனவும் மேற்கொள்ளப்படுகின்றன. தென்னை, பனை என்பவற்றின் வளர்ச்சிக்கும் உகந்ததாக உள்ளது (Moormann F.R, and Panabokke C.R 1961:11-36)

**குடிநீர்ப் பிரச்சினை**

நற்பிட்டிமுனை சுற்றிவர நீர் நிலைகளால் சூழப்பட்டுள்ளது. பல உள்ளகக் குளங் களைக் கொண்டு நெற்செய்கையிலும் தோட்டச்செய்கையிலும் மேம்பட்ட வளநிலமாகக் காணப்படுகின்றது. இருந்த போதிலும் உயர்நிலமாகவும் நிலங்கீழ் பாறைப்படையைக் கொண்டும் காணப்படுவதால் நிலத்தடி நீரைப் பெறுவதில் கடினத் தன்மை கொண்டபிரதேசமாக

காணப்படுகின்றது. இதனால் ஆரம்பகாலங்களில் வயலை அண்டிய பகுதிகளில் அமைக்கப் பட்ட பூவல், கிணறுகள் மூலம் கோடை காலத்தில் மக்கள் நீரைப் பெற்றுக் கொண்டனர். பின்னர் மரக் கொட்டுகள் பதித்த கிணறுகள் அமைக்கப்பட்டன. மக்கள் பெருக்கத்திற்கு ஏற்ப நீர்த்தேவைகளைக் கருத்தில் கொண்டு வயல்கரைகளில் பல்வேறு பொதுக்கிணறுகள் அமைக்கப்பட்டன. அரச செலவிலான பொதுக் கிணறுகள் 1940களில் அமைக்கப்பட்டிருந்மை பற்றிய குறிப்புகள் (அரச வர்த்தமானி இல.8591,1940.03.15ஆந் திகதியது) கிடைக்கின்றன. அதில் கீ. சின்னத் தம்பி அவர்களுக்குச் சொந்தமான புது வெளி வயல், புது வயல் கட்டு ஆகியவையும் கே.சின்னத்தம்பி, கே . பாலிப்போடி ஆகியோருக்குச் சொந்தமான கானடி வளவும் பொதுக்கிணறு அமைக்கப் பயன்பட்ட குறிப்புகளைக் காணலாம்.

1968இல் அப்போதைய ஐக்கிய தேசியக் கட்சி, தமிழரசுக் கட்சி ஆகியவற்றின் தேசிய அரசில் உள்ளூராட்சி அமைச்சராக இருந்த திரு. மு. திருச்செல்வம் அவர்கள் நற்பிட்டிமுனை–சேனைக்குடிருப்புக் கிராமங்களுக்கான குடிநீர்த்திட்டம் ஒன்றை அமைத்துக் கொடுத்தார். இத்திட்டத்தின் அப்போதைய மதிப்பீடு 350,000 ரூபாய் ஆகும்.(Estimates of the Revenue and Expenditure of the Government- 1968; Administration Report of the Director of Water Supply and Drainage, 1967)

வீதிகளில் பொதுக் குழாய்கள் அமைக்கப்பட்டன. பின்வந்த காலங்களில் அது மேலும் விரிவாக்கப்பட்டது. பொதுக்குழாய்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கப்பட்டன.




(1968 ஏப்ரல் 14 இல் உள்ளூராட்சி அமைச்சராக இருந்த திரு. மு. திருச்செல்வம் அவர்களால் நற்பிட்டிமுனை சந்தியில் திறந்துவைக்கப்பட்ட குடிநீர்த்திட்ட தாங்கியின் பெயர்க்கல்)

1995களில் ஒருங்கிணைந்த குடிநீர் வழங்கல் திட்டமொன்றினை தேசிய நீர்வழங்கல் வடிகாலமைப்புச் சபை அறிமுகப்படுத்தியது. பல்வேறு பிரயத்தனங்களின் விளைவாக ஆரம்ப கட்ட நீர்வழங்கல் திட்டத்தில் நற்பிட்டிமுனையும் உள்ளடக்கப்பட்டது. இதன் மூலம் ஒவ்வொருவரும் தங்கள் வீடுகளுக்கான குடிநீர் இணைப்புகளை பெறும் வசதி கிட்டியது. கொன்றைவட்டுவான் ஆற்றிலிருந்து நீர்வழங்கல்கள் மேற்கொள்ளப்பட்டன.

## நிலத்தோற்றக் கட்டமைப்பு மாற்றங்கள்

நற்பிட்டிமுனையின் நிலக்கட்டமைப்பு மாற்றங்களை பண்டைய காலத்தில் நிலவிய கதையாடல்கள் , நிலத்தடயக் குறிப்புகள் முதலானவற்றின் வழியே புரிந்துகொள்ள முடியும். வம்மியடி, பேயாலை, கல்லடிக்காடு, காட்டுக் கொலனி முதலான அடையாளங்களும் காரையக்குளம், வாலாட்டிக் குளம், பனையான் குஞ்சிக் குளம் முதலான நிலவடையாளங்களும் மக்கள் செறிவு குறைந்த காலத்தின் குடியமர்வு மற்றும் இடக்குறிப்பு பெயர்களாக இருந்தன. நடைவழிப்பயணங்களே பெரிதும் மேற்கொள்ளப்பட்ட பழங்காலத்தில் வீதிகளை விட வயலை அண்டிய கட்டுக்களை மக்களின் சுருக்கவழிகளாகப் பயன்படுத்தப்பட்டன. அதன் நிலவடையாளங்களாக வம்மியடி, பேயாலை என்பன குறிப்பிடப்பட்டன. சிறிய குன்றுகள் அதிகம் காணப்பட்ட கல்லடிக் காடு அல்லது கல்லடிவட்டை எனப் புழங்கப்பட்டது. சவக்காலைக்கு பின்னாக அமைந்த பகுதியில் புதிய குடியிருப்புகள் அமைக்கப்பட்டன. அது, காட்டுக்கோலனி எனப்பட்டது. மேற்கில் பூங்கொடிவட்டை அமைய பெற்றுள்ளது. (வட்டை என்பது வெளி என்பதைக் குறிக்கும் வெட்டை என்பதன் திரிப்பாகும்).

1949களில் நாட்டின் தென்கிழக்கு பகுதியில் உற்பத்தியை அதிகரிக்கும் வகையில் கல்லோயாத் திட்டம் அறிமுகம் செய்யப்பட்டது. இத்திட்டத்தின் முக்கிய அம்சமாக சேனாநாயக்க சமுத்திரம் அமைக்கப்பட்டது. இதன் மூலம் மொத்த நெற்செய்கை நிலத்தின் அளவை அதிகரித்த போதிலும் கரவாகுப் பற்று வயல் நிலங்களில் மேலதிக வடிச்சல் நீர் சேர்ந்தமையால் விவசாயம் சீரற்றுப்போகும் நிலைமை தோன்றியது. இதனால் ஒரு போகம் மட்டும் செய்கை பண்ணப்படும் நிலைமை கரவாகுப் பற்று வயல்களுக்கு ஏற்பட்டது. இத்திட்டத்தின் ஒரு பகுதியாக 1953-56 காலப்பகுதியில் நாடு காடு பற்று பிரதேசத்தில் பல குடியேற்றத்திட்டங்கள் அமைக்கப்பட்டன. விவசாயத்தை மையப்படுத்திய இப்பிரத் தேசத்தில் 1956களில் ஆரம்பிக்கப்பட்ட இக் குடியேற்றத் திட்டத்தின் மூலம் பயிச்செய்கை காணிகள் பகர்ந்தளிக்கப்பட்டன. இவ்வாறு உருவாக்கப்பட்ட நான்காம் கொலணி கிராமத்தில் நற்பிட்டிமுனை மக்கள் பெருமளவில் குடியேறினர். காணிப் பகிர்ந்தளிப்பைக் காரணமாகக் கொண்டு 1956இல் சிங்கள-தமிழ் குழப்பம் ஒன்று ஏற்பட்டது. குடியேற்றப்பட்ட பகுதியில் இருந்து மக்கள் துரத்தப்பட்டனர். பின்னர் ஒருவாறாக மக்கள் இப்பகுதியில் மீளக் குடியேறினர். 1990களில் மோதல்கள் வலுப்பெற அங்கு இனவாதமும் தாண்டவமாடியது. தமிழர்கள் பாரிய இழப்புகளைச் சந்தித்தனர். யுத்தம் காரணமாக இங்கு குடியேறியிருந்த மக்களின் பெருமளவானோர் மீண்டும் நற்பிட்டிமுனைக்கு குடிபெயர்ந்தனர். இதனால் நிலவியல் ரீதியாக நற்பிட்டிமுனையில் பல மாற்றங்கள் தோன்றின. குறிப்பாக காரையடிக் குளத்தை அண்டிய பகுதி மக்கள் செறிவான பகுதியாக மாறியது. இதனால் சன அடர்த்தி மாற்றமுற்றது.

**உசாத்துணை**


1. Abeyasinghe T.B.H, trt. , Journal of the Royal Asiatic Society of Sri Lanka, Vol XXXIX, 1996.
2. A Collection of legislative acts of the Ceylon government from 1796-1833, 1853
3. Administration Report of the Director of Water Supply and Drainage, Sri Lanka. Dept. of Water Supply and Drainage1967

4. Balthasar Floris van Berckenrode, Zelon in 't Historiael Journael, 1605, Allard Pierson, of 63–801, University of Amsterdam.
5. Bennet J. W, Ceylon and it's capabilities, 1843
6. Brohier R. L., THE SUPREME COURT ON CIRCUIT IN 1806: Alexander Johnston's Diary of a Tour, The Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society of Great Britain & Ireland, Vol. 36, No. 98 (1945), pp. 70-79
7. Brohier. RL, "when sinhalese king met danish admiral, Journal of the Dutch Burger union of Ceylon, Vol:51, January- June 1961
8. Canagaretnam S.O, Monograph of the Batticaloa District of the Eastern Province, Government printers, Ceylon 1921.
9. Ceylon: Report of the special commission on the constitution, 1928.
10. Danielle Dravon, "Candy is Now Flanders': Mapping Dutch Identity in the First Dutch Envoy to Ceylon" Bulletin of the John Rylands Library, Volume 95, No. 2 (Autumn 2019), pp. 43–62, published by Manchester University Press. http://dx.doi.org/10.7227/BJRL.95.2.3
11. Denham E. B, Census of 1911 ,Review of the results of Census of 1911, Colombo 1912.
12. Donald Furguson, The Earliest Dutch Visit to Ceylon, Asian Education Service, New Delhi , 1998.
13. Dennis Gilvery, Crucible of Conflict, 2008
14. Edward Thornton , A Gazetteer of the Territories Under the Government of the Viceroy of India (1886)
15. Estimates of the Revenue and Expenditure of the Government- 1968 , பரணிட்டது 2023.12.14 https://books.google.lk/books?id=tcy5AAAAIAAJ&q=Naipaddimunai&dq=Naipaddimunai &hl=ta&newbks=1&newbks_redir=1&printsec=frontcover&sa=X&ved=2ahUKE wjdiOrJvZa EAxU1n68BHVu5B5QQ6AF6BAgLEAI
16. Ferguson.J, Coconut planters manual (Practical Instruction for planting and cultivation), Colombo 1907
17. Gazetteer 49, Office of Geography, Dept. of the interiors, Washington DC, June 1960
18. Hettiarachchi T History of Kingship in Ceylon up to Fourth Century AD, Colombo ,1972
19. Indrapala K, The origin of the Tamil Vanni chieftaincies of Ceylon, The Journal of the Humanities, 120-139.
20. Kannangara P.D, The development of Ceylon Civil Service 1802- 1833, 1964.
21. Moormann F.R,and Panabokke C.R, "Soils of Ceylon", Tropical Agriculturist, Vol CXVIII, 1961.
22. Nicholas Bergman, The Ceylon Calendar,1818, Colombo.
23. Rev.John Wesley, A.M, Minutes of the Methodist conferences in 1744 published by London Wesleyan Conference office, 1874.
24. Rev. James Cordinar, A.M "A Description Of Ceylon,Containing an Account of the Country, inhabitants and natural productions"; Vol. II , London, 1807.
25. Simon Cassi Cheddy, The Ceylon gazetteer ,1838.
26. Scritto da Marco Ramerini , La storia di Batticaloa (Sri Lanka) durante la dominazione portoghese eolandero
27. Schrikker, A. F. (2007), Dutch and British colonial intervention in Sri Lanka, 1780- 1815: expansion and reform. Leiden: Brill. Retrieved from https://hdl.handle.net/1887/5419
28. The Asiatic Annual Register, for the year 1803, London, 1804.
29. The journal of the Dutch burgher union Vol XIX, October, 1929.

30. Toussaint J.B, The journal of the Dutch burgher union Vol XXII, No.4,1933.
31. The Military Panorama, Or, Officer's Companion, Volume 4" ,1814
32. The reports on the past and present states of her majesty's colonial possessions presented to house of parliament by command of her majesty, 1 June 1858.
33. Yasmine Gooneratne,"The Mudaliyar class of Ceylon:Its Origins, Advance and Consolidation, Widyodaya J. Arts, Sci., litt., Vo.l3 No.2, pp116-123, 1970
34. அரசரெத்தினம் எஸ், "கல்முனையில் தமிழர் ..", .2022
35. அரச வர்த்தமானி, இல.4904, 1889.01.11ஆம் திகதியது, இலங்கை
36. அரச வர்த்தமானி இல.5434 ஒக்டொபர் 30, 1896 ஆம் திகதியது, இலங்கை
37. அரச வர்த்தமானி இல.5476 மே 21, 1897ஆம் திகதியது, இலங்கை
38. அரச வர்த்தமானி இல. 5793, ஜூலை 26, 1901 ஆம் திகதியது, இலங்கை
39. அரச வர்த்தமானி, இல., 6128 , 29 ஜூன் 1906ஆம் திகதியது, இலங்கை
40. அரச வர்த்தமானி, இல.6168, 1907.02.01ஆம் திகதியது, இலங்கை.
41. அரச வர்த்தமானி இல.7904, 05.02.1932 ஆம் திகதியது, இலங்கை
42. அரச வர்த்தமானி இல.8145 செப்டெம்பர் 13, 1935 ஆம் திகதியது, இலங்கை
43. அரச வர்த்தமானி இல.8196, 23.01.1936 ஆம் திகதியது, இலங்கை
44. அரச வர்த்தமானி இல.8202, திகதி 14.02.1936 ஆம் திகதியது, இலங்கை
45. அரச வர்த்தமானி இல.8591,1940.03.15ஆந் திகதியது,இலங்கை
46. அரச வர்த்தமானி இல.8776 ஆகஸ்ட் , 1941 ஆம் திகதியது, இலங்கை
47. கமலாம்பிகை லோகிதராசா,பத்தும் பதியமும், 2012
48. கல்லாடனார் ,கல்லாடம், உரையாசிரியர் பழ. முத்தப்பன் , உமா பதிப்பகம் , சென்னை.
49. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், மட்டக்களப்புத் தேசம் வரலாறும் வழக்காடும், சேமமடு பதிப்பகம் 2016.
50. கவிக்கோ வெல்லவூர்க் கோபால் , மட்டக்களப்பு வரலாறு ஓர் அறிமுகம், மட்டக்களப்பு, 2011.
51. சிவராம். த , "16 ஆம் நூற்றாண்டில் மட்டக்களப்பு", மட்டக்களப்பு பிரதேச சாகித்திய விழா - நினைவுமலர், 9-10 ஆவணி 1993.
52. சிவசண்முகம் ஞா , மட்டக்களப்பு குகன்குல முற்குகர் வரலாறும் மரபுகளும், விபுலம் வெளியீடு 2000.
53. தம்பியப்பா கோபாலகிருஷ்ணன், " கல்முனை வரலாறு ஓர் அறிமுகம் ", கல்முனை நெற் பரிமாணம் 27பெப்ரவரி 2021 , 06 மார்ச் 2021, 13மார்ச் 2021 இதழ்கள்.
54. திருச்செல்வம் என்.கே.எஸ், தென்கிழக்கு இலங்கையின் பண்டைய இந்து சமய வரலாறு (பொ.ஆ.மு.5100 முதல் பொ.ஆ.1000 வரை), அகில இலங்கை இந்து மாமன்றம், 2015.
55. தேவநாயப்பாவாணர் ஞா, தமிழர் வரலாறு (இரண்டாம் பகுதி), தமிழ்மண் பதிப்பகம், சென்னை 1972.
56. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், மட்டக்களப்புத் தேசம் வரலாறும் வழக்காடும், சேமமடு பதிப்பகம் 2016.
57. பத்மநாதன் சி, வன்னியர், வரலாற்றுத்துறை, பேராதனைப் பல்கலைக்கழகம், 1970
58. நவநாயகமூர்த்தி நா, "தமிழர் நாகரீகம் செழித்திருந்த சம்மாந்துறைப் பிரதேசம்", தினக்குரல் நாளிதழ் 12.04.2001, பக்கம் 06, கொழும்பு .
59. நடராசா எவ். எக்ஸ் சி, மட்டக்களப்பு மான்மியம், 1998

# 05. நற்பிட்டிமுனையின் ஆட்சித் தள வரலாறு

இலங்கையின் ஆதிக்குடிகளாக இயக்கர்களையும் நாகர்களையும் வரலாற்றில் காண்கிறோம் . கி.மு. 5000 தொடக்கம் 1500 வரை திராவிடர்களாகிய இயக்கர் நாகர்களின் ஆட்சியே இலங்கையில் மேலோங்கியிருந்தது (நா. நவநாயகமூர்த்தி, 2002:26). இராமாயணம் கி.மு. 1300 களில் நடைபெற்றதாக ஆராய்ச்சியாளர்கள் கருதுவர். இதன் பின் வந்த சில நூற்றாண்டுகள் இலங்கைத் தீவு ஆட்சியின்றி அழிவடைந்து காணப்பட்டது (நா. நவநாயகமூர்த்தி, 2002:27).

ஆயினும் கி.மு. 7ஆம் 6 ஆம் நூற்றாண்டுகளில் இலங்கையில் நாகர் குடியினரின் செல்வாக்கு, தீவு முழுவதும் வியாபித்திருந்தது. இவர்கள் பல்வேறு இடங்களிலும் ஆட்சி செய்ததாகவும் அறிய முடிகின்றது (நா. நவநாயகமூர்த்தி,2002:27).

இலங்கையின் வரலாற்றுக் காலத்தின் தொடக்கத்திலிருந்து நற்பிட்டிமுனை திக்கதிபரின் ஆட்சித்தலமாக இருந்தது. கூத்திகனதும், அவன் மகன் சேனனினதும் ஆட்சிக்காலங்களில் “இராசாக்கள் கூடும் இடங்களில் ஒன்றாக இப்பதி விளங்கியதாக மட்டக்களப்பு மான்மியம் (நடராசா எவ். எக்ஸ் சி, 1998: 24) குறிப்பிடுகின்றது. இது கி.மு 236-214 காலப்பகுதியாகும் என வரையறை செய்வார் கவிக்கோ வெல்லவூர்க் கோபால் (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2016:05). இக்காலப் பகுதியை கி.மு. 177 - 155 காலப்பகுதியாக நவநாயகமூர்த்தி காட்டுவார் (நா. நவநாயகமூர்த்தி, 2002:37) ஆகவே கி.மு மூன்றாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட ஆட்சித்தள மற்றும் குடியியல் வரலாறு கொண்ட பழம்பெரும் பதியாக நற்பிட்டிமுனை விளங்கியமை உறுதியாகின்றது. மட்டக்களப்பின் முதல் குடியேற்றமாகக் கூறப்படும் கலிங்ககுக மரபினரின் குடியேற்றம் நிலைபெற்ற இடங்களில் ஒன்றாக நற்பிட்டிமுனையைக் கொள்ள முடியும். ஞா. சிவசண்முகம் தனது மட்டக்களப்பு குகன்குல முக்குகர் வரலாறும்

மரபுகளும் (2000:04) என்ற நூலில் திருக்கோயில் பகுதியில் கிடைக்கப்பெற்ற கல்வெட்டுப் பாடல் ஒன்றை ஆதாரம் காட்டி கலிங்ககுக மரபினரின் காலம் கி.மு. 261 எனக் கூறுவார். இதனை உறுதிப்படுத்தும் வகையில் சரித்திர ஆய்வாளர் என்.கே.எஸ். திருச்செல்வம் “நற்பிட்டிமுனைக் கிராமம் கூத்திகன் காலத்திலும் அதற்குப் பின்னாக சோழர் காலத்திலும் குடியேற்றங்கள் நிகழ்ந்த இடம் எனத்தன் ஆய்வின் முடிவுகளை முன்வைக்கின்றார் (தென்கிழக்கு இலங்கையின் பண்டைய இந்து சமய வரலாறு (பொ.ஆ.மு.5100 முதல் பொ.ஆ.1000 வரை), 2015:43-44).

சேனனது வம்சத்தின் ஆட்சி வீழ்ச்சியடைந்தபின் இயக்கர்கள் விந்தனையை தலை நகராகக் கொண்டு கலிங்கர், சிங்கர், வங்கர் ஆகிய முக்குலத்தவரையும் அடக்கி முப்பது வருடங்கள் ஆட்சி செய்தனர் என மட்டக்களப்பு மான்மியம் (நடராசா எவ். எக்ஸ் சி, 1998:24) கூறுகின்றது. இக்காலப்பகுதியில் இப்பிரதேசத்தில் அதிகார வீழ்ச்சி காணப்பட்டமையும் பதிவாகின்றது. கி. மு 205 க்குப் பின் எல்லாள மன்னனின் ஆட்சிக்கு உட்பட்டதாக இப் பிரதேசமும் இருந்தது. இது குறித்தும் சில கால வேறுபாடுகள் காணப்படுகின்றன. எல்லாளனின் காலம் கி.மு. 145 - 101 வரை என சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர் (நா. நவநாயகமூர்த்தி, 2002:37). எல்லம் என்பது ஈழம் என்பதன் ஒரு திரிபாக கொள்ளப்படுகிறது. பாளி இலக்கியங்கள் சில இவனது பெயரையே எலரா எனக் குறிப்பிடுகின்றன. ஈழராஜா என கலாநிதி வேலுப்பிள்ளை இதனைக் கூறுகிறார் (குணராசா க,2000:26). ராஜா என்பதன் இன்னுமொரு வடிவம் ஆளன்- ஆள்பவன். இதிலிருந்து எல்லாளன் என்ற பெயர் வரவு ஒரு தனித் தமிழ்ப் பெயராக கொள்ளக்கூடியது.

கி.மு 82களுக்குப் பின்னர் சிறிகுலனுடைய ஆட்சிக்காலத்தில் குருகுல நாகர்களுடைய ஆட்சி மட்டக்களப்பில் நிலை கொள்ளுகின்றது (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2016:05). கி.பி 48இல் மனுநேய கயவாகுவின் காலத்தில் நாகர்முனை எனப்படும் திருக்கோயிலில் சித்திர வேலாயுதர் ஆலயம் புனர்நிருமானம் செய்யபட்டமையும் அதில் தேசத்தின் சிற்றரசர் களும் வன்னியர்களும் பதவி வழி முன்னிலைப்படுத்தப்பட்ட குறிப்புகளையும் மட்டக்களப்பு மான்மியம் சுட்டிக் காட்டுகின்றது (நடராசா எவ். எக்ஸ் சி, 1998:30-31). மருதசேனன் (கண்ணாப்போடி) மட்டக்களப்பு முழுமையையும் பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தன்கீழ் கொண்டுவருகிறான். அவனது இரண்டாவது திருமணம் மற்றும் இரண்டாவது மனைவி மூலமான மகன் கிருஸ்தவ மதத்தைத் தழுவியது குறித்த காரணங்களால் திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயத்தில் தலைமைப்பொறுப்பில் அவன் நீக்கப்படுவதுடன் ஆட்சிப்பொறுப்பும் மூத்த மனைவி மூலமான மகனான எதிர்மன்னசிங்கனிடம் செல்கிறது (வெல்லவூர்க் கோபால் 2011:31-32). எதிர்மன்னசிங்கன் தாய்வழி பணிக்கனார் குடியைச் சார்ந்தவன். இந்த மரபு வழி நடைமுறைகளின் தொடர்ச்சியாக நற்பிட்டிமுனை வன்னிமை கோத்திரத்தாரின் தலைமைத்துவம் இப்பிரதேச ஆலயங்களில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

வீ.சி கந்தையா அவர்கள் ‘மட்டக்களப்பு சைவக் கோயில்கள்’ எனும் நூலில் குறிப்பிடுவது போல “திருப்படைக் கோயில்களில் காவலர்களாகவும் மட்டக்களப்புத் தேச வன்னிமைகளாகவும் முக்குவர் குலப்பிரபுக்களே சாசன ரீதியான அதிகாரம் கொண்டவர்களாக காணப்பட்டனர் (கந்தையா வீ. சி, 1983:03). அந்த வகையில் திருக்கோயில் சித்திரவேலாயுதர் கோயில், பாண்டிருப்பு திரௌபதி அம்மன் கோயில், நற்பிட்டிமுனை - சேனைக்குடியிருப்பு

ஆதிமாகாளி கோயில், நற்பிட்டிமுனை கணேசர் ஆலயம் ஆகியவற்றுக்கு சாசன ரீதியான தலைவர்களாக நற்பிட்டிமுனையை அடிப்படையாகக் கொண்ட வன்னிய கோத்திரத்தார் விளங்குகின்றனர். இந்த வகையில் திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயத்தின் தலைமைப் பொறுப்பை நற்பிட்டிமுனை தாய்வழிப் பணிக்கனார் குடியைச் சேர்ந்த வன்னிமை கோத்திர மரபினர் வகித்துவருகின்றனர்.

இதுவரை நமக்குக் கிடைக்கக்கூடிய ஆவணங்களின் அடிப்படையில் திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயத்தில் தலைமைப் பொறுப்புகளை வகித்த நற்பிட்டிமுனை வன்னிமைகள் வருமாறு:

1803 ஆலய தலைவராக நிலைமைப்போடி பெரிய கரவாகு போடி அவர்கள் தலைமை வகித்தார். குயவன்வெளிக் காணி 21 ஏக்கரை இவர் தம்பிலுவில் சித்தரவேலாயுதர் சுவாமிக்கு தர்மசாசனம் எழுதி வைத்தார் என அறியமுடிகின்றது. பின்னர் நிலைமை போடியாக இருந்த வையாளிப் போடி தலைமை தாங்கினார். 1820 களில் வை.சின்னத்தம்பிப் போடியார் கோயில் வன்னிமையாகச் செயற்பட்டார். அதனைத் தொடர்ந்து சத்துருக்கப்போடி வன்னியர் ஆலயத் தலைமை பொறுப்பை ஏற்றார். பின்னர் வீமாப்போடி உடையார் தலைமையில் ஆலயம் செயற்பட்டது. தொடர்ந்து ச. சின்னத்தம்பி வன்னியனார் நிலமைப் போடியாகவும் கோயில் வன்னியனாகவும் செயற்பட்டார். 1918 ச. சின்னத்தம்பி வன்னியனார் மரணமானார். அதனைத் தொடர்ந்து நற்பட்டிமுனை ஸ்ரீ கணேசராலயம், சேனைக் குடியிருப்பு பத்திரகாளியம்மன் ஆலயம், பாண்டிருப்பு திரௌபதியம்மன் ஆலயம் ஆகியவற்றின் மரபு வழித் தலைமைத்துவம் அவரது தம்பியான செல்லையா வன்னியனாருக்கு வழங்கப்படுகிறது. ஆயினும் திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயத்தின் தலைமைப்பதவி ச.சின்னத்தம்பி வன்னியனாரின் நோய் நிலைமையைக் காரணமாகக் கொண்டு 1914இல் K.V. மார்கண்டு என்பவருக்கு வழங்கப்பட்டது. அவரது பதவிக்காலம் 1936 வரை இருந்தது. 1936இல் செல்லையா வன்னியனார் சித்திரவேலாயுதர் சுவாமி ஆலயத்தின் தலைவரானார். (கணபதிப்பிள்ளை சி, 1979:37-42) தொடர்ந்து செ. சபாரெத்தினம், க. இரத்தினசிங்கம், தி. சேதுபதிப்பிள்ளை, த. சிவநேசராஜா, த.ஜெயக்குமார், த.ரவிராஜ், மு. மகாலிங்கம், அ. பிரசாந்தன் பின்னர் சு. சுரேஷ் ஆகியோர் கோயில் தலைமை களாகப் பதவி வகித்தனர். (திருக்கோயில் சித்திரவேலாயுதர் சுவாமி ஆலயப் பதிவேடு)

மாகோன் வகுத்த அரனூழிய முறைமைகளிலும் வன்னிய கோத்திரத்தார் முக்கியப்படுத்தப் படுகின்றார்கள். அந்நிய ஆதிக்கம் தொடங்கிய இடைமுகமாக கொள்ளக்கூடிய எதிர்மன்னசிங்கன் காலத்தில் நற்பிட்டிமுனை பணிக்கர் குடி முதன்மை பெறுவதை தாதன் கல்வெட்டில் இருந்தும் அறிந்துணரலாம். எதிர்மன்னசிங்கன் தாய்வழியில் பணிக்கர் குலத்தைச் சேர்ந்தவன் என்பதால் பணிக்கர் குலம் மட்டக்களப்பின் தெற்கே பல வழிகளிலும் முதன்மை பெற காலாகினான். எதிர்மன்னசிங்கன் காலத்தில் அண்ணாமலைச் செட்டியார் நற்பிட்டிமுனையின் மேற்குப்பகுதியில் கிட்டங்கி வீடுகள் அமைத்து வர்த்தகம் செய்த குறிப்பை மட்டக்களப்பு மான்மியத்தில் காண்கிறோம். அண்ணாமலைச் செட்டியார் வழிவந்த செட்டிகள் நற்பிட்டிமுனை கல்லடிவெட்டைப் பகுதியில் இராமநாதன் ஆறுமுகம் அவர்களுடன் இணைந்து வர்த்தக நோக்கில் தேக்கு மரக் காடுகள் வளர்த்து வாணிபம் செய்ததாகவும் இராமநாதன் ஆறுமுகம் அவர்களே நற்பிட்டிமுனை கந்தசுவாமி ஆலயத்தை உருவாக்கி நிருவகித்ததாகவும் ஆலய வரலாற்று ஆவணம் ஒன்று தெரிவிகிறது (கந்தசுவாமி ஆலயச் சாசனம், 1862 )

தாதன் கல்வெட்டு, களுதேவாலயக் கல்வெட்டு மற்றும் செவிவழிக் கதைகள் முதலியன வன்னியர் கோத்திரமான பணிக்கனார்குடி பற்றிய குறிப்புகளைத் தருகின்றன. தாதன் கல்வெட்டின் படி பாண்டிருப்பு திரௌபதி அம்மன் ஆலயத்தின் தலைமைத்துவ முன்னீடு பணிக்கர் குடியினருக்கு வழங்கப்படுகின்றது. இந்த நடைமுறை பெண்ணடி முதுசமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. தாதன் கல்வெட்டில் குறித்த பகுதிகள் இதனைப் பின்வருமாறு குறிப்பிடும்.

...அடுக்கு முறையோ டரவான் களப்பலியும்
பத்ததி போற் காட்டி பணிக்கன் குலத்தோர்க்கு
உற்ற புகழ் மேவ உங்களுக்கே முன்னீடு
ஈந்தேனிலங்கை எங்குமுயர்ந்தோங்க
ஆய்ந்து பணி செய் கென் றகல மன்னனப் பொழுது
(நடராசா எவ். எக்ஸ் சி, 1998:92)

இதன் அடிப்படையில் நற்பிட்டிமுனை மரபினரான பணிக்கனார்குடி வழிவந்தவர்கள் பாண்டிருப்பு திரௌபதி அம்மன் ஆலய தலைவர்களாக இருந்து வந்துள்ளனர்.

களுதாவளைப் பிள்ளையார் கோயில் சுயம்புலிங்க வரலாறு குறித்த குறிப்புகளில் “இந்தியாவிலிருந்து கதிர்காம யாத்திரைக்காக வந்த காளிதாஸ் எனும் பக்தர் கையுடன் கொண்டுவந்த வேலை வைத்து வழிபட்டமை பற்றியும், அதை அறிந்த மட்டக்களப்பின் தென்பாலுள்ள நற்பிட்டிமுனை வன்னியர், வேலையும் காளிதாஸ் அவர்களையும் தன்னிடம் கொண்டு வரும்படி கட்டளை இட்டதாகவும் அதற்கு பயந்து வேலை மறைத்துவைத்துவிட்டு சென்றதாகவும் பின்னர் சென்று பார்த்தபோது அவ்விடத்தில் பிள்ளையார் லிங்கம் காணப் பட்டமை பற்றியும் அதுவே களுதாவளை பிள்ளையார் கோவிலாக அமைந்ததாகவும் ஆலய வரலாறு கூறுகின்றது (கந்தையா வீ.சி,1997 :99). களுதாவளை பிள்ளையார் ஆலயக் குறிப்புகளின் படி இவ்வாலயம் தோற்றம் பெற்ற காலம் 17ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியாகக் கொள்ளலாம்.

போர்த்துக்கேயரை நாட்டைவிட்டு வெளியேற்றும் முயற்சியில் ஒல்லாந்து பிரதிநிதியு டனான முக்கிய கலந்துரையாடல் ஒன்றுக்காக நம்பிக்கைமிக்க பயணப்பாதையாக கல்முனை யில் இறங்கிய ஜான் சைத்தன் அவர்கள் நீர் மார்க்கமாக சம்மாந்துறை சென்று அங்கிருந்து பங்கரகம்மானயில் கண்டி அரசனைச் சந்திக்கின்றான் (JDBU,No.55 1904:171). நற்பிட்டிமுனை அரண்மிக்க பயணப்பாதையாகவும் அரசனுக்கு நம்பிக்கைமிக்க இடமாகவும் அமைந்திருந்தமை இதிலிருந்து புலனாகின்றது.

1800களில் நற்பிட்டிமுனை மக்கள் செறிவு மிக்க பெருங்கிராமமாக இருந்ததாகவும், இதுவே மட்டக்களப்புடன் நேரடி போக்குவரத்துத் தொடர்புகளைக் கொண்டிருந்ததாகவும் சைமன் காசிச் செட்டி தனது Ceylon Gazetteer நூலில் குறிப்பிடுகின்றார். இந்நூல் 1834 இல் வெளிவந்தது.

***Naypattimooné*, a large and populous village, 17 miles south east of Batticalo, situated on the banks of the lake which runs up from the above town. It has a large store-house for paddy.**

Source: Ceylon Gazetteer pp171

இவரது மற்றொரு குறிப்பில் மட்டக்களப்பு வாவி பற்றி கூறும் போது நற்பிட்டிமுனையினால் எல்லைப் படுத்தப்பட்டு நீட்சியுற்றுவரும் வாவி எனும் குறிப்புள்ளது.

***Batticalo*, the chief town, and seat of the collector and provincial judge of the preceding district, is situated on an island 7° 45' north latitude, and 81° 50' east longitude. It is about three miles and a half in circumference, and is called by the natives Puliantive. The lake, or arm of the sea by which it is insulated, extends from the village of Nayapattimoone, and is navigable for the country boats. It has a small square fort, built of coral stones, in which there is only a low barrack, a granary, a magazine, and a dwelling house for the commandant. The collector's house lies without the fort; and the village stands a few hundred yards from it, almost embosomed in topes of cocoanut trees. Though the streets cannot boast of regularity, nor the houses of grandeur or neatness, still the**

Source: Ceylon Gazetteer pp21

1843இல் J. W பென்னட் என்பவர் எழுதிய குறிப்புகளில் (Ceylon and its Capabilities:2k) மட்டக்களப்புக்கு அடுத்த பயண மையமாக நற்பிட்டிமுனையைக் குறிப்பிடுவதும் இங்கு ஏற்றுக் கொள்ளத்தக்க தரத்திலான ஓய்வுவிடுதி உள்ளது என்று பதிவுசெய்வதும் நற்பிட்டிமுனை முக்கியமிக்க பயண வழியாக விளங்கியமையை எடுத்துக் காட்டுகிறது.

ஆங்கிலேய ஆட்சிக்காலத்தில் இலங்கையின் ஆட்சி மற்றும் நிருவாகச் செயற்பாடுகள் பற்றிய குறிப்புகளை வருடாந்தம் தொடர்ச்சியாக அறிக்கைகளாக வெளியீடு செய்து வந்தனர். அவை, காலத்துக்குக் காலம் பின்வரும் வெவ்வேறு பெயர்களில் வெளிவந்தன. அவை பின்வருமாறு அமைந்திருந்தன.

1814- 1839 : The Ceylon Calendar for the Year of Our Lord
1833- 1839 : The Ceylon Almanac and Compendium of useful information
1840- 1843 : The Ceylon Calendar and Compendium of Useful information
1844- 1850 : The Ceylon Almanac and Compendium of useful information
1851- 1862 : The Ceylon Almanac and Annual Registrar for the year of our Lord
1887- 1890 : The Ceylon Directory, Calendar,and Compendium of useful information
1871- 1931 : Ferguson's Ceylon Directory

இவ்வருடாந்த அறிக்கைகள் பலவற்றினைத் தற்போது கண்டடைய முடியவில்லை. இதனால் அக்கால ஆட்சி குறித்து நேரடியாக முழுவதையும் வரிசைப் படுத்திக்கூற முடிய வில்லை. கிடைக்கக்கூடிய வெளியீடுகள் தரும் தகவல்களின் அடிப்படையிலும் மற்றைய புறத்தகவல்களைக் கொண்டும் இவற்றைத் தொகுப்பதே முடிவதாகும்.

ஆங்கிலேயரின் ஆட்சிக் கால உத்தியோகபூர்வ குறிப்புகளில் கிடைக்கும் தகவல்களின் படி 1803களில் வன்னியர் கோத்திரத் தலைவர்கள் ஆங்கிலேய அரசினால் கரவாகுப் பற்றுக்கான நிலமைப் போடிகளாக அதிகாரபூர்வமாக பதவி வகித்தமையை அறிய முடிகின்றது (A Collection of legislative acts of the Ceylon government, 1853:77 ). அவர்களுக்கு அரச ஊதியம் வழங்கப்பட்ட குறிப்புகளையும் அவதானிக்க முடிகிறது. இவை பற்றிய குறிப்புகள் ஆங்கிலேய அரசின் மேற்குறிப்பிட்ட வருடாந்த வெளியீடுகளான The Ceylon almanac and compendium of useful information முதலான சஞ்சிகைகளிலும் ஆலயக் குறிப்புகள் மற்றும் அக்காலத்தில் எழுதப்பட்ட காணி உறுதிகள் மற்றும் Ferguson அவர்களின் தொடர் தொகுப்பான Ceylon handbook and directory முதலானவற்றிலும் அறிய முடிகிறது. இவற்றை ஒரு தொடரொழுங்கில் தொகுத்தால் 1803இல் இருந்து 1929வரையான காலப்பகுதியில் கரவாகுப் பகுதியில் பதவி வகுத்த நிலமை வன்னிமைகள் விபரம் பின்வருமாறு அமையும்.

1803 - பெரிய கரவாகுப் போடியார்- நிலமைப் போடி
1804 - முண்டப் போடி
(A Collection of legislative acts of the Ceylon government from 1796-1833, 1853:77).
1820 - வையாளிப் போடி
1830 - வீமாப்போடி
1839 - 1840- வேலாயுதர் தம்பிமுத்து முதலியார்
(The Ceylon Calendar for the Year of Our Lord, 1839:39)
1840 - 1869- சின்னத்தம்பி போடி V. V (Ceylon Calendar and Compendium of Useful information, 1842:48; The Ceylon Almanac and Annual Registrar for the year of our Lord 1854:92)
1869 - 1902- சத்துருக்கப்போடி சின்னத்தம்பி போடி V. V (The Ceylon Blue Book,1892:79; Ferguson, 1887/88- 1893; Ceylon Hand book and directory 1891-1892 )
1902 - 1914- சின்னத்தம்பி போடி ச.போடி (The Ceylon Blue Book,1903:K 83; Ferguson, 1904–1914; Ceylon Hand book and directory 1898-1899:888 )
1915 - 1927- கே. எம். அப்துல் மஜீத் (Ferguson, 1917-1924)
1928 - 1929- சங்கரப்பிள்ளை வன்னியனார்

இங்கு குறிப்பிடப்படும் சின்னத்தம்பி போடி V. V மற்றும் சின்னத்தம்பி போடி ச.போடி ஆகியோர் பாட்டன், பேரன் உறவினர். இவ்வாறு ஒரே குடும்பவழியில் மீண்டும் மீண்டும் வரும் ஒரே பெயர்கள் குழப்பங்களைத் தந்தாலும் பாட்டனார் பெயரை பேரப் பிள்ளைகளுக்கு இடும் வழக்கத்தை நமக்கு காட்டுகின்றன.

இதில் வேலாயுதர் தம்பிமுத்து முதலியார், கே.எம். அப்துல் மஜீத் , சங்கரப்பிள்ளை வன்னியனார் ஆகியோரை தவிர்த்துப் பார்த்தால் ஆங்கிலேயர்களின் ஆட்சிக் காலத்தில் நற்பிட்டிமுனை வன்னிமை கோத்திரத்தைச் சேர்ந்தவர்களே கரவாகுப்பற்றின் வன்னிமைகளாக பதவி வகித்துள்ளனர் என்பதுடன் இவர்களின் காலப்பகுதி நூற்றிப் பன்னிரண்டு ஆண்டு களுக்கும் மேலாகும் என்பதும் குறிப்பிடத்தக்கது. 1932இல் கரவாகுப்பற்று வன்னிமையாக எம். எஸ். காரியப்பர் அவர்கள் தெரிவாகினார் என்பதும் இங்கு கவனிக்கண்டியவொன்றாகும்.

1921 இல் அறிமுகம் செய்யப்பட்ட மனிங் யாப்பு சீர்திருத்தப் பரிந்துரைகள் மரபுவழி வன்னிமைப் பதவி குடும்ப வழியாக வழங்கப்படுவதில் மாற்றங்களை ஏற்படுத்த ஊக்குவித்தமை காரணமாக நற்பிட்டிமுனை வன்னிமை கோத்திரத்தின் வழிவழித் தொடர்ச்சி அரச ஆட்சித்தளத்தில் தொடரவில்லை. பின்வந்த காலங்களில் கோயில் வன்னிமைகளில் மட்டுமே மக்களால் இந்த மரபுகள் பேணப்பட்டன. நற்பிட்டிமுனை மரபுவழிவந்த கோயில் வன்னிமைகள் திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயம், பாண்டிருப்பு திரௌபதியம்மன் ஆலயம், சேனைக்குடிருப்பு காளி கோயில் முதலானவற்றில் மரபுவழித் தலைவர்களாக விளங்கினர் (கமலாம்பிகை லோகிதராசா, 2012:216-222).

முருகு தயாநிதி அவர்கள் எழுதிய "அம்பிலாந்துறை" எனும் வரலாற்று நூலில் கதிரமலைப் போடி வன்னியனின் மகன் சின்னத்தம்பி வன்னியன் அம்பிலாந்துறையில் பிறந்தவர் எனவும் நற்பிட்டிமுனையில் திருமணம் முடித்த இவர் கரவாகுப் பற்றுக்கான வன்னிமையாக் கடமையாற்றினார் எனவும் வாய் மொழித்தகவல் ஒன்றின் அடிப்படையில் பதிவிடுகின்றார் (முருகு தயாநிதி, 2016:95). இது தவறான கருத்து ஆகும். ஆங்கிலேயர் காலத்து அரச ஆவணங்களின் படி சின்னத்தம்பிப் போடி என்ற பெயரில் இருவர் கரவாகுப் பற்றுக்கான வன்னிமைகளாக இருந்துள்ளனர். முதலாமவரை நிலமை V. சின்னத்தம்பிப்போடி என்றே அலுவல்முறை ஆவணங்கள் குறிப்பிடுகின்றன (The Ceylon Almanac and Annual Registrar for the year of our Lord- 1862: 307 & The Ceylon Almanac and Annual Registrar 1858: 441). இரண்டாமவரை அலுவல் முறை ஆவணங்கள் சின்னத்தம்பிப் போடி S.W என்று குறிப்பிடும் (The Ceylon Blue Book,1903:K 83). வன்னிமைப் பதவி சம்பளம் பெறும் அரச பதவி என்பதால் ஆங்கிலேய அலுவல்முறை பதிவுகள் துல்லியமான பதிவுகளாகும். மேலும் The Ceylon Mercantile and planting directory எனும் ஆவணம் சத்துருக்கப்போடி வன்னியனாரின் பெயரை Satharukopodi Sinnatampipodi V .V எனக் குறிப்பிடுகின்றது (The Ceylon Mercantile and planting directory, 1891/1892:681). மேலும் கிடைக்கும் பல்வேறு தகவல்களையும் ஒப்புநோக்கும்போது வீமாப்போடி வன்னிமையின் மகன் நிலமை சின்னத்தம்பிப் போடி, அவரின் மகன் சத்துக்கப் போடி வன்னிமை. சத்துருக்கப்போடி வன்னிமையின் மகனே சின்னத்தம்பிப் போடி என அறியலாம். வேறொரு புறத் தகவலின் அடிப்படையில் நிலமை சின்னத்தம்பிப் போடியின் மனைவி அன்னம்மாப்பிள்ளை என்பவரே அம்பிலாந்துறை கதிரமலைப் போடி வன்னிமையின் மகளாவார்.

ஆங்கிலேயர் ஆட்சியில் இலங்கையின் வடக்கு கிழக்குப் பிரதேசம் தமிழர் தாயகமாக ஒரே அரசியல் அலகாக 1908இல் பிரகடனப்படுத்தப்பட்டது. இதன்போது தீவு மூன்று தர்பார்களாகப்(Darbar)பிரிக்கப்பட்டது. கண்டியர்களுக்கு கண்டி தர்பாரும், தாழ் நாட்டு சிங்களவர்களுக்கு கொழும்பு தர்பாரும் தமிழர்களுக்கு வடக்கு கிழக்கு தனியொரு தர்பாரும் அமைக்கப்பட்டன. இத்தர்பார் கூட்டங்கள் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பெரும் அமர்வுகளாகக் கூட்டப்பட்ட குறிப்புகள் காணப்படுகின்றன. வடக்கு-கிழக்கு தர்பார் 1908ல் கொழும்பிலும் 1910இல் யாழ்ப்பாணத்திலும் 1912இல் மட்டக்களப்பிலுமாக நடாத்தப்பட்டன. ஆளுநர் ஹென்றி எட்வர்ட் மக்கலன் அவர்கள் தலைமை தாங்கினார். 1912இல் மட்டக்களப்பில் நடைபெற்ற தர்பாரில் நற்பிட்டிமுனையிலிருந்து கரவாகுப் பற்று சார்பாக வன்னியர் திரு. S.W. சின்னத்தம்பி அவர்கள் பங்கேற்றார் (Selvarajah S.J, 1989:1; Dagmar Hellmann Rajanayagam,1990:)

NATIVE HEADMEN OF THE EASTERN PROVINCE.

Sathunatha Modliar Mathusala Rasacaria Canegeratne Modliar-Chief Modliar of the Province, Modliar of the Cutcherry, and Interpreter to the Government Agent 90*l*.

Don Francis Serewardene—Mohandiram and Translator of the Agent's Department 60*l*.

Caderamer Nagamany—Odear of Trincomalie 18*l*.

Tillenayagam Nallasagerompulle—do. 18*l*.

Nawesewayen Cadramen——Wanniah of Tamblegam 36*l*.

Cadrawelly Moergappen—Odear of do. 18*l*

Cadramer Camreweddy Pulle—Wanniah of Cattocolom. 36*l*.

Candappa Cadreweloe—Odear of do. 18*l*.

R. Mudliar Swaminade Pulle—

Vedarama Vidahn Canegesabe—Odear of Corle Pattoo 18*l*.

Candappa James Cudrawalla—Odear of Eraoor do. 18*l*.

W. A. Constantinoe—Odear of Roogam Pallatte 18*l*.

C. D. Cadramapody—Wanniah of Manmone Pattoo 36*l*

Casinaden Sembonaden—Odear of Ditto East 18*l*.

A. Wayremottoo—Odear of ditto West 18*l*.

Nileme V. Sinnetambypody—Wanniah of Carrawagoo Erovil, and Poretivoe Pattoo 36*l*.

P. H. C. Comarapody—Odear of Erowil Pattoo 18*l*.

E. Mundapody—Odear of Poretivoe and Nadenne 18*l*.

P. Maylepody—Ditto of Carrawago, 18*l*.

( The Ceylon Almanac and Annual Registrar for the year of our Lord- 1862 page: 307)

1847 முதல் 1902 வரையான ஆட்சிக் காலத்தில் கரவாகுப் பற்றுப் பகுதிக்கு மட்டு மன்றி எருவில், போரதீவுக்குரிய வன்னிமைகளாகவும் நற்பிட்டிமுனையைச் சேர்ந்த சத்துருக்கப் போடி வன்னியர், சின்னத்தம்பிப்போடி வன்னியர் ஆகியோர் செயற்பட்டனர் (Ceylon Calendar and Compendium of Useful information, 1844:40). இதற்காக அதிகரித்த ஊதியம் இவர்களுக்கு வழங்கப்பட்ட குறிப்புகளும் உள்ளன. 1845 காலப்பகுதியில் எருவில், கரவாகு, போரதீவு ஆகியவற்றுக்கான திடீர் மரண விசாரணை அதிகாரியாகவும் நிலமை சின்னதம்பிப் போடி அவர்கள் செய்யப்பட்டார் (கமலாம்பிகை லோகிதராசா, 2012:267). சத்துருக்கப்போடி வன்னியனாரின் சகோதரர் S.V.எதிர்மன்னசிங்கம் அவர்கள் 1893களில் சம்மாந்துறைப் பற்றுக்கு வன்னிமையாகக் கடமை புரிந்தமையும் குறிப்பிடத்தக்கது (Ferguson's Ceylon Directory, 1893:687). ஒரு பெருங் காலப்பகுதியில் கரவாகுப் பற்றுக்கு மட்டுமன்றி ஏனைய பற்றுக்களையும் உள்ளடக்கியதான தலைமைத்துவம் நற்பிட்டிமுனையிடம் காணப்பட்டது. இக்கிராமம் முக்கியமான ஆளுமைகளைக் கொண்டிருந்தமை மற்றும் குடிவழி ஆட்சி உரிமையைக் கொண்டிருந்தமையை இது காட்டுகின்றது.

Eromarewetuye Edirweresinga Nalla Pulalen—*Wanniah of Cottiar*

Mohamadoe Alifa Agamadoelebbe —*Modliar and Wanniah of the Moor & Singalese Pattoes in Tamankadua*

Anathana Modr. Cadramatamby —*Odear of Trincomalie*

Armogam Weloepulle—*Odear of Trincomalie*

Caderawalie Moergappen—*do. of Tamblagam*

Wettyweloe Cadraman—*Odear of Cattukulem*

Cannaweddy Murgappen—*Odear of Cottiar*

Neyna Marcair Meerasayboo Marcair—*Headmoorman of*

Punchiralle Ageneralle—*Odear of Panvapattoo*

Vettewelar Joshua Swaminadepulle—*Wanniah of Samantorre and Nadoccadoepattoos*

Allilebbe Oedoemalebbe—*Odear of Samantorrepattoos*

Aresecoen Andrew Ambagapandarem—*Odear of Nadoccadoepattoo*

Nileme Chinetambypody—*Wanniah of Erovil Poretivoe and Carrewawpattoo*

Welachypody Palipody—*Odear of Erovilpattoo*

Moetapody Porwere Candepody —*Odear of Poretivoepattoo*

Allegepody Murendepody—*Odear of Carrewawpattoo*

(Ceylon Calendar and Compendium of Useful information,1844:40)

92 *Native Headmen—Northern Province.* [PART II.

Shaiksen Ossensaih—Odear of the Moor Pattoos in do. 7l. 4s.

Punchee Appoo—Ditto Singhalese do. do. 7l. 4s.

BATTICALOA.

R. D. Someoaden—First Modliar and Interpreter to the Assistant Government Agent 40l

M. Agemadoelebbe—Wanniah of Corlepattoo and Eraoor Pattoo 12l

S. Aliiar—Odear of Corle Pattoo 4l 10s

C. Markair Aliiar—Odear of Eraoor do. 4l 10s

Cadramapody Robert Cungeleepody—Wanniah of Manmone Pattoo 12l

Estovoe Selestinoe—Odear of ditto North 4l 10s

Alliar Markair—Ditto ditto South 4l 10s

Chinnetamby Chetty Tambaya—Wanniah of Nindoor, Ackra and Panoa Pattoos 12l.

E. Adampody—Odear of Nindoor Pattoos 4l. 10s.

Mannppody Mundepody—Ditto Ackra ditto 4l 10s

Puncheralla Arogamaralla—Ditto Panoa ditto 4l 10s

C. D. Cadrampody—Wanniah of Samantorre and Nadecadoe Pattoos 12l

Allilebbe Oodomalebbe—Odear of Samantorre Pattoo 4l 10s

E. A. Ambegepandarum—Ditto Nadecadoe ditto 4l 10s

Nileme Chinnetambypody—Wanniah of Erovil, Poretivoe and Carawaw Pattoos 12l

Welachypody Palipody—Odear of Erovil Pattop 4l 10s

M. P. Candepody—Ditto Poretivoe ditto 4l 10s

A. E. Cattamoettoe—DittoCarawaw ditto 4l 10s

W. J. Supermanien—Wanniah of Bintenne 40l 10s

J. Pasqual—Odear of Roogam Pallatte 4l 10s

R. B. Dingyrale—Ditto Odo ditto. 4l 10s.

Peter Punchyrale—Ditto Rode and Palla ditto 4l 10s

(The Ceylon Almanac and Annual Registrar for the year of our Lord 1854:92)

1857 இல் சேர். ஹென்றி வாட்ஸ் இலங்கைக்கான ஆளுநராகப் பணியாற்றிய காலத்தில் மட்டக்களப்பின் ஊடாக நற்பிட்டிமுனை, கருங்கொடி தீவு வரை பயணித்தார். இதன்போது இவர் மட்டக்களப்பு, நற்பிட்டிமுனை, கருங்கொடித்தீவு ஆகிய இடங்களில் மக்கள் முன்னிலையில் உரையாற்றினார். இந்த உரையின் போது விவசாயத்தை விருத்தி செய்வதில் அரசுக்கு உள்ள நோக்கங்களை அவர் விவரித்தார். அடுத்த ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் நற்பிட்டிமுனைக்கும் கருங்கொடிதீவுக்குமான வீதியை செப்பனிடுவதற்கு முன்னுரிமை வழங்கப்படும் எனக் குறிப்பிட்டார். நற்பிட்டிமுனைக்கான தொடர்புகளில் மட்டக்களப்பு வாவி முக்கியமான மார்க்கம் எனவும் மட்டக்களப்பின் தெற்கில் உள்ள தென்னங் காணிகளை வகைதொகைகளைக் கருதும்போது இப்பிரதேச அபிவிருத்திக்காகச் செலவிடுவது பயனுள்ளது எனவும் குறிப்பிட்டார். தனது பயணத்தின் போது இப்பிரதேசத்தில் இருந்த தென்னம் செய்கை காணிகளுக்கும் தனது களப் பயணத்தை மேற்கொண்டிருந்தார் (Accounts and papers of the house of commons, Vol. 40, 3rd December 1857- 2nd August 1858:332-333). சேர். ஹென்றி வாட்ஸ் நற்பிட்டிமுனையில் மக்களைச் சந்தித்து உரையாற்றிய கூட்டம் யாரது ஒழுங்கமைப்பில் நடைபெற்றது முதலான தகவல்கள் காணப்படவில்லை ஆயினும் இக்காலப் பகுதியில் கரவாகுப் பற்று வன்னிமையாக வை. வீ. சின்னத்தம்பிப் போடி அவர்கள் பதவி வகித்தார் என்பது குறிப்பிடத்தக்கது. அக்காலத்தில் நற்பிட்டிமுனை முதன் கருங்கொடித் தீவு வரையான தென்னங் காணிகள் திரு. ஓ கிறேடி அவர்களின் பராமரிப்பின் கீழ்க் காணப்பட்டன. சேர் ஹென்றி வாட்ஸ் அவர்களின் காலத்தில் கிழக்கு மாகாணத்தில் மட்டக்களப்புப் பிரதேசத்தில் நீர்ப்பாசனத் திட்டங்கள் மீளமைக்கப்பட்டன. அத்துடன் அரச காணிகள் மக்களுக்கு

மானிய விலையில் விற்கப்பட்டன. வீதிகள் அபிவிருத்தி செய்யப்பட்டன. நற்பிட்டிமுனைக்கும் கருங்கொடித் தீவுக்கும் இடையிலான வீதி புனரமைக்கப்பட்டது. 1880 இல் பட்டிப்பளையாறு புனரமைக்கப்பட்டதுடன் மேலும் நீர்ப்பாசன கட்டமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. இவருடைய காலத்தில் 1858இல் மட்டக்களப்பில் 40000 ஏக்கராக இருந்த நெல் வயல்களின் விஸ்தீரணம் 52000 ஏக்கராக அதிகரிக்கப் பெற்றது. (S.W Balasingam MA, Administration of Sir. Henry Ward, Governor of Ceylon, 1855-60, May 1968).

1824க்குப் பிற்பட்டகாலங்களில் ஆங்கிலேய ஆட்சியின் நீதி விசாரணைக் கட்டமைப்புகள் கிராம தீர்ப்பாயக் கட்டளைச் சட்டத்தின் (Village Tribunal ordinance) கீழ் அப்பகுதி வன்னிமைகளால் விசாரிக்கப்பட்டதாக வெல்லவூர்க் கோபால் அவர்கள் எழுதிய மட்டக் களப்பு வரலாறு ஓர் அறிமுகம் எனும் நூலில் (வெல்லவூர்க் கோபால், 2011:118-119) குறிப்பிடுவார். அக்காலத்தில் முதலில் மட்டக்களப்பிலும் பின்னர் நற்பிட்டிமுனையிலும் அத்தகைய கிராம தீர்ப்பாயங்கள் (Village Tribunal) செயற்பட்டதாக அந்நூல் குறிப்பிடுகின்றது. 1871 ஆம் ஆண்டு 26ஆம் இலக்க கிராம சமூகங்கள் கட்டளைச் சட்டத்தின் படி (The Village Communities Ordinance No. 26 of 1871) கிராம தீர்ப்பாயங்கள் அங்கீகரிக்கப்பட்டன (Vigna Rajah, R T. 2009). இக் கிராமத் தீர்ப்பாயங்கள் மாவட்ட நீதிமன்றத்தைக் குறிக்கிறது. தீர்ப்பாளர் களை D.C என்ற பதவிப் பெயர் கொண்டு அழைக்கப்பட்டமையையும் காண முடிகின்றது (The Ceylon Mercantile and planting directory, 1891/1892: 681). சத்துருக்கப்போடி வன்னியர் 1893வரை இப்பதவியில் இருந்தமையை ஆதாரங்கள் காட்டுகின்றன. மேலும் 1871 முதலான காலப்பகுதியில் நற்பிட்டிமுனை கிராம நீதி மன்றத்தில் சத்துருக்கப்போடி வன்னிமை தலைமையில் 1470 குடியியல் வழக்குகளும், 248 குற்றவியல் வழக்குகளும் தீர்க்கப்பட்டி ருப்பதாக அறிக்கைகள் தெரிவிக்கின்றன.

**Saratne**, E...Overseer...Madampe.
**Satasivam**, S...Notary..Vattu...Point Pedro.
**Satharukoppodi**, Sinnatampipodi V. V...D. C., Karavaku...Batticaloa.
**Sathasivam**, A...Head Clerk, P. W. D...Badulla.
**Sathasivam**, S...Interpreter, Police Court...Kayts.

(The Ceylon Mercantile and planting directory, 1891/1892:681)

இக்காலப் பகுதிகளில் இப்பிரதேசத்தின் நீதிவிசாரணை தீர்ப்பாளர்களாக (Juror) நற்பிட்டிமுனை சார்ந்த பின்வருவோர் நியமனம் செய்யப்பட்ட குறிப்புகள் அரச வர்த்தமானி மூலம் கிடைக்கப்பெற்றன.

1. 1892 - 1896 காளிகுட்டிபோடி கந்தப்போடி நொத்தாசியர் (அரச வர்த்தமானி, ஜனவரி 17, 1896)
2. 1901 -முண்டப்போடி உடையார் சீனித்தம்பி உடையார் கரவாகுக்கான தீர்ப்பாளர் (அரச வர்த்தமானி இல. 5751, ஜனவரி 25, 1901)
3. 1892- 1902- முண்டப்போடி வேளவன்னிமை தீர்ப்பாளர் (அரச வர்த்தமானிகள் இல. 5116, ஜனவரி 29, 1892, இல. 6402 செப்டெம்பர் 16,1910 ரூ, ஜனவரி 25, 1901).
4. 1910 - கணபதிப்பிள்ளை வன்னிய செட்டிப் போடி(அரச வர்த்தமானி இல. 6402 செப்டெம்பர் 16,1910)
5. 1921- செல்லையா சத்துருக்கப் போடி வன்னியர்

6. 1924- குஞ்சிளையாப்போடி தம்பாப்பிள்ளை (அரச வர்த்தமானி இல. 7438, டிசம்பர் 23, 1924)
7. 1935 - க.வ இரத்தினசிங்கம், KS வைரமுத்து (அரச வர்த்தமானி இல. 8099, ஜனவரி 11, 1935)

இது தவிர (சுதந்திரத்திற்கு முந்திய காலத்தில் வகித்த பதவிகள் மட்டும்) வேறுபல அரச பதவிகளிலும் நற்பிட்டிமுனையை சேர்ந்தவர்கள் காணப்பட்டனர். எடுத்துக்காட்டா

1. 1896- கந்தப்போடி வன்னியர் கிணறு, குழிப் பரிசோதகராகவும், நொத்தாரிசாகவும் நியமனம் (அரச வர்த்தமானி-மே 22, 1896)
2. 1900- 1906 சின்னத்தம்பி சேதுபதி பிள்ளை இறப்பு பிறப்பு பதிவாளர் கரவாகு வடக்கு (அரச வர்த்தமானி இல. 5735, 16 நவம்பர்,1900 & இல. 6129, ஜூலை 6,1906).
3. 1892 - 1896 காளிகுட்டிபோடி கந்தப்போடி நொத்தாசியர் (அரச வர்த்தமானி இல. 5116, ஜனவரி 29, 1892 & அரச வர்த்தமானி ஜனவரி 17, 1896)
4. 1919 - 1924 பாலிப்போடி வைரமுத்து, இறப்பு பிறப்பு பதிவாளர், கரவாகு வடக்கு (அரச வர்த்தமானி இல-7040, 25 யூலை 1919 & அரச வர்த்தமானி இல-7412, ஆகஸ்ட் 29, 1924)
5. 1919 - வசந்தராசபிள்ளை இராமக்குட்டி திருமணப்பதிவாளர், கரவாகுப் பற்று (அரச வர்த்தமானி-ஏப்ரல் 04, 1919 )
6. 1907 - வேளவன்னிமை முடாப்போடி - சுகாதார வரி சேகரிப்பாளர்.(அரச வர்த்தமானி- இல. 6168, பெப்ரவரி 01, 1907)

மன்னர் ஆட்சிக்காலத்தில் முக்கியமிக்க திக்கதிபர் தலமாகவும், அதனைத்தொடர்ந்து கண்டி இராட்சியத்தோடு சேர்ந்த தனித்த சுயாதீன வன்னிபங்களாகவும் தொடர்ந்த ஆட்சி அதிகாரங்களை வன்னிமைகள் கொண்டிருந்தனர். கண்டி மன்னர்களுடன் இணைந்து ஆங்கிலேயர்களின் ஆக்கிரமிப்புக்கு எதிராகச் செயற்பட்டு நிலபுலன்களை இழந்து, மரண தண்டனை பெற்ற வீரம் மிக்க வன்னிமைகளின் இருப்பிடங்களாகவும் நற்பிட்டிமுனை விளங்கியது. அந்நியர்கள் தமது ஆட்சியை கொண்டு நடத்துவதில் உள்ளூர்த் தலைமைகளை உள்வாங்குவதைத் தவிர்க்க முடியாமல் நிலைமைப் போடிகளாகவும் , பற்று வன்னிமை களாகவும் கரவாகுப் பற்றுக்கு மட்டுமன்றி மற்றைய அயல் பற்றுகளுக்கும் நற்பிட்டிமுனை வன்னிமைகளை நியமித்திருந்த பெருமையினையும் நற்பிட்டிமுனை கொண்டிருக்கிறது. பிரதம தீர்ப்பாளர்களாகவும், நொத்தாரிசுகளாகவும், இறப்புப் பிறப்பு பதிவாளர்களாவும் நற்பிட்டிமுனை பெருமக்கள் இப்பிரதேசத்தின் தலைமைத்துவத்தைக் கட்டிக் காத்திருக்கின்றனர். இவற்றிலிருந்து நற்பிட்டிமுனை பெருமையும் வரலாற்று முக்கியத்துவமும் வாய்ந்த பதியாக இருந்தமை தெளிவாகத் தெரிகிறது.

**நற்பிட்டிமுனையிலிருந்து பின்வந்த காலங்களில் வழங்கப்பட்ட அரசியல் தலைமைத்துவங்கள்:**

பட்டிருப்புத் தொகுதியின் கீழாக அமைந்திருந்த நற்பிட்டிமுனை, 1959இல் நிகழ்ந்த தேர்தல் தொகுதி எல்லை நிருணயத்தின் போது கல்முனைத் தேர்தல் தொகுதி எனும் புதிய தேர்தல் தொகுதியின் கீழ் கொண்டுவரப்பட்டது பற்றி ஏலவே குறிப்பிட்டிருந்தேன். நற்பிட்டிமுனையில் தொடர்புற்றுக் காணப்பட்ட ஆட்சி அதிகாரத் தொடர்ச்சி காரணமாக

சோ. உ .தம்பிராஜா அவர்கள் நற்பிட்டிமுனையில் திருமணம் செய்து வாழ்ந்தபோதிலும் தனது பிறந்த இடமான பட்டிருப்புத் தேர்தல் தொகுதியில் போட்டியிட்டு 1970-1977 வரை பாராளுமன்ற உறுப்பினராக பதவிவகித்தார்.

நற்பிட்டிமுனையிலிருந்து தி. சேதுபதிப்பிள்ளை அவர்கள் கரவாகு மேற்கு கிராம சபையில் அக்கிராசனாராகவும் உறுப்பினராகவும் 1964 முதல் 1972 வரை பணியாற்றினார்.

2006 களில் மாநகரசபைத் தேர்தலில் அ. அமிர்தலிங்கம் அவர்கள் இலங்கை தமிழ் அரசுக் கட்சியின் சார்பில் போட்டியிட்டு கல்முனை மாநகர சபைக்குத் தெரிவானார். தொடர்ந்து 2011 நடைபெற்ற தேர்தலிலும் இவர் போட்டியிட்டு வெற்றி பெற்றார். 15.07.2015 இல் இவரது இறப்புவரை இவர் அப்பதவியை வகித்தார். இவரது காலத்தில் கல்முனை மாநகர சபையின் எதிக்கட்சித் தலைவராகவும் பதவி வகித்தார்.

கல்முனை மாநகர சபைக்கு தமிழரசுக் கட்சியின் சார்பில் நீக்கப்பட்ட உறுப்பினரின் இடத்திற்கு நற்பிட்டிமுனையைச் சேர்ந்த கு. தம்பிராசா அவர்கள் தெரிவானார்.

2012 ஆம் ஆண்டு நடைபெற்ற கிழக்கு மாகாண சபைத் தேர்தலில் இலங்கை தமிழ் அரசுக் கட்சியின் சார்பில் போட்டியிட்டு திரு. மு. இராஜேஸ்வரன் அவர்கள் மாகாணசபை உறுப்பினரானார். இவர் இலங்கை தமிழ் அரசுக் கட்சியின் கல்முனைத் தொகுதியின் தலைவராகவும் செயற்பட்டார்.

2018இல் கல்முனை மாநகசபைக்கான தேர்தலில் இலங்கை தமிழ் அரசுக் கட்சியின் சார்பில் ரி. இராசரெத்தினம் அவர்கள் தெரிவானார். அதே வேளை ஐக்கிய தேசியக் கட்சியின் சார்பில் தேர்வுப் பட்டியல் மூலம் திருமதி. எம்.நந்தினி அவர்கள் கல்முனை மாநகசபை உறுப்பினரானார். நற்பிட்டிமுனை தமிழர் பிரிவில் இருந்து இரண்டு உறுப்பினர்கள் ஒரே காலத்தில் பதவி வகித்தனர்.

**உசாத்துணை**


1. A Collection of legislative acts of the Ceylon government from 1796-1833, Vol. I, Williams Skeen Government Printers, Ceylon, 1853.
2. Accounts and papers of the house of commons, Vol. 40, 3rd December 1857- 2nd August 1858
3. Balasingam S.W ( MA),Administration of Sir. Henry Ward, Governor of Ceylon, 1855-60, May 1968
4. Bennet J. W, Ceylon and it's capabilities, 1843
5. Ceylon Hand book and directory 1891-1892
6. Ceylon Hand book and directory 1898-1899
7. Ceylon Calendar and Compendium of Useful information,1844
8. Ferguson's Ceylon Directory, 1893: 687
9. The Ceylon Almanac and Annual Registrar for the year of our Lord, (Ed. Ferguson A M &J),1854
10. The Ceylon Almanac and Annual Registrar, 1858
11. The Ceylon Almanac and Annual Registrar for the year of our Lord, (Ed. Ferguson A M &J),1862
12. The Ceylon Directory, Calendar,and Compendium of useful information (Ed. Ferguson A M &J), 1887/1888:905
13. The Ceylon Directory, Calendar,and Compendium of useful information (Ed. Ferguson A M &J), 1891/1892
14. The Ceylon Directory, Calendar,and Compendium of useful information(Ed. Ferguson A M &J), 1890/1891
15. The Ceylon Directory, Calendar,and Compendium of useful information(Ed. Ferguson A M &J), 1893
16. Ceylon Calendar and Compendium of Useful information,1842

17. The Ceylon Mercantile and planting directory, 1891/1892
18. Dagmar Hellmann Rajanayagam, The Concept of Tamil Home Land in Sri Lanka, it's meaning and, 1990
19. Ferguson, Ceylon handbook and directory part I 1890-1891
20. Ferguson, Ceylon handbook and directory part I 1905-1906; 1891, 1909, 1912 & 1914
21. Journal of Dutch Burgher Union, No 55, 1904
22. Selvarajah S.J, " BAtticaloa Bibliography", Municipal Council Batticaloa, 1989.
23. Simon Cassi Cheddy, The Ceylon gazetteer, 1838.
24. The Ceylon Almanac and annual Register- 1862
25. The Ceylon Calendar for the Year of Our Lord, 1839
26. The Ceylon Blue Book, 1892: 79,Ferguson, 1887/88- 1893
27. The Ceylon Blue Book,1903:83, Ferguson, 1904-1914
28. Vigna Rajah, R T(High Court Judge)., "The judicature of Sri Lanka in its historical setting", Daily News, Colombo, 15.03.2009.
29. அரச வர்த்தமானி இல. 5116, ஜனவரி 29, 1892 ஆம் திகதியது, இலங்கை
30. அரச வர்த்தமானி, ஜனவரி 17, 1896 ஆம் திகதியது, இலங்கை
31. அரச வர்த்தமானி இல.5408, மே 22, 1896 ஆம் திகதியது, இலங்கை
32. அரச வர்த்தமானி இல. 5735, 16 நவம்பர்,1900 ஆம் திகதியது, இலங்கை
33. அரச வர்த்தமானி இல. 5751, ஜனவரி 25, 1901ஆம் திகதியது, இலங்கை
34. அரச வர்த்தமானி இல. 6129, ஜூலை 6,1906 ஆம் திகதியது, இலங்கை
35. அரச வர்த்தமானி-இல. 6168, பெப்ரவரி 01, 1907ஆம் திகதியது, இலங்கை
36. அரச வர்த்தமானி இல. 6402 செப்டெம்பர் 16,1910 ஆம் திகதியது, இலங்கை
37. அரச வர்த்தமானி இல.7004, ஏப்ரல்04, 1919 ஆம் திகதியது, இலங்கை
38. அரச வர்த்தமானி இல-7040, 25 யூலை 1919 ஆம் திகதியது, இலங்கை
39. அரச வர்த்தமானி இல-7412, ஆகஸ்ட் 29, 1924 ஆம் திகதியது, இலங்கை
40. அரச வர்த்தமானி இல. 7438, டிசம்பர் 23, 1924 ஆம் திகதியது, இலங்கை
41. அரச வர்த்தமானி இல. 8099, ஜனவரி 11, 1935 ஆம் திகதியது, இலங்கை
42. இராமநாதன் ஆறுமுகம், அருணாசலம் பிச்சையம்மா ஆகியோரால் நிறைவேற்றப்பட்ட கந்தசுவாமி ஆலயச் சாசனம், 1862
43. கமலாம்பிகை லோகிதராசா,பத்தும் பதியமும், 2012
44. கந்தையா வீ. சி, மட்டக்களப்புச் சைவக்கோயில்கள்-பாகம் 01, இந்து சமயத் திணைக்களம், கொழும்பு, 1983
45. கந்தையா வீ .சி, மட்டக்களப்பு சைவக் கோயில்கள் (இரண்டு பக்கங்கள்), இந்து கலாசார அலுவல்கள் திணைக்களம் , 1997.
46. கணபதிப்பிள்ளை சி. , பூர்வீக சப்த ஸ்தலங்கள், விபுலானந்த அச்சகம் , யாழ்ப்பாணம், 1979
47. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், மட்டக்களப்புத் தேசம் வரலாறும் வழக்காடும், சேமமடு பதிப்பகம் 2016
48. கவிக்கோ வெல்லவூர்க் கோபால் , மட்டக்களப்பு வரலாறு ஓர் அறிமுகம், மட்டக்களப்பு, 2011
49. குணராசா க,"யாழ்ப்பாண அரச பரம்பரை-விஜயகாலிங்கன்முதல் நரசிங்கன் வரை" யாழ்ப்பாண அரச பரம்பரை வரலாற்றுக் கழகம் 19, 4/6, மிலாகிரிய அவென்யு, கொழும்பு - 4. இலங்கை,2000
50. சிவசண்முகம் ஞா , மட்டக்களப்பு குகன்குல முற்குகர் வரலாறும் மரபுகளும் , விபுலம் வெளியீடு 2000.
51. முருகு தயாநிதி, "அம்பிலாந்துறை", ஸ்ரீ சித்தி விநாயகர் , சிவமுத்துமாரியம்மன் ஆலயப் பரிபாலன சபை, அம்பிலாந்துறை 2016.
52. நடராசா எவ். எக்ஸ் சி, மட்டக்களப்பு மான்மியம், 1998
53. நா. நவநாயகமூர்த்தி, ஈழத் தமிழர் வரலாற்றுச் சுவடுகள், 2002

# 06. நற்பிட்டிமுனையின் கல்வி வரலாறு

*இந்த அத்தியாயம் கமு/சிவசக்தி வித்தியாலயத்தின் பழைய ஆவணங்களை நேரடியாக கள ஆய்வின் மூலம் ஆராய்ந்து பெறப்பட்ட தகவல்களைத் தொகுத்து நூலாசிரியர் சஞ்சீவி சிவகுமார் 2015 ஆம் ஆண்டு கமு/சிவசக்தி வித்தியாலய உயர்தர மாணவர் வெளியீடான “தடம்” சஞ்சிகையில் வெளியிட்ட கட்டுரை மேலதிக தகவல்களால் மேம்படுத்தப்பட்டு எழுதப்படுகின்றது.*

**க**லிபிறந்து 2868களில் (கி.மு. 2ம் நூற்றாண்டு) கூத்திகளின் மகனான சேனனின் ஆட்சிக் காலத்தில் “நாப்புட்டி” இராசாக்கள் கூடும் பிரதான தலமாக விளங்கியது (நடராசா எவ். எக்ஸ் சி, 1998:24). இக்காலப்பகுதியே கிழக்கிலங்கையில் கல்வெட்டுக்கள் தோற்றம்பெற்ற காலமாக அடையாளம் காணப்பட்டுள்ளது. தமிழ்பிராமி வரிவடிவத்தைக் கொண்ட இக்கல்வெட்டுக்களை வெல்லாவெளி பிரதேசத்தில் கண்டறியப் பட்டதை தொல்லியல் ஆய்வாளர்கள் உறுதிப்படுத்தியுள்ளனர் (கவிக்கோ வெல்லவூர்க் கோபால், 2012:28). இதிலிருந்து கிழக்கிலங்கையில் மொழி, எழுத்து வடிவில் பதிவு செய்யப்பட்ட காலமாக இதை அறியலாம். கிழக்கின் கல்விப் புழக்கம் தொடங்கிய இக்காலம் நற்பிட்டிமுனை வரலாற்றில் முதன்மை கொண்ட காலம் என்பதும் தெளிவு. இந்த அடிப்படையில் கிழக்கின் அறிவுப்பரம்பலும் அதற்கான முன்னெடுப்புகளும் ஆரம்பித்த கிராமங்களுள் ஒன்றாக நற்பிட்டிமுனையையும் கொள்ளமுடியும்.

ஏட்டுப் பிரதிகள் குறித்த காலவடுக்கிலான பகுப்பாய்வுகள் முறைப்படுத்தப்படாத நிலையில் இப்பிரதேசத்தின் ஆரம்பகாலக் கல்வி முறை குறித்து துல்லியமான முடிவுகளெடுப்பது கடினமானதே. ஆயினும் சோதிடம், பாம்புக்கடி வைத்தியம், திருநீறு போடுதல், ஊர்காவல், வீடுகாவல் செய்தல், நாட்டு வைத்தியம், கைவைத்தியம் என நீளும் மரபு ரீதியிலான தொழில்சார் அறிவும் அதனை கற்பித்தலுக்குரியதாக்கும்

‘சர்ப்ப சாத்திர ஏடுகள்’, ‘வாகடங்கள்’ முதலானவையும் மிகப் பண்டைக்காலம் தொட்டு இக்கிராமத்தில் வேரூன்றி இருந்துள்ளது. மரபு வழியாகப் பேணப்பட்ட கற்றல் கற்பித்தல் செயற்பாடாக மரபு வழியாக இவை கற்பிக்கப்பட்டு வந்துள்ளன. நற்பிட்டிமுனையில் கந்தப்பூவர், தொண்டை நெருங்கியர் எனப்பட்ட வீரக்குட்டியர், பிச்சைப்பிள்ளை வண்ணக்கர் முதலானவர்கள் ஊடாக பின்வந்த காலங்களில் நாதபிள்ளையர், தியாகராசா ஆசிரியர் என இந்த ஏட்டுவழி பாரம்பரிய அறிவு தொடர்ச்சியானது.

ஆயினும் முறைப்படியான கற்றல் என்பது ஏறக்குறைய 15ஆம் நூற்றாண்டில் அதாவது எதிர்மன்ன சிங்க மன்னன் காலத்தில் ஏற்படுத்தப்பட்டதற்கான குறிப்புகளே எமக்குக் கிடைக்கின்றன. அக்காலத்தில் நற்பிட்டிமுனை வங்கர் குலத்திக்கதிபரின் தலமாகக் காணப் பட்டது என மட்டக்களப்பு மான்மிகம் (நடராசா எவ். எக்ஸ் சி, 1998:66) குறிப்பிடும். இக்காலப் பகுதியில் செந்நெல் விளைவித்து தானியச் சங்கங்கள் அமைத்து பல திக்கிலும் கல்விச்சாலைகள் பலதுமியற்றினான் மன்னன் எனும் மட்டக்களப்பு மான்மியத்தின் குறிப்பு முக்கியமானதாகக் கொள்ளத்தக்கது. பிரதான திக்கதிபர் தலமாக நற்பிட்டிமுனை விளங்கியமையில் இருந்தும் நீதி விசாரணைக் கூடம் முதலிய நிருவாகக் கட்டமைப்புகள் அமைந்த பிரதான இடமாக திகழ்ந்தமை கொண்டும் எதிர்மன்னசிங்கனுக்கு நற்பிட்டிமுனையுடனான குடி வழித் தொடர்புகள் கொண்டும் நோக்கும் போது இங்கு காத்திரமிக்க கல்விச் செயற்பாடுகள் அக்காலத்திலேயே முன்னெடுக்கப்பட்டிருக்க வாய்ப்புகள் உள்ளன. இக்காலப்பகுதியில் ஆலயங்களில் காவியம் பாடுதல், அம்மானை, நடைவழிச் சிந்து, கூத்துக்கள் முதலான செவியேறல் முறைக் கல்வி முறைகளும் வீரியத்துடன் செயன்முறைப் படுத்தப்பட்டுள்ளன. தாதன் பாண்டிருப்பில் திரௌபதையம்மன் கோயிலமைத்து பஞ்சபாண்டவர் இதிகாசத்தை நிகழ் காவியமாக போதித்தமையும் வனவாசம் நற்பிட்டிமுனைக் கிராமத்தை மையப்படுத்தி நிகழ்ந்தமையும் கொண்டு நோக்கும் போது மக்களின் அறிவுநிலை ஊடாட்டம் நீண்ட கால வரலாறு கொண்டது என்பது தெளிவு (மௌனகுரு சி,1998:144-146). தென்பத்திரகாளி அம்மன் ஆலயம், பால் குடிபாவாவினால் நிறுவப்பட்டு அக்கசாலை கணபதியைக் கொண்டு பூசை செய்யப்பட்டமையும் அம்மன் தாலாட்டுடனான பத்ததி முறைப் பூசை என்பன இதனை ஆதாரப்படுத்தும் முக்கிய சான்றாதாரங்களாகும் (கணபதிப்பிள்ளை சி. 1979:08)

18ம் நூற்றாண்டில் கல்விமுறையில் போடிமார் தம் பிள்ளைகளுக்கு கல்வி அறிவுடைய ஆசிரியர்களை கற்பிக்க அமர்த்தினார்கள். இவர்கள் “சட்டம்பிமார்” என அழைக்கப்பட்டார்கள். அவர்கள் பாரதம், நிகண்டு, விவேக சிந்தாமணி, ஔவையார் பாடல்கள் முதலானவற்றை மனனம் செய்து கற்றுக் கொடுப்பவர்களாக இருந்தார்கள். சட்டம்பிமார்களுக்கு வகை முறையான ஊழியம் கொடுக்கப்படவில்லை. மாணவர்கள் நாளாந்தம் கொடுக்கும் கையுறையும், வருடம் தோறும் எண்ணெய்ச் சிந்து பாடுவதால் கிடைக்கும் வருமானமும் வயல் விளைச்சலின் பின் கொடுக்கப்படும் புதிர் என்பவையுமே இவர்களுக்கு ஊதியமாய் அமைந்தன.

மட்டக்களப்பு பிரதேசத்தில் முறைசார் கல்விச் செயற்பாடுகள் முன்னெடுக்கும் பாடசாலைகள் 1814 இல் மெதடிஸ்த சபையினால் ஏற்படுத்தப்பட்டன (மத்தியூ எஸ்.ஏ.ஐ : 47). 1883 களில் மெதடிஸ்த சபையினால் பெண்கள் விடுதிப் பாடசாலை கல்முனையில் நிறுவப் பட்டது. அதனைத் தொடர்ந்து 1905களில் இதே மிசனறி “லீஸ்” எனும் பாடசாலையை ஆரம்பித்தது. இரண்டும் ஆங்கிலப் பாடசாலைகளாக இயங்கின. பின்னாளில் (1953 இல்) இவை உவெஸ்லி உயர்தரப் பாடசாலையாக இணைக்கப்பட்டன (மத்தியூ எஸ்.ஏ.ஐ, 2009 : 48).

## 6.1 நற்பிட்டிமுனையின் முதல் பள்ளிக்கூடம்

நற்பிட்டிமுனையில் பள்ளிக் கூடத்தை முதன்முதலில் ஆரம்பித்து நடத்தியவர் சிவஸ்ரீ N. குமாரசுவாமி ஐயர் ஆவார். சத்துருக்கப்போடி வன்னியனார் கரவாகுப்பற்றுக்கான வன்னிமையாகச் செயற்பட்ட காலத்தில் அவருடனான தொடர்புகள் காரணமாக ந. குமாரசுவாமி ஐயர் அவர்கள் நற்பிட்டிமுனைக்கு வந்தார். நற்பிட்டிமுனை அருள்மிகு ஸ்ரீ நகுலேஸ்வரர் ஆலயத்தை உருவாக்கியவரும் அவரே. ஆலயத்திற்கு முன்னாக இருந்த காணியில் அமைக்கப் பட்ட ஓலைக் கொட்டகையில் பாடசாலை நடத்தப்பட்டது. "ஐயரின் பள்ளி" என மக்களால் அழைக்கப்பட்ட இப்பாடசாலையில் சீனித்தம்பி உபாத்தியார், பிச்சப்பிள்ளை உபாத்தியார் ஆகியோர் ஆசிரியர்களாகக் கடமையாற்றினர் என அறிய முடிகின்றது. பின்னாளில் இப்பாட சாலை மட்/ நாய்ப்பிட்டிமுனை தனியார் இந்து கலவன் பாடசாலை என பதிவு செய்யப்பட்டது (இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 6415, திகதி 16.12.1910). ஈழத்து இந்து சமய வளர்ச்சியில் குறிப்பாக கிழக்கிலங்கையின் சைவம் செழிக்க பல்வேறு பங்களிப்புகளைச் செய்த உயர்திரு அருணாசலதேசிகர் இப்பாடசாலையில் ஆசிரியராக கடமை புரிந்தார் என தகவல் குறிப்புகள் தெரிவிக்கின்றன (தரம் 9, கல்வி வெளியீட்டுத் திணைக்களம்,2017:20).

1872 இல் மெதடிஸ்தமிசன் தமது தேவாலயப் பள்ளி ஒன்றை (Nimal Mendis, A History of the methodist church, Sri Lanka 1814- 2008, பக். 608) நற்பிட்டிமுனையில் நடத்தியது. தேவாலயப் பள்ளி என்பது சமய அறிவை வழங்கும் வகையில் அதற்குத் தேவையான அடிப்படைக் கற்றலை வழங்குவதை நோக்கமாகக் கொண்ட கிறிஸ்தவ அமைப்புகளால் நடாத்தப்பட்ட பாடசாலை. மெதடிஸ்த சமயப் பரப்புகையில் இப்பள்ளி முக்கிய பங்கு வகித்தது. இக்காலப்பகுதியில் மெதடிஸ்த சமயக் கல்வி சார்ந்து வணக்கத்துக்குரிய எஸ். நாப்பையர் (Rev. Sheldon Knapp) அவர்கள் இப்பகுதிக்குப் பொறுப்பாக இருந்து செயற்பட்டார். இவரது காலப்பகுதியான 1894யில் வெஸ்லியன் மிஷனரியின் கைத்தொழில் பாடசாலை ஒன்று நற்பிட்டிமுனையில் அமைக்கப்பட்டது. (G.G Finlay DD, W.W Holdsworth MA, BD, History of the Wesleyan Methodist Missionary Society, 1924:49) இதற்கான அரச காணிகள் நற்பிட்டிமுனையில் வழங்கப்பட்டமைக்கான வர்த்தமானி குறிப்புகளை (இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 5207, மார்ச் 10, 1893 ) அவதானிக்க முடியும். இதனோடு தொடர்புடையதாக அரசாங் கத்தின் வாட் குழியும் வண்டி மாலும் (saw pit and cart shed) நற்பிட்டிமுனையில் ஆரம்பிக்க வேண்டி 1896இல் வீரகத்தியார் முத்துவேல் அவர்களுக்குச் சொந்தமான காணி அரசினால் பெறப்பட்டது (இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 5409, மே 29, 1896). இதிலிருந்து மரவேலை, கொல்லர் வேலை, வண்டில் கட்டுதல் முதலான தொழிற்பயிற்சிகள் நற்பிட்டிமுனை கைத்தொழில் பாடசாலையில் வழங்கப்பட்டமையை அறியமுடிகிறது. அத்துடன் அரச வாட் குழியும் வண்டி மாலும் (saw pit and cart shed) அமைக்கப்படுவதற்குரிய வாய்ப்புள்ள பகுதியாக (potential area) நற்பிட்டிமுனை காணப்பட்டிருக்கும் சிறப்பையும் அறியலாம்.

1907 ஆம் ஆண்டின் 8ஆம் இலக்க நாட்டுப் பாடசாலை கட்டளைச் சட்டத்தின் 19-ஆம் பிரிவினால் அமைக்கப்பட்ட தத்துவங்களுக்கு அமைய 1910ஆம் ஆண்டு நற்பிட்டிமுனை யின் பாடசாலைகளாக நாய்ப்பட்டிமுனை வெஸ்லியன்மிசன் பாடசாலை, மற்றும் நாய்ப்பட்டிமுனை இந்து சமயப் பாடசாலை ஆகியன பதிவுபெற்ற பாடசாலைகள் எனப் பட்டியலிடப்பட்டன (இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 6415, திகதி 16.12.1910). ஏககாலத்தில்

இரண்டு பாடசாலைகளையும் ஒரு கைத்தொழில் பாடசாலையையும் நற்பிட்டிமுனை பெற்றிருந்தது என்பது இங்கு முக்கியம் கொடுத்து நோக்கத்தக்கது.

பின்வந்த காலங்களில் உள்ளூர் பாடசாலைகளுக்கு ஆங்கிலேய அரசினால் பாடசாலை முகாமையாளர்கள் நியமனம் செய்யப்பட்டு வர்த்தமானி மூலம் அறிவிக்கப்பட்டனர். மட்டக்களப்பு நற்/ சுதேச கலவன் பாடசாலையின் முகாமையாளராக திருT.S குங்கிலியப்போடி அவர்களைத் தொடர்ந்து சிவஸ்ரீ. குமாரசாமி ஐயர் அவர்கள் 1924 ஆம் ஆண்டிலிருந்து நியமிக்கப்பட்டார். (இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 7387 திகதி 11 04.1924). குமாரசாமி ஐயர் நற்பிட்டிமுனைக்கு மட்டுமன்றி மட்/ பாண்டிருப்பு சுதேச கலவன் பாடசாலையின் முகாமையாளராகவும் ஏககாலத்தில் செயற்பட்டார்.

1928ல் அரசு உதவி பெறும் பாடசாலையாக மட்/நற்பிட்டிமுனை தனியார் இந்து பாடசாலை வர்த்தமானி மூலம் அறிவிக்கப்பட்டு உதவிகள் வழங்கப்பட்டன (The Ceylon GOVERNMENT GAZETTE INDEX FOR JANUARY TO JUNE, 1928, No. 7,623 to No. 7,651).

## 6.2 அரச பாடசாலை தாபிப்பு

1928களுக்குப் பின் இலங்கையில் ஏற்பட்ட கல்வி கட்டமைப்பு மாற்றங்கள் தமிழ்மொழி மூலப் பாடசாலைகளின் தோற்றுவிப்பு பற்றிய முனைப்புக்கு வித்திட்டன. நற்பிட்டிமுனையில் அரச பாடசாலை ஒன்றை அமைக்கும் முயற்சிகள் திரு. கே.வீ. இரத்தினசிங்கம், திரு. செல்லையா வன்னியனார் மற்றும் சிவஸ்ரீ குமார சுவாமி குருக்கள் உள்ளிட்ட கிராமப் பெரியவர்களால் முன்னெடுக்கப்பட்டன.

1931 டொனமூர் சீர்திருத்தம் உள்ளூர் நிலைமைகளுக்கு பொருத்தமான கல்விக் கொள்கைகளை ஆக்குவதற்கு வழிவகுத்தது. பின் சர்வசன வாக்கெடுப்பு நடாத்தப்பட்டதும் இதில் சுதேச கல்விக்கான முக்கியத்துவம் முன்னெடுக்கப்பட்டதுமான நிகழ்வுகள் ஏற்பட்டன. தொடர்ச்சியான முயற்சிகளின் பலனாக நற்பிட்டிமுனையில் அரச பாடசாலை அமைப்பதற்கான அனுமதி கிடைத்தது. இவ்வாறு மட்/நற்பிட்டிமுனை அரசினர் ஆண்கள் பாடசாலை என்ற பெயருடன் 1932ஆம் ஆண்டு அரச பாடசாலை தொடக்கம் பெற்றது. இப்பாடசாலை அமைந்துள்ள காணி திரு. செல்லையா, திரு கருவல்தம்பி, ஆறுமுகத்தான் போடி, கதிராகி ஆண்டிப் பிள்ளை முதலானோருக்கு சொந்தமானதாயிருந்தது. 1931 அக்டோபரில் பாடசாலை தொடங்குவதற்காக இக்காணி மேற்படி உரிமையாளர்களால் அரசுக்கு வழங்கப்பட்டது (இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 7890, திகதி 30 ஒக்டோபர்,1931). திரு. கே. வீ. இரத்தினசிங்கம் அவர்கள் முன்நின்று காணிகளை பாடசாலைக்கு வழங்கினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. காணி வழங்கப்பட்டது தொடர்பான பெயர் பொறித்த நினைவுப் பதிவு பாடசாலைச் சுவரில் பதிக்கப்பட்டிருந்தமையும் அது பின்னர் அகற்றப்பட்டமையும் குறித்த கருத்துக்களை மக்களின் வாய்மொழித் தகவல்களின் மூலம் அறிய முடிந்தது. பாடசாலையின் அப்போதைய பதிவிலக்கம் 796. பாடசாலையின் முதலாவது தலைமை ஆசிரியராக திரு.வே. சாமித்தம்பி அவர்கள் 01.03.1932 இல் நியமிக்கப்பட்டார்.

மட்/நற்பிட்டிமுனை அரசினர் பாடசாலையில் தமிழ், முஸ்லிம் மாணவர்கள் ஒன்றாகவே கற்று வந்தனர். ஆண்கள் மட்டும் கற்கும் வகையில் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலை சில

காலங்களின் பின் பெண் பிள்ளைகளும் கற்கக் கூடியதாக மட்/நற்பிட்டிமுனை அரசினர் தமிழ் கலவன் பாடசாலை என மாற்றம் பெற்றது. கலவன் பாடசாலையாக இருந்தபோதிலும் ஆண்கள் பெண்கள் தனித்தனியாக வகுப்பறைகளில் கற்கக் கூடிய வகையில் ஒழுங்குகள் செய்யப்பட்டன. 1938 சத்துருக்கப்போடி வன்னிமை செல்லையா, தம்பி போடி வள்ளியம்மை, கந்தப்பன் சுப்பிரமணியன், கந்தப்பன் சீதேவி, கந்தப்பன் ஆறுமுகம், கந்தப்பன் பாலிப்போடி முதலானோருக்கு சொந்தமான காணியும் சத்துருக்கப்போடி வன்னியர் செல்லையா வன்னியர் அவர்களுக்கு சொந்தமான மஞ்சனாவடி வளவு எனும் காணியும் பெண்கள் பாடசாலை அமைப்பதற்காக அரசுக்கு வழங்கப்பட்டன. இக்காணி பாடசாலைக்கு வழங்கப்படும் போது தென்னை, பனை, தற்காலிய வீடு என்பன அதிலிருந்தன. (இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 8420, திகதி 16.12.1938). தற்போது சிவசக்தி மகா வித்தியாலயம் அமைந்துள்ள சூழலில் ஆண்கள் பிரிவும் அல்-அக்ஷா மகா வித்தியாலயம் அமைந்துள்ள பகுதியில் பெண்கள் பிரிவுமாக தமிழ் முஸ்லிம் மாணவர்கள் இணைந்து ஒரே குடையின் கீழ் கற்று வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

## 6.3 பாடசாலையின் ஆரம்பகாலத் தலைமை ஆசிரியர்கள்

மட்/ நற்பிட்டிமுனை அரசினர் பாடசாலையின் ( பாடசாலையின் பெயர் பின்னர் மட்/ அ. த. க பாடசாலை என பெயர் மாற்றம் செய்யப்பட்டது) முதலாவது தலைமை ஆசிரியராக ஆசிரிய சிரோன்மணி திரு.வே. சாமித்தம்பி அவர்கள் 01.03.1932 இல் நியமிக்கப் பட்டார். திரு. வே சாமித்தம்பி அவர்கள் ஆசிரிய சிரோன்மணி என பெரிதும் அறியப்பட்டி ருந்தவர். மட்டக்களப்பின் பல்வேறு கலை, இலக்கிய பொது விடயங்களில் பிரபலமாய் இருந்தவர்.

திரு.வே. சாமித்தம்பி அவர்கள் 01.01.1939 இல் மாறுதல் பெற்று மருதமுனை அ.த.க பாடசாலைக்கு தலைமை ஆசிரியராகச் சென்றார். அதன்பின் 1944 வரை இப்பாட சாலையின் செயற்பாடுகள் பற்றிய பதிவுகள் கொண்ட குறிப்பேடுகள் கிடைக்கவில்லை. இதனால் இப்பாடசாலையின் ஆரம்பகால வளர்ச்சிப் போக்குகள் பற்றி துல்லியமாக கூறுவது இயலவில்லை.

ஆயினும் 1941இல் அரச வர்த்தமானியில் (இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 8809, நவம்பர் 7, 1941 ). நற்பிட்டிமுனை அரசினர் ஆண்கள் பாடசாலைக்கு மலசலகூடம் அமைப்பதற்காக நிதி ஒதுக்கீடு செய்யப்பட்ட குறிப்பு காணப்படுகிறது. 1943 பாடசாலையில் பெண்கள் பிரிவுக்கு கட்டிட நிருமானம் மற்றும் கிணறு பதிக்கப்படுவதற்கான நிதி ஒதுக்கீடு செய்யப்பட்ட குறிப்புகள் காணப்படுகின்றன (இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 9060 - 9141, ஜனவரி-யூன் 1943 ). இக்காலப்பகுதியில் திரு கே. எஸ் வைரமுத்து அவர்கள் தலைமை ஆசிரியராக செய்யப்பட்டமை பற்றியும் அறியப்படுகிறது.

1944 ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் திரு. ரீ. எஸ் கந்தையா அவர்கள் தலைமை ஆசிரியராகப் பதவியேற்றார். யூன் 1955 வரை இவர் தலைமை ஆசிரியராக கடமையாற்றினார். அவரது காலத்தில் பாடசாலை வகுப்புக்களின் எண்ணிக்கையும் ஆசிரியர் தொகையும் அதிகரித்தன. SSC எனப்பட்ட தேசிய தரத்திலான சிரேஸ்ட பாடசாலைச் சான்றிதழ் வகுப்பு வரை நடாத்தப்பட்டு மாணவர்கள் சித்தி பெற்றுச் சென்ற குறிப்புக்களைக் காணமுடிந்தது.

1955 யூலை 01 ஆம் திகதி முதல் இப்பாடசாலையின் தலைமை ஆசிரியராக ஏ.எச். முகம்மது அவர்கள் கடமையாற்றினார். இவரது பதவிக் காலம் டிசம்பர் 1956 வரை இருந்தது. இக்காலப்பகுதியில் நற்பிட்டிமுனை தமிழ் முஸ்லீம் சமூகங்களுக்கிடையில் சிறிய மனக்கசப்பொன்று ஏற்பட்டதாகக் காணக்கிடைக்கின்றது. 1957 ஜனவரியில் பாடசாலையின் பெண்கள் பிரிவு அமைந்திருந்த காணியில் நற்பிட்டிமுனை முஸ்லிம் கலவன் பாடசாலை என்ற பெயரில் தனியாக முஸ்லிம் மாணவர்களுக்கு ஒரு பாடசாலை உருவாக்கப்பட்டது. இதன் தலைமை ஆசிரியர் பொறுப்புக்கு ஜனாப். ஏ.எச். முகம்மது அவர்கள் நியமிக்கப்பட திருமதி. எம். வினாசித்தம்பி அவர்கள் 01.01.1957 முதல் நற்பிட்டிமுனை அ.த.க. பாடசாலையின் தலைமை ஆசிரியரானார். தமிழ் மாணவர்கள் ஆண் பெண் இருபாலரும் ஒரே கட்டிடத்தினுள் மாற்றப்பட்டனர். திருமதி. எம். வினாசித்தம்பி அவர்கள் 1957 ஆகஸ்ட் வரை பதவி வகித்தார்.

1957 ஆம் ஆண்டு ஒக்டோபர் முதல் கே. தம்பியப்பா அவர்கள் தலைமை ஆசிரியர் பதவியில் இருந்தார். இவர் குறுகிய காலப்பகுதிக்கு மட்டுமே பதவி வகித்தார். 02.01.1958 இல் மாறுதல் பெற்றுச் சென்றார்.

1958 ஜனவரி முதல் மீண்டும் திரு. வே. சாமித்தம்பி அவர்கள் தலைமை ஆசிரியராகக் கடமையேற்றார். இக்காலப்பகுதியில் கல்விப் பொதுத்தராதரப் பத்திர இரண்டாம் பருவம் வரை பாடசாலையில் நடைபெற்றன. இக்காலப்பகுதி அயல் கிராம மாணவர்களும் நற்பிட்டிமுனை யில் கல்வி பொதுத்தராதர 2ஆம் பருவம் கற்கக் கூடிய பாடசாலையாக இது மிளிர்ந்தது. இக்காலப்பகுதியில் கிராம மக்களுடனும் பொது அமைப்புக்களுடனும் பாடசாலை மாணவர்கள் இணைந்து பல செயற்றிட்டங்களை முன்னெடுத்தமை பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. மாணவர்கள் சிரட்டை வேலை, ஈக்கு வேலை, ஓலை வேலை, தும்பு வேலை, தையல் வேலை, கடதாசி வேலை என்பவற்றில் ஈடுபட்டு அவற்றை காட்சிப்படுத்தி விற்பனை செய்த பெரும் தொழில் மகத்துவ வாரம் ஒழுங்கு செய்யப்பட்டது.

15.01.1959 முதல் இரண்டாம் வகுப்பு பாலர் மேல் கீழ் பிரிவுகள் என்பன தலைமை ஆசிரியையின் பரிபாலனத்தின் கீழும் ஏனைய வகுப்புக்கள் தலைமை ஆசிரியரின் கீழும் கட்டமைக்கப்பட்டன. இதன்படி புதிய தலைமை ஆசிரியையாக வீ. தில்லையம்பலம் நியமிக்கப்பட்டார்.

05.11.1964 வரை திரு. சாமித்தம்பி அவர்கள் தலைமை ஆசிரியராக இருந்தார். பாடசாலையில் 12 ஆசிரியர்கள் இருந்தனர். வட்டார விளையாட்டுப் போட்டிகளில் பல முதலிரண்டு இடங்கள் இப்பாடசாலைக்குக் கிடைத்தன. 01.01.1965 முதல் திரு.வ. சிவநிருபசிங்கம் அவர்கள் தலைமை ஆசிரியரானார். 18.05.1965 இல் இவர் திடிரென மரணமடைந்ததால் தலைமை ஆசிரியராக திரு. ஜே.பீ. நவரெட்ணராசா அவர்கள் நியமிக்கப்பட்டார்.

திரு J.P. நவரெட்ணராஜா அவர்கள் 1968 நவம்பர் வரைப் இப்பதவியில் இருந்தார். அதன்பின் இரண்டு மாதங்களுக்கு திரு. P. இராசாநாயகம் அவர்கள் தற்காலிக தலைமை ஆசிரியராகப் பணியாற்றினார். 01-02-1969 முதல் இப்பாடசாலையின் தலைமை ஆசிரியராக திரு. கா. மாரிமுத்து அவர்கள் பதவி வகித்தார். அதன்பின் 01-08-1970களில் இருந்து திரு. சி.கா.தெய்வநாயகம் அவர்கள் தலைமை ஆசிரியரானார்.

1974களில் இலங்கை பாடசாலை நிருவாகக் கட்டமைப்பில் சில மாற்றங்களை அரசு கொண்டு வந்தது. அதில் முக்கியமாக பாடசாலையின் முதல்வர் அதிபர் என பெயர் மாற்றம் செய்யப்பட்டார்.

இக்காலப்பகுதியில் நற்பிட்டிமுனை அ.த.க பாடசாலையின் வகுப்புகள் 5ம் வகுப்பு வரைப் படியிறக்கம் செய்யப்பட்டன. 1977 இல் அ.த.க. பாடசாலை என்ற பெயர் கமு/ சிவசக்தி வித்தியாலயம் என மாற்றியமைக்கப்பட்டது. 10-11-1978 ஓய்வு பெற்றுச் செல்லும்வரை திரு. சி.கா.தெய்வநாயகம் அவர்கள் பதவி வகித்தார். தொடர்ந்து தற்காலிக அதிபராக திரு.ஆ.அழகையா அவர்கள் 29-08-1979 வரை பதவி வகித்தார்.

01-09-1979 முதல் திரு.சீ.குணரெத்தினம் அவர்கள் பதவியேற்றார்கள். 07-10-1987 வரை நீடித்தது. இவரது பதவிக்காலத்தில் சுற்றுமதில் நிருமானம், 1985இல் வகுப்புகள் 6 வரை அதிகரிக்கப்பட்டமை என்பன முக்கியமானவை ஆகும்.

08-10-1987 முதல் திரு.சி.நாகமணி அவர்கள் அதிபராகப் பதவியேற்றார். 1993இல் இவரது பிரயத்தனத்தால் வகுப்புகள் 8 வரை அதிகரிக்கப்பட்டன. இவரது காலத்தில் "பாடசாலைக் கீதம்" முதன்முறையாக நடைமுறைப்படுத்தப்பட்டது. இப்பாடசாலைக் கீதத்தை சஞ்சீவி சிவகுமார் எழுதினார்.

இக்காலப்பகுதி கிராம இளைஞர்கள் பாடசாலையின் கல்விச் செயற்பாடுகள் குறித்து நேரடியாக அக்கறையை வெளிப்படுத்திய காலப்பகுதியாகக் காணப்பட்டது. பழைய மாணவர் சங்கச் செயற்பாடுகள் வலுப்பெற ஆரம்பித்திருந்தன. 1989இல் நற்பிட்டிமுனை இந்து இளைஞர் மன்றம் இப்பாடசாலையில் ஞாயிற்றுக்கிழமைகளில் அறநெறிப் பாடசாலையை நடத்தத் தொடங்கியது. பாடசாலைக்கும் சமூகத்திற்குமான தொடர்புகள் சிறப்படைந்திருந்தன. 1992இல் நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பு (NEDA) செயற்படத் தொடங்கியது. இது உயர்தரக் கல்வியை முடித்து விட்டு பல்கலைக்கழக அனுமதியை நோக்கிக் காத்திருந்த இளைஞர்களால் தரம் 6 முதல் க.பொ.த. சா/த வகுப்புகள் வரை இலவச கல்வி வழிப்படுத்தல் பயிற்சி வகுப்புகளை சிறப்புற நடாத்தத் தொடங்கியது (வித்தியம்-2010:03).

இவ்விடத்தில் இன்னொரு விடயத்தினையும் பதிவு செய்தல் முக்கியமானதாகும். கற்ற இளைஞர்கள் தமது அடுத்த சந்ததியின் கல்விச் செயற்பாடுகளுக்கு துணை நிற்றல் என்னும் கலாசாரத்தை நமது ஊரில் பலர் செய்து வந்துள்ளனர். பாடசாலையிலோ அல்லது தனியான கொட்டகையிலோ இலவசமாகக் கற்றுக்கொடுத்து வந்துள்ளனர். இதனை மிகக் காத்திரமாக நிருவன ரீதியாக உருவாக்கிய பெருமை அமரர்.நல்லரெத்தினம் அவர்களையே சாரும். இவர் 1969 பல்கலைக்கழகப் பட்டதாரியாக வெளியான காலப்பகுதியில் நற்பிட்டிமுனைக் கிராமத்தின் மாணவர் கல்வி நிலையைக் கண்டு அதனை மேம்படுத்துவதில் தனிமனித சேவையாளராகப் பணியாற்றினார். அவர் 1977இல் திருத்தணிகை வளாகம் என்ற உயர்கல்வி நிலையத்தை நிறுவிக் கல்விப் பணிபுரிந்தார் (கல்வி விடியலின் கலங்கரை விளக்கு -2007) இவரது பாதையில் 1992இல் ஆரம்பித்த நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பின் (NEDA) (பதிவிலக்கம் KM/TD/SW/05) கல்விப்பணிகள் இன்றுவரை நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

திரு. சி. நாகமணி அதிபர் அவர்களின் முயற்சியால் 1994இல் வகுப்புகள் க.பொ.த. (சா/த) வரை அதிகரிப்பதற்கான அனுமதி வழங்கப்பட்டது. 30-05-1999இல் திரு.சி.நாகமணி

அவர்கள் ஓய்வுபெற்றதையடுத்து 29-12-1999 வரை திரு.டானியல் பென்சமின் அவர்கள் பதில் அதிபராக கடமை புரிந்தார். அவரைத் தொடர்ந்து பதவியேற்ற திரு. வன்னியசிங்கம் அவர்கள் 31.02.2007 வரை பதவி வகித்தார். திரு.வன்னியசிங்கம் அவர்களின் முயற்சியில் NECORD நிதியுதவியுடன் பலமாடிக் கட்டிடம் ஒன்று அமைக்கப்பட்டது. இரும்பிலான வாயில் தோரண வளைவு, பாடசாலை இலட்சினை வடிவமைப்பு, நூலகம் உருவாக்கப்பட்டமை என்பன இவரது பதவிக்காலத்தில் செய்து முடிக்கப்பட்ட முக்கிய விடயங்களாகும். இதுதவிர பாடசாலையில் பூங்காவொன்றும் இவரது காலத்தில் செய்து முடிக்கப்பட்டது.

01-03-2007 முதல் அதிபராக திரு. ஞானரெட்ணம் அவர்கள் பதவியேற்றார். இவரைத் தொடர்ந்து 22-07-2011 முதல் திரு. எஸ். இரவீந்திரன் அவர்கள் பதவி வகித்தார். பாடசாலையின் மையத்தில் சிதைவடைந்த நிலையிலிருந்த பழைய கட்டிடம் முற்றாக அகற்றப்பட்டது. பாடசாலையில் கண்காட்சிகள் முதலான மாணவர் செயற்பாடுகள் இவரது காலத்தில் சிறப்பாக நடாத்தப்பட்டன. பாடசாலை இன்னிய அணியையும் இவர் உருவாக்கினார்.

இவரைத் தொடர்ந்து 29-07-2011 முதல் திரு.ச.சபாரெட்னம் அவர்கள் அதிபர் பதவியைப் பொறுப்பேற்றார். மாணவர் தொகையை உயர்த்துதல், பாடசாலையில் உயர்தர வகுப்புகளை ஆரம்பித்தல் முதலானவற்றை சிறப்பாக முன்னெடுத்தார். பல்வேறு தடைகளைக் கடந்து 01.05.2012ஆந் திகதி முதல் உயர்தர வகுப்புக்களுக்கான அனுமதி கிடைக்கப் பெற்று மகாவித்தி யாலய தரத்திற்கு பாடசாலை உயர்ந்தது. இன்னிய அணி மீளுருவாக்கம், விசேட ஆங்கில வகுப்பு, பூங்கா மீளமைப்பு என்பன இவரால் முன்னெடுக்கப்பட்டன. ஒன்றுகூடல் மண்டபம் இல்லாத குறையை நீக்க வகுப்பறைக் கட்டிடத் தொகுதியுடன் இணைந்த திறந்த ஒன்றுகூடல் மண்டபம், ஒன்று கூடல் மேடை என்பன இக்காலப்பகுதியில் கட்டி முடிக்கப் பட்டன.

இவருடைய காலத்தில் முன்னாள் அமைச்சர் அனோமா கமகே அவர்களின் நிதியுத வியுடன் ஒரு தொகுதி பிளாஸ்டிக் கதிரைகள் பெற்றுக் கொள்ளப்பட்டதுடன் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. கோடீஸ்வரன் அவர்களின் நிதிப்பங்களிப்பில் இன்னிய அணிக்குரிய உபகரணங்கள் பெற்றுக் கொள்ளப் பட்டன.

திரு. எஸ். சபாரத்தினம் அவர்கள் 2021.03.05ஆம் திகதி முதல் ஓய்வு பெற்றதைத் தொடர்ந்து திருமதி. யோ.இராமநாதன் அதிபராகப் பதவியேற்றார். திருமதி. யோகேஸ்வரி இராமநாதன் அவர்கள் 2022.12.05 ஆந் திகதி இடமாற்றம் பெற்று செல்ல திரு. தி. கண்ணபிரான் அவர்கள் பொறுப்பு அதிபராக நியமிக்கப்பட்டார்.

பாடசாலைக்கு 2024.02.05 ஆந் திகதி முதல் திரு. சண்முகம் தனராஜ் அவர்கள் புதிய அதிபராக நியமிக்கப்பட்டார்.

## 6.4 கமு/கமு / விவேகானந்தா வித்தியாலயம்

கமு/கமு/விவேகானந்தா வித்தியாலயம் 1992ஆம் ஆண்டு நற்பிட்டிமுனையில் மற்றோரு பாடசாலையாக ஆரம்பிக்கப்பட்டது. இந்த காணி முன்னர் கல்முனை கோட்டக் கல்வி அலுவலகம் அமைந்திருந்த காணியாகும். 1989ஆம்ஆண்டு நிகழ்ந்த தீவிரவாதத் தாக்குதல் ஒன்றின் மூலம் இக்கட்டிடத்தின் பெரும்பகுதி உடைக்கப்பட்டது.

சில காலம் இக்கட்டிடம் சிதைவுற்ற நிலையில் காணப்பட்டது. அதேவேளை சனத்தொகை

அடர்த்தி மற்றும் சமூக கட்டமைப்பு மாற்றம் என்பவற்றின் காரணமாக இன்னுமொரு ஆரம்பப் பாடசாலை தொடங்கப்படவேண்டிய தேவை உணரப்பட்டது. புத்திஜீவிகள் உந்துதலில் விவேகானந்த வித்தியாலயம் என்ற பெயரில் இப் பாடசாலை 01.03.1992 தொடங்கப்பட்டது. முதலாவது மாணவரணி 22 மாணவர்களைக் கொண்டமைந்திருந்தது.

இப்பாடசாலையின் முதல் அதிபராக திரு.கோ.பாலகிருஷ்ணன் அவர்கள் 01.03.1992 இல் தொடக்க அதிபராக நியமிக்கப்பட்டார். சில காலம் தன்னந்தனியராக பாடசாலையை நிறுவகித்தார். அதன் பின் ஆரம்பகால ஆசிரியர்களாக திரு. கே.எஸ் .லோகநாதன் மற்றும் திருமதி. ஏ. ராஜசிறி ஆகியோர் இணைக்கப்பட்டனர். திரு. கோ. பாலகிருஷ்ணன் அவர்கள் 2004 வரை அதிபராகப் பணியாற்றினார். இவரது பணிக்காலத்தில் புதிய கட்டிட வசதிகள் பல பெறப்பட்டன.

1992ஆம் ஆண்டு நிகழ்ந்த இனக்கலவரம் மற்றும் வன்செயல்கள் பொது இடம் பெயர்வுக்குள்ளாகி தம் கல்வி வாய்ப்புகளை இழந்த வெப்படித்தோட்டம் அரசினர் தமிழ் கலவன் பாடசாலை மாணவர்களுக்கும் இப்பாடசாலை வளாகத்தில் தம் கல்வி நடவடிக்கைகளை மேற்கொள்ளப்பட வழி செய்யப்பட்டது.

திரு.க.லோகநாதன் அவர்கள் 2004.11.10 முதல் 2007.12.26 ஆந் திகதி வரை இப்பாடசாலையின் அதிபராக பணியாற்றினார். 2007.12.28 முதல் திருமதி. சூரியகலா ஜீவராஜா அவர்கள் இப்பாடசாலையின் அதிபராகச் செயற்பட்டார். பிரதி அதிபராக திரு. என். வரதராஜன் அவர்கள் பணியாற்றினார். திருமதி. சூரியகலா ஜீவராஜா அவர்கள் 30.12.2015 வரை அதிபராகக் கடமையாற்றினார். அவரைத் தொடர்ந்து திரு. ந. வரதராஜன் அவர்கள் 2019.01.17வரை அதிபராக கடமையாற்றினார். 18.01 .2019 முதல் 03.09.2021 வரை திரு.கு.வரதநாதன் அவர்கள் பாடசாலையில் அதிபர் பதவியை வகித்தார். இவர் ஓய்வுபெற்றுச் செல்ல திரு. ந. வரதராஜன் அவர்கள் 2021.09.04 முதல் மீண்டும் அதிபராகச் செயற்பட்டார்.

திரு. கோ. ஹிரிதரன் அவர்கள் 2022.07.08 ஆந் திகதி முதல் இப்பாடசாலையின் அதிபராகப் பதவியேற்றார். இப்பாடசாலையில் சிதைவடைந்த நிலையில் காணப்பட்ட வகுப்பறைக்கு கட்டிடம், அதிபர் காரியாலயம் ஆகியன 20 இலட்சம் ரூபா செலவில் திருத்தம் செய்யப்பட்டமை அண்மைய அபிவிருத்திகளுள் ஒன்றாகும்.

## 6.5 நற்பிட்டிமுனையில் இயங்கிய வாசிகசாலைகள்

நற்பிட்டிமுனை தமிழ் பிரிவில் முழுமை பெற்ற ஒரு நூலகம் இல்லை என்ற குறை இங்குள்ள வாசகர்களிடம் நீண்டகாலமாக இருந்து வருகிறது. ஆயினும் நீண்டகாலமாக வாசிகசாலைகளை மக்கள் அமைப்புகள் அமைத்து செயற்படுத்தி வந்துள்ளன.

கிராமோதய சபை வாசிகசாலை – கிராமோதய சபையினால் நடத்தப்பட்ட வாசிக சாலையொன்று நீண்டகாலமாக நற்பட்டிமுனை ஸ்ரீ கணேசராலயத்துக்கு சொந்தமான காணியில் இயங்கி வந்தது. பிற்பட்ட காலங்களில் அது செயலிழந்து போனது.

அமரர் நவரத்தினம் நல்லரத்தினம் அவர்கள் தனது திருத்தணிகை வளாக சூழலில் கிடுகுக் கொட்டகையால் அமைந்த நூலகம் ஒன்றை வாசிப்பு பழக்கத்தை ஊக்குவிக்கும் வகையில் ஏற்படுத்தினார். இது 1980 களில் செயற்பட்டது. தெரிவு செய்யப்பட்ட நூல்கள், சஞ்சிகைகள், தினசரிப் பத்திரிகைகள் என்பன இவ்வாசிகசாலையில் கிடைத்தன.

1989களில் அறிவுத்தாரை சனசமூக நிலையம் 'அறித்தாரை வாசிகசாலை' எனும் வாசிகசாலையை தனியாருக்கு சொந்தமான "இந்திர பவனம்" இல்லத்தில் நடாத்தியது. சில சஞ்சிகைகள் மற்றும் நாளாந்தப் பத்திரிகைகள் இங்கு கிடைத்தன.1997வாக்கில் இந்த வாசிகசாலை பிள்ளையார் கோயிலுக்கு அருகில் உள்ள மகளிர் கொத்தணி அமைப்பு கட்டிடத்தில் நடாத்தப்பட்டது. ஆயினும் பிற்பகலில் மட்டும் திறந்திருக்கும் நடைமுறையில் காணப்பட்டது. பராமரிப்பு ஆளணிகள் இல்லாமையால் இந்த வாசிகசாலை தொடர்து செயற்படவில்லை.

நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பு அதனது நூலகச் செயற்பாட்டினை கமு/சிவசக்தி மாவித்தியாலயத்துக்கு முன்னுள்ள கட்டிடத்தில் நடத்தி வருகிறது. பாடசாலை மாணவர்களின் கல்வி விருத்திக்குத் தேவையான நூல்கள் மற்றும் பொது வாசிப்புக்குரிய நூல்கள் என்பன இங்கு காணப்படுகின்றன. முறையான பராமரிப்புரிய முறைமை இன்மையால் தொய்வு நிலையில் இந்நூலகம் செயல்பட்டு வருகிறது. ஆயினும் முறைப்படியாக பராமரிப்பதில் ஆளணி குறைபாடுகளால் இம்முயற்சிகள் பெரிதும் பயனளிக்கவில்லை.

## 6.6 நற்பிட்டிமுனையின் பாலர் கல்வி செயற்பாடுகள்

ஆரம்ப காலத்தில் பாலர் கல்வி நடவடிக்கைகள் பாடசாலைக் கல்விச் செயற்பாடுகளுக்குள் நுழையும் மாணவர்களை அதற்குத் தயார்ப்படுத்தும் ஒரு பிரத்தியேக முயற்சியாகவே காணப்பட்டது. அதற்கென நிறுவன ரீதியான அமைப்புகள் இருக்கவில்லை. தனிப்பட்ட முறையில் வீடுகளில் சுய விருப்பின் அடிப்படையில் சிலரால் இத்தகைய கற்பித்தல் செயற்பாடுகள் நடத்தப்பட்டன.

இடைப்பட்ட காலப்பகுதிகளில் பாடசாலை கல்வியோடு சேர்ந்து தொடக்க வகுப்புகளாக அரிவரி வகுப்புகள் அல்லது பாலர் வகுப்புகள் என நடத்தப்பட்டன. காலத்துக்கு காலம் அரசு தம் கல்வித்திட்ட மாற்றங்களுக்கு ஏற்ப பாடசாலைக் கல்வியோடும் தனித்தும் பாலர் கல்வி முன்னெடுப்புகள் மேற்கொள்ளப்பட்டன.

1985களின் பிற்பகுதியில் சர்வோதய அமைப்பு தெரிவு செய்யப்பட்ட அதன் தொண்டர்களைப் பயிற்சியளித்து பாலர் பாடசாலைகளின் ஆசிரியர்களாக நியமித்தது. தொண்டு அடிப்படையிலேயே அவர்களின் சேவைகள் தொடரப்பட்டன. நற்பிட்டிமுனையின் பாலர் கல்விச் செயற்பாடுகளை வாணி சர்வோதயம், வளர்மதி சர்வோதயம் ஆகியன நடத்தின. வாணி சர்வோதயப் பாலர் பாடசாலை, வளர்மதி சர்வோதயப் பாலர் பாடசாலை என்ற பெயர்களில் அவை பாலர் கல்வியை வழங்கின.

அதனைத் தொடர்ந்து 1995களிலிருந்து நற்பிட்டிமுனை சமாதான பாலர் பாடசாலை இயங்க ஆரம்பித்தது. தமிழ், முஸ்லிம் மாணவர்கள் ஒன்றாயிருந்து கற்கும் வாய்ப்பை அது மீண்டும் ஏற்படுத்தியது. வாணி சர்வோதயப் பாலர் பாடசாலை ஆசிரியரே நற்பிட்டிமுனை சமாதானப் பாலர் பாடசாலையையும் ஏற்று கற்பித்தார். இந்த வகையில் நற்பிட்டிமுனை சமாதான பாலர் பாடசாலை எழுச்சி பெற்றது. 2002இல் நற்பிட்டிமுனை கிராம அபிவிருத்தி சங்கம் கட்டிடத்தில் நற்பிட்டிமுனை சமாதான பாலர் பாடசாலை இயங்கத் தொடங்கியது.

வளர்மதி பாலர் பாடசாலை தனியார் வீடுகளின் 1985களில் இருந்து இயங்கி வந்த நிலையில் 2005களில் சுனாமி அனர்த்தத்தின் பின்னான சமூகப் புனரமைப்புச் செயற்பாடுகளின்

கீழ் கனேடிய மருத்துவக் குழுவின் அனுசரனையில் பாலர் பாடசாலைக் கட்டிடம் ஒன்றைப் பெற்றது. அம்பலத்தடிப் பிள்ளையார் ஆலய காணியில் இதற்கான இடம் வழங்க ஆலயம் ஒப்புதல் வழங்கியது. 2006ஆம் ஆண்டு புதிய கட்டிடத்தில் திறந்து வைக்கப்பட்டு தொடர்ச்சியாக நடைபெற்று வருகின்றது.

இதே போல் நற்பிட்டிமுனை சமாதானப் பாலர் பாடசாலைக்கான தனியான கட்டிடம் பிள்ளையார் கோயில் காணியில் 2008 ஆம் ஆண்டு ஐரோப்பிய சங்கத்தின் நிதியுதவியுடன் பன்னாட்டு புலம்பெயர்வுக்கான அமைப்பின் மூலம் அமைக்கப்பட்டது. சிறப்பாக இயங்கும் இப் பாலர் பாடசாலைக்கு 2020ஆம் ஆண்டு உலக வங்கியின் நிதியுதவியில் முன் கூடார அமைப்பு புனரமைக்கப்பட்டது.

**உசாத்துணை**


1. G.G Finlay DD, W.W Holdsworth MA, BD,History of the Wesleyan Methodist Missionary Society, 1924.
2. Nimal Mendis, A History of the Methodist church,Sri Lanka 1814- 2008.
3. The Ceylon GOVERNMENT GAZETTE INDEX FOR JANUARY TO JUNE, 1928,No.7,623 to No.7,651.
4. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 5207, மார்ச் 10, 1893
5. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 5409, மே 29, 1896
6. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 6415, திகதி 16.12.1910
7. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 7387 திகதி 11 04.1924
8. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 7890, திகதி 30.10.1931
9. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 8420, திகதி 16.12.1938
10. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 8809, திகதி 07.11.1941
11. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல. 9060 - 9141, ஜனவரி-யூன் 1943
12. கணபதிப்பிள்ளை சி. , பூர்வீக சப்த ஸ்தலங்கள், விபுலானந்த அச்சகம் , யாழ்ப்பாணம், 1979
13. கல்வி விடியலின் கலங்கரை விளக்கு , அமரர் ந.நல்லரெத்தினம் நினைவு வெளியீடு-2007, நற்பிட்டிமுனை
14. கலாபம், பத்தாண்டு நினைவுமலர், கமு /சுவாமி விபுலானந்த வித்தியாலயம், கல்முனை, 2002
15. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், வெல்லாவெளி வரலாறும் பண்பாடும், வெல்லாவெளி கலைமகள் மகா வித்தியாலய மாணவர் மன்ற வெளியீடு, 2012
16. தரம் 9, கல்வி வெளியீட்டுத் திணைக்களம், கொழும்பு, 2017
17. வித்தியம், தட்டிக் கொடுத்தல் - நற்பிட்டிமுனை கல்வி பிவிருத்தி அமைப்பின் ஆண்டுவிழா மலர் -2010.
18. சம்பவத்திரட்டு பதிவேடு, மட்/நற்பிட்டிமுனை அரசினர் பாடசாலை(தற்போது கமு/ சிவசக்தி மகா வித்தியாலயம்- 1932.
19. சஞ்சீவி சிவகுமார், “நற்பிட்டிமுனையின் கல்வி முன்னெடுப்புக்களும் சிவசக்தி மகாவித்தியாலயமும்”, தடம் , கமு / சிவசக்தி வித்தியாலயம் நற்பிட்டிமுனை, 2015
20. நடராசா எவ். எக்ஸ் சி, மட்டக்களப்பு மான்மியம், 1998
21. மத்தியூ எஸ்.ஏ.ஐ, வரலாறு தரும் மட்டக்களப்பு, ஒக்டொபேர் ,2009
22. மௌனகுரு சி, மட்டக்களப்பு மரபுவழி நாடகங்கள், விபுலம் வெளியீடு,1998

# 07. நற்பிட்டிமுனையின் ஆன்மிக வரலாறு

**ந**ற்பிட்டிமுனையின் ஆன்மிக வரலாறு மிக நீண்டதும் பன்முகத் தன்மை வாய்ந்ததாகவும் காணப்படுகின்றது. நற்பிட்டிமுனைக் கிராமத்தில் மட்டுமன்றி வெளியிலுள்ள அயல் கிராம ஆலயங்களின் கோயில் தலைமைத்துவத்தையும் நற்பிட்டிமுனை வன்னிமை கோத்திரம் வழங்கி வருகிறது (Dennis B McGilvray, 2008:99). வன்னிமை ஆட்சி அதிகாரம் பெற்றிருந்த காலத்தொடர்ச்சியாக தேசத்து ஆலயங்களுக்கு தலைமை வகிக்கும் பொறுப்பு வழங்கப்பட்டுவருகின்றது.

நற்பிட்டிமுனை மக்கள் தமது குல தெய்வமாக காளியம்மனை வணங்கி வருகின்றனர். நற்பிட்டிமுனை கிராம கட்டமைப்புக்குள் ஸ்ரீகணேசர் ஆலயம், கந்தசுவாமி கோயில், ஸ்ரீ நகுலேஸ்வரர் ஆலயம் ஆகிய மூன்று கோயில்களும் ஒரே சுற்றுவட்டத்தில் அமைந்துள்ள கோயில் சதுக்கத்தில் காணப்படுகின்றன. இவை தவிர வேம்படி விநாயகர் ஆலயம், அம்பலத்தடிப் பிள்ளையார் கோயில், மகா விஷ்ணு ஆலயம், நாகபூசணி அம்மன் ஆலயம் ஆகியன இங்குள்ள முக்கிய கோயில்களாகும்.

சேனைக்குடியிருப்பு பத்திரகாளியம்மன் ஆலயம், நற்பிட்டிமுனை ஸ்ரீகணேசராலயம் ஆகியவை ஒரே நிர்வாகத்தின் கீழ் நிர்வகிக்கப்பட்டு வருவன. ஆதிமாகாளியாக சொறிக்கல்முனையில் கோயில் கொண்டிருந்த காளியம்மன் ஆலயம் அந்நியர் ஆட்சியில் அழிக்கப்பட்ட பின்னர் பால்குடிபாவா அவர்களால் சேனைக்குடியிருப்பில் இவ்வாலயம் பிரதிட்சை செய்யப்பட்டது (கணபதிப்பிள்ளை சி , சப்த தலங்கள், 1979). முந்நூறுக் கும் அதிக வருடகால பழமைமிக்க பதியாக விளங்கிய சேனைக்குடியிருப்புக் காளியம்மன் ஆலயம் 2022 ஆம் ஆண்டுக்கான வருடாந்த உற்சவத்தின் போது ஆலயத்தில் குழப்பம் விளைவித்த ஒரு குழுவினால் அம்மன் கிராம வீதியுலா வரமுடியாதபடி தடுக்கப்பட்டு ஆலய பூசைகள் முடக்கப்பட்டன. இதன் அடிப்படைக் கோரிக்கையாக ஆலயத்தின் நிருவாகச் செயற்பாடு

களில் தங்களுக்கும் அதிகார பதவிகள் தரப்பட வேண்டும் எனும் கோரிக்கைகள் சேனைக்குடியிருப்பு மக்கள் சார்பாக முன்வைக்கப்பட்டன. (முன்னுள்ள நடைமுறையில் சேனைக்குடியிருப்பு கிராமம் சார்பில் ஒருநாள் பூசை வழங்கப்பட்டிருப்பதும் அதே தினத்தில் மட்டும் அம்மன் கும்பம் சேனைக்குடியிருப்பை முழுமையாக வலம் வருவதும் காணப்படுகின்றது. நிருவாகக் கட்டமைப்பில் நற்பிட்டிமுனை வயிற்றுவார் தொடர்பில் உள்ளவர்களுக்கு பதவி வழங்கும் முறைமையும் காணப்படுகின்றது). இணக்கப்பாட்டுக்கான பலசுற்றுப் பேச்சுக்களும் வெற்றி பெறாத நிலையில், அம்மனின் சிலை நற்பிட்டிமுனைக்குக் கொண்டுவரப்பட்டு நற்பிட்டிமுனைக் கணேசராலய வளாகத்தில் தற்காலிகமாகப் பிரதிட்டை செய்யப்பட்டது. உரிய பிராயச்சித்தப் பூசைகள் நடைபெற்று அம்மன் வீதியுலா மற்றும் நவராத்திரிப் பூசைகள் செய்யப்பட்டன (இதுபற்றி பின்னர் தனியாக விபரிப்பேன்). இவ்வாலயங்களின் நிர்வகிப்பு மட்டுமன்றி பாண்டிருப்பு திரௌபதி அம்மன் ஆலயம், திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயம் ஆகியவற்றுக்கான தலைமை பொறுப்புகளும் நற்பிட்டிமுனை வன்னிய கோத்திரத்துக்கு சாசன ரீதியாக வழங்கப்பட்டிருப்பன.

இது குறித்து தாதன் கல்வெட்டு மற்றும் திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயத்தின் மீது எழுதப்பட்ட பல ஆவணங்களிலும் குறிப்புகளைக் காணலாம். இந்த வகையில் நற்பிட்டிமுனை பணிக்கனார் குடியார் கரவாகுப் பற்றுக்கான தேச வன்னிமையாக பல்வேறு ஆலயங்களில் பங்கு பற்றி வருகின்றனர்.

### பஸ்கோல் முதலி பற்றிய குழப்பங்கள்

ஒல்லாந்தர் மட்டக்களப்பை தம்வசப்படுத்திய பின், 1728களில் கிறிஸ்தவத்தைப் பரப்பும் நோக்குடன் மட்டக்களப்புக்கு பஸ்கோல் முதலி வந்தான் என மட்டக்களப்பு மான்மியம் (எவ். எக்ஸ்.சீ நடராசா 1998:73) தெரிவிக்கின்றது. இவன் மட்டக்களப்பின் முக்குகத் தலைமைகளுக்கு எதிராக சதி செய்து இரு நிலமைகளையும் நிதிய அதிபர்களையும் கண்டி மன்னன் ஸ்ரீ விஜய இராஜசிங்கன் (1739 -1747) மூலம் சிரச்சேதம் செய்வித்தான் (எவ். எக்ஸ்.சீ நடராசா, 1998:74) எனக் கூறப்படுகின்றது.

ஆயினும் ஒல்லாந்தர்கள் புரட்டஸ்தாந்து மதத்தையே ஆதரித்தார்கள் அன்றி கிறிஸ்தவ மதத்தை நேரடியாக ஆதரிக்கவில்லை என்பதையும் மனங்கொள்ளுதல் அவசியம். பிரான்சியப் புரட்சியின் பின் ஒல்லாந்தர் கிருஸ்தவ மதத்தின் மீது இணக்கப்பாடான அணுகுமுறையைக் காட்டியதாகக் கூறப்படுவதுண்டு

பஸ்கோல் முதலியின் காலத்தை வெல்லவூர்க் கோபால் (2011:117) ஒல்லாந்தர் ஆட்சியின் இறுதிக்கு காலம் எனக் குறிப்பிடுகிறார். பஸ்கோல் முதலி ஆங்கிலேயர் ஆட்சியிலும் முதலியாகப் பணிபுரிந்த குறிப்புகளைக் காணமுடிகின்றது. இவர் யாழ்ப்பாணத்திலிருந்து முதலிப் பட்டம் பெற்று மட்டக்களப்புக்கு வந்த தமிழ் கிறிஸ்தவராக ஞா. சிவசண்முகம் குறிப்பிடுகின்றார்(ஞா. சிவசண்முகம், 2000:24).

வரலாறுகளில் பஸ்கோல் முதலி தனது இனவிரோதச் செயற்பாடுகளுக்காக பெரிதும் விமர்சிக்கப்படுகின்றார். பல வன்னியர்களின் இறப்புக்கும் நில அபகரிப்புக்கும் இவர் காரணமாக இருந்தமை குறிப்பிடப்படுகின்றது. ஏறக்குறைய 1500 ஏக்கர் விஸ்தீரணம் கொண்ட மட்டக்களப்பின் எருமைத் தீவை சூழ்ச்சி மூலம் தனியொரு ஆளாக தனக்கே

உரித்துடையதாக மாற்றியதாகக் குறிப்பிடப்படுகின்றது. இவை வன்னியர்களின் உடமையாக இருந்து இவனால் அபகரிக்கப்பட்டதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

சொறிக்கல்முனையில் கோயில் கொண்டிருந்த ஆதிமாகாளி கோயிலை இடித்துவிட்டு கிறிஸ்தவ ஆலயம் அமைத்தான் என்பதான கதையொன்றும் கூறப்படுகின்றது.(ஞா.சிவசண்முகம், 2000:25;கணபதிப்பிள்ளை சி.1979) இவ்வாறு அழிவடைந்து மண் மூடிக்கிடந்த விக்கிரகம் பின்னாளில் பால்குடிபாவா அவர்களின் மூலம் சேனைக்குடியிருப்பு பத்திரகாளி அம்மன் ஆலயமாக பிரதிட்சை செய்யப்பட்டதாக பூர்வீக சப்த ஸ்தலங்கள் எனும் நூல் குறிப்பிடுகின்றது. இவ்வாறே சொறிக்கல்முனையில் பஸ்கோல் முதலியால் கத்தோலிக்கத் தேவாலயம் 1807களில் அமைக்கப்பட்டதாகக் கூறப்படுகின்றது (கணபதிப்பிள்ளை சி.1979:08).

பஸ்கோல் முதலியின் வருகை குறித்து பாரிய கருத்து மாறுபாடுகள் காணப்படுவது அவதானிக்கக் கூடியதே. பஸ்கோல் முதலி செய்த சூழ்ச்சி கண்டறியப்பட்டு அவன் காரைநகர் கடற்கோட்டை சிறையில் அடைக்கப்பட்டதாக தெரிவிக்கின்றது. அதன் பின் 1766களில் கண்டி அரசுடன் ஒப்பந்தம் செய்யப்பட்டு மட்டக்களப்பு வன்னிமைகள் உள்ளூர் தலைமை களாக (தலைமைப்போடி என்ற பதவிக்கு) நியமிக்கப்படுகின்றனர். மட்டக்களப்பு இரு பாகங்களாய்ப் பிரிக்கப்பட்டு வடக்குப் பக்கத்திற்கு அருமைக்குட்டிப் போடியும் தெற்குப்பா கத்திற்கு கந்தப்போடியும் 1766 கார்த்திகை 06 திகதியிடப்பட்டு ஆளுநர் இமாம் வெல்கம் பல்க் அவர்களின் கையொப்பத்துடன் வழங்கப்படுகின்றது (சிவப்பிரகாசம் K.R.1988:174-175). ஆயினும் வேறு சில ஆவணங்கள் ஆங்கிலேய ஆட்சி வரைத் தொடர்ந்த பஸ்கோல் முதலி 1817இல் தனது பிறப்பு வழியில் (தாயின் அடிமைத் தன்மை காரணமாக) அடிமை என அறியப்பட்டு அப்போதிருந்த நடைமுறைக்கு அமைய பதவி விலக்கப்படுகிறான் (Nira Wickramasinghe,2020:197-198) எனப் பதிவிடுகின்றன.

ஆயினும் பஸ்கோல் முதலி என்றொருவர் ஆங்கிலேய ஆட்சியில் மட்டக்களப்பில் பணிபுரிந்தமை தெளிவாக உள்ளது. இத்தகைய கால வேறுபாடு மற்றும் முரண்பாடுகள் குறித்து வெல்லவூர்க் கோபால் குறிப்பிடுகையில் பஸ்கோல் முதலி யாழ்ப்பாணத்திலிருந்து வந்த தோன் பிலிப் இராசகாரியராகத்தான் இருக்க முடியும் எனும் கருத்தை முன்வைக்கிறார் (வெல்லவூர்க் கோபால், 2011:117). தோன் பிலிப்பின் இனவாதச் செயற்பாடுகள் பின் வந்த பஸ்கோல் முதலியின் பெயருடன் இணைக்கப்பட்டதாகப் பார்க்கவும் வாய்ப்பளிக்கின்றது. பஸ்கோல் முதலி பற்றிய இந்த சர்ச்சைகள் அவரை வரலாற்றில் சரியாக இனங்காட்டத் தடையாகியது.

## 7.1 ஆலயங்களும் அவற்றின் வரன்முறைகளும்

**பத்திரகாளியம்மன் ஆலயம்:**

மட்டக்களப்பின் தென் கோடியில் கல்முனைக்கு மேற்காக வாவியும் வயலும் ஒருங்கே தழுவிடும் சொறிக்கல்முனைக் கிராமம் இருக்கிறது. இப்பதியிலே ஆதிமாகாளியாக ஆட்சியும் மாட்சியும் கொண்டு அம்பாள் அருள் பாலித்துவந்தாள். சொறிக்கல்முனை ஆதிமாகாளி ஆலயம் எப்போது நிறுவப்பட்டது என்பது பற்றி சரியான ஆதாரக் குறிப்புகள் கிடைக்கவில்லை. ஆயினும் இவ்வாலயம் 17ம் நூற்றாண்டுக்கும் முந்தியது என்பதை மற்றைய வரலாற்றுக் காரணிகளுடன் ஒப்பிட்டு ஊகிக்க முடியும்.

சொறிக்கல்முனை ஆதிமாகாளி ஆலயம் பஸ்கோஸ் முதலியின் இனவாதச் செயற் பாடுகளால் 1749 இல் உடைக்கப்பட்டு பல ஆண்டுகளாக மண்மூடிக் கிடந்தது எனக் கூறப்படுகின்றது. 1820களின் பிற்பகுதியில் இந்தியாவின் காஷ்மீரிலிருந்து குதிரைப்படைத் தளபதியான ஜெயகிரி எனப்படும் பால்குடிபாவா கதிர்காமத்தில் வந்து தங்கியிருந்தார் (குமாரசாமி. வ ,1935:280-294). இவ்வாலயத்தின் தோற்றம் பற்றிக் கூறப்படும் கதையில் முருகப்பெருமான் பால்குடிபாவாவின் கனவில் தோன்றி "சொறிக் கல்முனையில் அழிவுற்றுக் கிடக்கும் மாகாளி அம்மன் ஆலயத்தை அவ்விடத்தில் இருந்து தென்கிழக்கு நோக்கிய திசையில் சனசந்தடி இல்லாத நீர் நிலையும் புதர்களும் விருட்சங்களும் சூழ்ந்த இடத்தில் கொண்டு அமர்த்துவாயாக" என ஆணையிட்டார். முருக தரிசனம் பெற்ற பால்குடிபாவா ஐம்பொன்னாலான அடையலையும் முக்கோண வடிவிலான மாணிக் கல்லையும் எடுத்துக் கொண்டு முருகப் பெருமான் அடையாளம் காட்டிய இடம் நோக்கி வந்தார். வயது முதிர்ந்த பாட்டி ஒருத்தி அடையாளமாயிருந்து காட்சி கொடுத்து மறைந்தருளினார். இவ்விடமே அம்பாளுக்குரிய இடம் என்பதை உணர்ந்த பால்குடிபாவா ஆலயப் பராமரிப்பாளரும் பூசகரும் வேண்டுமே என முருகப் பெருமானை மன்றாடினார். அவ்வேளையில் அங்கு தென்பட்ட இருவரை விசாரித்த போது இவர்கள் நாப்புட்டிமுனையிலுள்ள கந்தப்போடி நிலமையின் படகோட்டிகளெனத் தெரியவந்தது (ஞா.சிவசண்முகம்,2000:25;கணபதிப்பிள்ளை சி.1979:08; எவ். எக்ஸ்.சீ நடராசா 1998:73).

பால்குடி பாவா இப்படகோட்டிகளிடம் விடயத்தைக் கூற அவர்கள் கந்தப்போடி நிலமைக்குத் தெரிவித்தனர். கந்தப் போடி நிலமை பால்குடி பாவாவை அணுகி முகமன் கொண்டாடி அவருக்குக் கிடைத்த அற்புத அருளாட்சி பற்றியும், அம்மனின் ஆலயம் மறைந்து கிடந்தமை பற்றியும் பால்குடிபாவாவிடம் அறிந்து கொண்டார். பால்குடிபாவா அம்மனின் ஆலயப் பணியை சிறப்புற நடாத்தும் பணியை கந்தப் போடி நிலமையிடம் ஒப்படைத்தார். அதன்பிறகு கந்தப்போடி நிலமை அக்கசாலைக் கணபதியை அழைத்து அம்பாளைப் பிரதிட்சை செய்வித்து பூசை செய்விக்க ஒழுங்குகள் செய்யப்பட்டன. முதலில் அம்பாள் வடக்கு வாசலில் பிரதிட்சை செய்யப்பட்டாள். அப்போது தாயாரின் உக்கிரம் தாங்க முடியவில்லை. இதனால் பூசகர் பூசை செய்ய முடியாது பின்வாங்கினார். பின்னர் கிழக்குப் பக்கமாக நிலைநிறுத்திப் பூசை செய்ய முயற்சிக்கப்பட்டது. அப்போது தாயாரின் அழகின் உக்கிரம் தாங்க முடியாதிருந்தது. இறுதியில் அம்மனின் சிலை தென்திசையில் பிரதிட்சை செய்யப்பட்டது. அப்போது சாந்தமே உருவான வடிவத்தில் தாயார் காட்சி தந்தார்(ஞா. சிவசண்முகம்,2000:25;கணபதிப்பிள்ளை சி.1979, எவ். எக்ஸ்.சீ நடராசா 1998:73). பொதுவாக அம்மன் வடபத்திரகாளியாக இருப்பதே உண்டு. வேறெங்குமில்லா வகையில் தென்பத்திரகாளி யாக அம்பாள் காட்சிகொடுத்தருளுவது சேனைக்குடியிருப்பு நற்பிட்டிமுனைப்பதியிலே ஆகும். கதிர்காமக் கந்தன் கோயில் கொண்டிருக்கும் திசை நோக்கி அம்பாள் சாந்தரூபியாக அருளாட்சி செய்கிறாள் .

பால்குடிபாவா மீண்டும் நற்பிட்டிமுனைக்கு வந்து அம்பாளின் சந்நிதிக்குக் கும்பாபிசேகம் செய்வித்ததாக வரலாறு கூறப்படுகிறது. பால்குடிபாவா கொண்டு வந்த ஐம்பொன் அடையலும் முக்கோண வடிவிலான மாணிக்கக் கல்லும் அம்மன் பீடத்தின் அடியில் பிரதிட்சை செய்யப்பட்டிருந்தது. 2002களில் இவ்வடையலை யாரோ திருடிச் சென்றிருந்தனர்.

2003 ஆம் ஆண்டு உற்சவத்திற்கு முன் மீண்டும் அடையல் வைக்கப்பட்டு மூலஸ்தானம் அதன் கட்டமைப்பு அப்படியே இருக்கத்தக்கதாகத் திருத்தம் செய்யப்பட்டது. இச் செயற்பாடுகளுக்கான ஆசார வழிகாட்டுதல்களைப் பிரம்மஸ்ரீ வை. ஜி. காந்தன் குருக்கள் அவர்கள் வழங்கினார்கள். இதன் போது பீடத்தின் மேலாக உடைவு ஒன்று தென்பட்டதால் இதனை திருத்தம் செய்வதற்கு அம்மாள் தந்த ஆணையாகக் கொண்டு தொடர்ந்து மூலஸ்தானத்தில் சுவர்கள் இருக்கத்தக்கதாக மேலதிக கொங்கிறீட் தூண் இடப்பட்டு பீடத்திற்கு சிம்மாசனம் கொண்ட அமைப்பு செய்யப்பட்டு கோபுர கலசம் வைக்கப்பட்டு 14.10.2004 இல் கும்பாபிசேகம் செய்யப்பட்டது.

2006 ஆம் ஆண்டு உற்சவத்தின் பின்னர் முன்மண்டபத் திருத்த வேலைகள் முன்னெடுக்கப்பட்டன. வாசல்கதவு விசாலமானதாக இடப்பட்டது. அம்மன் பக்தர்களின் வசதி கருதியும் ஒரு ஒழுங்குமுறையைப் பேணும் வகையிலும் பூசை ஒழுங்கிலும் மாற்றங்கள் கொண்டு வரப்பட்டன. வெள்ளி, செவ்வாய் மற்றும் முழுமதி தினங்களில் பூசகர் மூலம் முன் மண்டபக் கதவு திறக்கப்பட்டு பூசை செய்வதற்கான ஒழுங்குகள் மேற்கொள்ளப்பட்டன. அத்துடன் பூரணை தினங்களில் அம்மனுக்கு பூப்போடுதல் நிகழ்வும் ஒழுங்கு செய்யப்பட்டன. இதனைத் தொடர்ந்து வெறும் மேடைகளாக அமைந்திருந்தபரிவார தெய்வங்களுக்கு தனித் தனி கோயில்கள் ஆலய பிரகாரத்தில் 2007 இல் அமைக்கப்பட்டன. 2009 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட மூன்றாம் மண்டப நிருமாண வேலைகள் நிறைவுசெய்யப்பட்டன.

அம்பாளின் எண்ணிறைந்த அற்புதங்கள் இப்பகுதி மக்களால் உப கதைகளாகப் பேசப்படுகின்றன. இலுப்பை மரம், வேப்பமரம், புடைசூழ அமர்ந்திருந்து அருள்மழையால் பக்தர்களின் துயர்துடைக்கும் மாகாளியின் அருட் செழுமை சொல்லி முடியாதாதவை.

## காளியம்மன் ஆலயச் சடங்குமுறைகள்

### அடுக்குச் சாமான் கொண்டு செல்லுதல்

ஸ்ரீ பத்திரகாளி அம்மன் திருவிழாவுக்காக அடுக்குச் சாமான்கள் நற்பிட்டிமுனை ஸ்ரீ கணேசராலய மடப்பள்ளியிலேயே வைக்கப்பட்டிருக்கும். இவை திருவிழாவுக்கு முதல் நாள் திரையிட்டு அலங்கரிக்கப்பட்ட வண்டியில் ஸ்ரீ பத்திரகாளி அம்மன் ஆலயத்திற்கு எடுத்து செல்லப்படும். ஆலய நிருவாகிகளும் பக்தர்களும் புடை சூழ அடுக்குச் சாமான் ஸ்ரீபத்திரகாளி அம்மன் ஆலயத்திற்கு கொண்டு செல்லப்படும்.

### கதவு திறப்பு

புரட்டாதி மாதத்து பிரதமை முதல் நவமி ஈறாக வரும் ஒன்பது நாட்கள் அம்மன் திருசடங்கு நடைபெறும் காலமாகும். இக்காலப்பகுதியில் நற்பிட்டிமுனை கோலாகலமாக ஊரே விழாக்கோலம் பூணும். நற்பிட்டிமுனைப் பத்திரகாளி அம்மன் ஆலயத்தில் சடங்குகளின் வரன்முறை தெரு வாரியாக கிராமத்தைப் பிரித்து பூசை செய்யப்படும்.

புரட்டாதி மாதத்து பிரதமை பிற்பகலில் கதவு திறத்தல் பூசை நடைபெறும். அம்மன் ஆலய கருவறை வாயிலில் மடை வைக்கப்பட்டு ஆலய வண்ணக்கரிடமுள்ள திறப்பு மடையில் வைக்கப்பட்டு பூசை செய்யப்படும். உடுக்கு பறை என்பன ஒலியெழுப்ப அம்மனுக்குரிய

காவிய மந்திர உச்சாடனங்களுடன் , தேங்காய் உடைக்கப்பட்ட பின் ஆலய வண்ணக்கர் திறப்பை தனது வலக்கரத்தால் எடுத்து கருவறைக்கு கதவில் செலுத்துவார். மண்டாட்டத்துடன் கட்டாடியார் அம்மன் திருக்கதவைத் திறப்பார். கட்டாடியார் மாத்திரமே கருப்பக்கிரகத்தினுள் செல்வார். அங்குள்ள அம்மன் பேழையை எடுத்து வெளியிலுள்ளவர்களிடம் காண்பிப்பார். பின் கருவறையை சுத்தம் செய்து அம்மன் சிலையை உரியவாறு சீர்செய்து அலங்கரிப்பர்.

**கும்பம் கிராமவலம் வருதல்**

நவராத்திரியை மையப்படுத்திய ஒன்பது நாட்கள் விழாக்காலமாகக் காணப்பட்ட போதிலும் விழா ஒழுங்குகள் பின்வரும் வகையில் அமையும். முதல் நாள் பூசை அம்மன் கடல் குளிப்பு பாண்டிருப்புக் கடற்கரையில் நடைபெறுவதுடன் உள்வீதிக்கு மட்டும் வலம்வரும் (ஊரில் கிராமவலம் நடைபெற மாட்டாது). இரண்டாம் நாள் பூசை முதல் ஏழாம் நாள் பூசை வரையான ஆறு நாட்கள் நற்பிட்டிமுனைக் கிராமம் தெரு வாரியாக ஆறு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு கிராம வலம் நடைபெறும். ஆரம்ப நாட்களில் கிராம மக்கள் அடர்த்தி குறைவாகக் காணப்பட்டமையால் முழுக் கிராமத்தையும் அம்மன் சுற்றிவரும் வழக்கம் காணப்பட்டது. யுத்தகால கெடுபிடிகளால் மட்டுப்படுத்தப்பட்ட நேர அனுமதி பாதுகாப்பு தரப்பினால் வழங்கப் பட்டமையால் கிராம வலம் அந்தந்தத் தெருவுக்கு மட்டுப்படுத்தப்பட்டது. அதுவே பிற்காலத்திலும் தொடரப்பட்டது. எட்டாம் நாள் பூசை சேனைக்குடியிருப்பு மக்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. இறுதி நாள் பூசை நாலாம் கிராம மக்களுக்கு ஒதுக்கப்படும். நாலாம் கிராம மக்கள் நற்பிட்டிமுனை வயிற்றுவார்கள் என்பதால் கும்பம் நற்பிட்டிமுனையையே வலம் வரும்.

**பலிச்சடங்கு**

பலிச்சடங்கு பத்தாம் நாள் நடைபெறும். பலிச்சடங்கில் விசேட பூசைகள் நடைபெற்று தெய்வ கிருத்தியங்கள் மேற்கொள்ளப்படும். பிற்பகலில் கட்டாடியார் அம்மனின் மூல விக்கிரகத்தைச் சுமந்து ஆலயத்தை வலம் வருவார். தெய்வ உரு ஆட்கொண்ட நிலையில் விக்கிரகத்தை சுமந்த அவரை மற்றையவர்கள் கைத்தாங்கலாக தாங்கியவாறு இந்த நிகழ்வு நடைபெறும். ஆலய உள் மண்டபத்தின் கிழக்கு மூலையில் மடைவைக்கப்பட்டு மறைப்பிடப் பட்டு அம்மனுக்காக பூசைகள் நிகழ்த்தப்படும். பூசையின் பின் அம்மனுக்கு பலிக்கொடுத்தல் கிழக்கு வாசலில் நடைபெற்று அம்மன் நோற்புச் சோறு கட்டப்படும். பின்னர் சாந்தி பூசை நிகழ்த்தப்படும்.

**அம்மன் வடபத்திரகாளியாக நற்பிட்டிமுனையில் கோயில் கொண்டமை**

சேனைக்குடியிருப்பு பத்திரகாளி அம்மன் ஆலயம் அமைக்கப்பட்ட போது அது சனசந்தடி இல்லாத, நீர் நிலையும், புதர்களும் விருட்சங்களும் சூழ்ந்த இடமாக அமைதல் கருத்திலிருந்தது. அதனால் அப்போது குடியிருப்பு அடர்த்தி குறைவாகக் காணப்பட்ட பகுதி தெரிவுசெய்யப்பட்டிருந்தது. ஆயினும் ஆலய நிருவாகம் நற்பிட்டிமுனை வன்னிமை சார்ந்த குடிவழி நிருவகிப்பின் அடிப்படையில் அமைந்திருந்தது. 1957களிலிருந்து சேனைக் குடியிருப்பு மக்கள் சார்பாக நிருவாகத்தில் தமக்கும் பங்கு வேண்டும் எனும் கோரிக்கைகள்

முன்வைக்கப்பட்டு வந்தன. பொதுவாக ஆலய உற்சவ காலத்தில் இந்தக் குரல்கள் எழுவதுண்டு. தங்கள் கிராமத்தில் அமைந்துள்ள கோயிலில் அடுத்த கிராமத்திலிருந்து வருபவர்கள் ஆட்சி அதிகாரம் செய்வது குறித்த முரண்பாடாக இந்த கோரிக்கைகளின் மீது பல கலந்துரையாடல்களும் நடைபெற்றுள்ளன. ஆயினும் நடைமுறையிலிருந்த குடிவழி நிருவாகக் கட்டமைப்பு காரணமாகவும் பூசை அமைப்புக் காரணமாகவும் அவ்வாறு சமமாகப் பகருத்தல் சாத்தியமற்றுப் போனது.

காளி கோயில் தொடர்பாக காணப்பட்ட இந்த முரண்பாடுகளின் உச்சமாக 2022ஆம் ஆண்டு கசப்பான நிகழ்வுகள் ஏற்பட்டன. சேனைக்குடியிருப்பை பிரதிநிதித்துவப்படுத்தி ஆலய அறங்காவலர்களோ, மூத்த பெருமக்களோ இந்த கலந்துரையாடல்களில் ஒதுங்கியிருத்தத்தையும் சுட்டிக் காட்டவேண்டும்.

இதற்கு முன்னரும் ஆண்டு தோறும் நடைபெறும் உற்சவ காலங்களில் ஆலய நடைமுறைகளில் தமக்கும் சமபங்கு வழங்கப்பட வேண்டும் என்று சேனைக்குடிருப்பு மக்கள் சார்பாகக் கோரப்பட்டுவந்தன. நற்பிட்டிமுனை குடிவழி நிருவாக முறையில் அமைந்த ஆலயமாக இக்காளியம்மன் ஆலயம் நடைமுறைப்படுத்தப்பட்டமையால் நிருவாக அமைப்பில் பங்கு கேட்கும் கோரிக்கை சாத்தியமற்றதாக அமைந்தமையால் சேனைக்குடியிருப்பு சித்திவிநாயகர் ஆலயத்தின் நிருவாகத்தின் கீழாக மாரியம்மன் ஆலயம் சேனைக்குடிருப்பு மக்களால் அமைக்கப்பட்டு நிறுவகிக்கப்பட்டது. அதுவும் ஒரு குடிவழி நிருவாக முறைமைகொண்ட ஆலயமாகவே செயற்பட்டது. காளியம்மன் ஆலயமும் மாரியம்மன் ஆலயமும் சமாந்தரமான உற்சவ முறைமைகளுடன் ஒரே வகையிலேயே செயற்பட்டன. ஆயினும் காளியம்மன் ஆலயத்தின் செயற்பாடுகளை குழப்பம் விளைவிக்கும் குழு ஒன்று தொடர்ச்சியாக இடையூறு செய்த்தது. சேனைக்குடியிருப்பு மாரியம்மன் ஆலயம் அதன் உற்சவ முறைகளை ஆகம முறைக்கு மாற்றியமைத்தது. இதனால் வருடாந்த உற்சவம், பத்ததி வணக்கமுறை என்பவற்றை அவ்வாலயம் கைவிட்டுவிட்டது. இதனால், காளிகோயில் உற்சவத்தில் உரிமை கேட்பதற்கான தேவை மீண்டும் அதிகரித்தது. முறுகல்களை கட்டுப்படுத்த போலீஸ் பாதுகாப்புகள் சிலவேளைகளில் வரவழைக்கப்பட்டன. இவற்றின் உச்சமாக இம்முறை (2022ஆம் ஆண்டு) ஆலயத்தில் குழப்பம் விளைவித்த ஒரு குழுவினால் அம்மன் கிராம வீதியுலா வரமுடியாதபடி தடுக்கப்பட்டு ஆலய பூசைகள் முடக்கப்பட்டன. ஆலயத்தில் இரத்தக் களரி ஏற்படுத்தும் வகையிலான மோதல்கள் நிகழ்ந்தன. கல்முனை வடக்குப் பிரதேச செயலகம் இதில் இணக்கம் காண முனைந்தும் பயனற்றுப் போனது. இதனைத் தொடர்ந்து அம்மன் மீண்டும் நற்பிட்டிமுனைக் கணேஷராலயத்திற்கு கொண்டு வரப்பட்டது. நற்பிட்டிமுனையில் கணேசராலய வளாகத்தில் தற்காலிகமாகப் பிரதிட்டை செய்யப்பட்டு அம்மன் வீதியுலா மற்றும் பூசைகள் தொடர்ச்சியாகச் செய்யப்பட்டன. காளியம்மனை நற்பிட்டிமுனையில் பிரதிட்சை செய்வதா? அல்லது சேனைக்குடியிருப்பில் தொடர்வதா? என்ற சர்ச்சைக்கு அப்போது கூடிய பொதுச்சபையால் நற்பிட்டிமுனையில் புதிய ஆலயத்தில் அம்மனைப் பிரதிட்சை செய்வதாக முடிவெடுக்கப்பட்டது. இம்முடிவுக்கு ஏற்ப நகவிதா அரங்கு அமைந்திருந்த இடத்தில் ஆலயத்தை அமைக்க முடிவாகியது. நகவிதா அரங்கு கலை, கலாசார செயற்பாடுகளுக்கான இடம் என்பதைச் சுட்டிக்காட்டி இவ்விடத்தை தெரிவுசெய்ய வேண்டாம் என்ற குரல்கள் மக்களின் பொது முடிவு என்ற

அடிப்படையில் கருத்திலெடுக்கப்படவில்லை என்பதை பதிவுசெய்ய வேண்டும். சில வேளைகளில் மக்களின் பொது முடிவுகள் அப்போதைக்கான உணர்ச்சிவசப்பாட்டின் அடிப்படையில் எழுவன என்பதையும் கவனிக்கவே வேண்டும். நற்பிட்டிமுனைப் பொது மக்களின் முழுமையான நிதிப்பங்களிப்பில் புதிய காளியம்மன் ஆலயம் அமைக்கப்பட்டது. ஆலயத்தின் கும்பாபிசேகம் 06.09.2023 நடைபெற்று அம்மன் பிரதிட்சை செய்யப்பட்டு நற்பிட்டிமுனையில் அருளமைவு கொண்டார்.

**புதிய ஆலயத்தின் கோயில் கட்டமைப்பும் பலிபீடங்களும்**




**புதிய அம்மன் வீதியுலாவும் பூசை ஒழுங்கமைப்புகளும்**

நற்பிட்டிமுனையில் அருளமைவு கொண்டதன் பின்னாக அம்மன் பூசை ஒழுங்குகள் தெரு வாரியாக அதே ஒழுங்கிலேயே அமைந்துள்ளது. ஆயினும் வீதி வலம் வரும் ஒழுங்கில் மாற்றமேற்பட்டுள்ளது.

### ஸ்ரீ கணேசராலயம்:

நற்பிட்டிமுனை ஸ்ரீ கணேசராலயம் நற்பிட்டிமுனையில் அமையப்பெற்ற முதலாவது ஆலயம் எனக் கூறப்படுகின்றது. பலகாலம் கொத்துப் பந்தல் அமைத்து அதில் பூசை வழிபாடுகள் ஆற்றப்பட்டு வந்தன. பின்னாளில் எம்பெருமானுக்கு கற்கோயில் எழுப்பப்

பட்டது. மூலமூர்த்தியாக விநாயகக் கடவுளும், பரிவார மூர்த்திகளாக இலக்குமி, நாகதம்பிரான் என்பனவும் காணப்படுகின்றன.

நற்பிட்டிமுனை வரலாற்றுக் காலத்திலிருந்து புகழ் பூத்த ஒரு கிராமமாகும். கூத்திகனின் மகன் சேனனின் ஆட்சிக் காலத்தில் நற்பிட்டிமுனை இராசாக்கள் கூடும் இடங்களில் ஒன்றாக இருந்து வந்தது. இது கலிபிறந்து 2868 ஆம் ஆண்டுகளுக்கு சற்றுப் பிந்திய காலப்பகுதியாகும். (எவ். எக்ஸ்.சீ நடராசா, 1998:21) அதன்பின் மட்டக்களப்பு தெற்குக்கான ஒரு திக்கதிபரின் ஆளுகைக்குரிய ஆட்சித்தளமாக நற்பிட்டிமுனை விளங்கியது. ஈழத்து வரலாற்று நூல்களில் நாப்புட்டி எனும் பெயரிலேயே இது வழங்கப்படக் காண்கிறோம். நாக்கு வடிவில் உள்நோக்கி நீட்டப்பட்ட நிலப்பரப்பாக வயலும் சிற்றாறும் சூழக் காணப்படு வதால் இப்பெயர் வந்திருக்கலாம். நாற்படைகளால் காவல்பார்க்கப்பட்ட கிராமம் என்பதால் நாற்படை என்ற பெயர் திரிபடைந்தே நற்பிட்டிமுனை வந்ததெனக் கூறுவாரும் உண்டு.

இத்தகைய ஆட்சிக்குரிய சிறப்புமிக்க பதியான நற்பிட்டிமுனையின் ஆதிக்குடிகளால் அமைக்கப்பட்டு வணங்கப்பட்ட தலம் கணேசராலயமாகும். இவ்வாலயம் எப்போது அமைக்கப்பட்டது என்பது பற்றிய ஆதாரக் குறிப்புகள் கிடைக்கவில்லை. ஆயினும் இக்கிராமத்தின் எழுச்சியுடன் ஆலயத்தின் ஆரம்ப காலத்தையும் மட்டிட முடியும். இதற்கு சான்றாக இவ்வாலயத்தின் பழைய கட்டிடம் சொறிக்கல், நீறு என்பவற்றைக் கொண்டு அமைக்கப்பட்டிருந்தமையைக் கொள்ள முடியும். 1895 இல் வெளியான அரச வர்த்தமானியில் (அரச வர்த்தமானி, ஜூலை 19,1895), நற்பிட்டிமுனை பிள்ளையார் ஆலய நம்பிக்கைச் சபையின் பெயரில் நெல்லுச்சேனை வயல் பதிவு செய்யப்பட்ட அதே நிலஅளவை இலக்கத்தில் வேளவன்னிமை முண்டப்போடி அவர்களின் வயலும் பதிவாகியிருந்தது. இதனடிப்படையில் அக்காலப்பகுதியில் ஆலயத்திற்கு நம்பிக்கைப் பொறுப்பாளர் சபை பதிவுசெய்யப்பட்டிருந்தமை உறுதியாகின்றது. அத்துடன் வன்னிமையாக இருந்த வே. முண்டப்போடி அவர்கள் இக்காணியை கோயிலுக்கு வழங்கியிருக்க முடியும் எனவும் ஊகிக்கலாம்.

இவ்வாலயம் 2000ஆம் ஆண்டு புனர் நிர்மானம் செய்யப்பட்டது. புதிய கட்டடம் அழகுமிளிரும் சித்ர வேலைப்பாடுகளுடனும் பொலிவுடனும் அமையபெற்றது. நற்பிட்டிமுனைக் கிராமத்தின் முழுமையையும் கட்டியாளும் ஆலயமாக இவ்வாலயம் விளங்குகிறது. 2014 ஆம் ஆண்டு ஸ்ரீ கணேசராலயத்தின் புனர்நிருமானத்தின் பின்னரான அடுத்த கும்பாபிசேகம் நடைபெற்றது.

ஆவணி சதுர்த்தசியை அடிப்படையாகக் கொண்டு ஸ்ரீ கணேசப் பெருமானின் மகோற்சவம் ஆண்டு தோறும் நிகழ்த்தப்படுகிறது.

### அம்பலத்தடிப் பிள்ளையார் ஆலயம்

கல்முனையிலிருந்து நற்பிட்டிமுனைக்குள் நுளையும் போது அதன் நுளைவாயிலில் அம்பலத்தடிப் பிள்ளையார் ஆலயம் உள்ளது. ஊர் எல்லையில் காவல் தெய்வமாக ஊரவர்கள் இப்பிள்ளையாரை வழிபடுகின்றனர்.ஆரம்பகாலத்தில் இவ்வாலயத்தின் தலவிருட்சமான ஆலமரத்தின் அடியில் சிறுகல்லொன்றைப் பிரதிட்சைப்படுத்தி மக்கள் வழிபடத் தொடங்கினர். இது ஏறக்குறைய கி.பி 1900களின் ஆரம்பப் பகுதியிலிருந்து தொடங்கியதெனக்

கருதப்படுகின்றது. வாகன வசதிகள் குறைவாயிருந்த அக்காலப்பகுதியில் இக்கிராமத்திற்கும் பிற ஊர்களுக்குமான போக்குவரத்துத் தொடர்பு கால்நடையாகவே இருந்தது. குறுந்தூரப் பாதையாக வயல் அணைக்கட்டுக்களை அண்டிய பாதையையே மக்கள் பயன்படுத்தினர். இப்பாதையின் வழித் தெய்வமாகவும் கிராமத்தின் எல்லைத் தெய்வமாகவும் இக்கல்லைப் பிரதிட்சைப்படுத்தி வழிபாடுசெய்யத் தொடங்கியிருக்கலாம். அதிகாலையில் தூர இடங்களுக்கு தத்தம் தொழிலுக்குச் செல்வோரும் வயல் வேலைகளில் ஈடுபடுவோரும் அம்பலத்தடியானை வணங்கிச் செல்வதை வழக்கமாகக் கொண்டனர். வயல் அறுவடையின் பின்னர் உளவர்கள் முதல் புதிர்ப் பொங்கலிட்டு பக்தி கொண்டாடும் கோயிலாகவும் இது அமைந்தது.

ஓலைக்கிடுகுகளால் அமைக்கப்பட்ட ஒருசிறு பந்தலிலே அம்பலத்தடிப் பெருமான் முதலில் இருத்தப்பட்டார். காரையடிக்குளம் என அழைக்கப்பட்ட வண்டல்மண் கொண்ட தாழ்நிலப்பகுதியை அண்டியதாகக் காணப்பட்ட சற்று உயரமான இடம் இக்கோயில் காணப்படும் பகுதியாகும். வாகை, வம்மி, இத்தி என சுற்றிவர பெருவிருச்சங்கள் வளர்ந்து நிற்கின்றன. நடைவழியில் தங்கிநிற்போர் நினைந்துருகி தம்துன்பம் சொல்லும் இறைவனாகவும் அம்பலத்தடிப் பிள்ளையார் வணங்கப்பட்டார்.

அன்றைய இளைஞர்கள் பலர் சேர்ந்து அம்பலத்தடியானின் இச்சந்நிதியில் மாலைப் பொழுதில் நெய் விளக்கிட்டு வழிபட்டதுடன் தேவைப்பட்ட விபூதி, சந்தனம் முதலானவற்றையும் தாமாகவே ஒழுங்கு செய்தனர்.

1930-35 காலப்பகுதியில் ‘தாஸ்’ என அழைக்கப்பட்ட அன்பரொருவர் வழக்கு ஒன்றில் தனக்கு நீதி கிடைக்க வேண்டும் என அம்பலத்தடியானை வேண்டி நேர்த்தி செய்தார். வழக்கில் வெற்றி கிடைத்தது. அம்பலத்தடியானுக்கு கல்லினால் சிறு கோயில் கட்டி தனது நேர்த்திக் கடனை நிறைவேற்றினார். இதுவே எம்பெருமானுக்கு அமைக்கப்பட்ட ஆரம்பக் கோயிலாகும்.

பாண்டிருப்பு திரௌபதியம்மன் ஆலய வனவாச நிகழ்வின் போது பஞ்சபாண்டவர்கள் பந்தியமர்ந்து செல்லும் தலமாக அம்பலத்தடி ஆலயம் மாறியது. அதன்போது விசேட பந்தர் அமைத்து பாண்டவர்களை அமர்த்தி காலாறிச் செல்லும் நிகழ்வுகளையும் கூடவரும் பக்தர்களுக்கு தாகசாந்தி வழங்கும் பணியையும் அப்போது இளைஞர்களாயிருந்த அமரர் வீரசிங்கம், அமரர் கணபதிப்பிள்ளை ஆகியோர் முன்னின்று செய்தனர். இவர்கள் நற்பிட்டிமுனையிலிருந்து அப்போது கற்குழி வேலையில் (கல்லுடைத்தல்) ஈடுபட்ட மற்றைய இளைஞர்களுடன் இணைந்து அம்பலத்தடிப் பிள்ளையாருக்கு மண்டபம் அமைப்பதற்கான ஒரு அத்தவாரத்தையும் தமது முயற்சியில் கட்டியிருந்தனர். பல ஆண்டுகளாக இவ்வத்திவாரத்துடனேயே இவ்வாலயம் காணப்பட்டது.

1980களின் பிற்பகுதியில் அம்பலத்தடிப் பிள்ளையாரின் அருளினால் ஆலயத்திற்கு முறைப்படியான ஒரு நிருவாகக்குழு அமைக்கப்பட்டது. இதிலிருந்து ஆலய நிருமானப் பணிகள் முன்னெடுக்கப்படுவதற்கும் திருப்பணிச் செயற்பாடுகள் செவ்வனே செய்யப்படுவதற்கும் திருவருள் கைகூடியது. ஆரம்பத்தில் ஆகம முறையிலான பூசைகளற்ற வழிபாட்டுமுறைகளே நடைமுறைப்படுத்தப்பட்டன. ஆகம முறையிலமைந்த ஒரு முழுமையான ஆலயத்தை அமைக்கும் கட்டடத் திருப்பணிவேலைகள் 1999களில் ஆரம்பமானது. ஆலயத்தின் மூலஸ்தானம் அமையவேண்டிய இடத்தில் ஆலயமூல விருட்சமான ஆலமரம் நின்றது. அதன்

அடியில் நாகங்கள் இருப்பிடம் கொண்டுவாழ்ந்து வந்தன. இதனால் ஆலய கட்டடத் திருப்பணிக்காக இவ்விருட்சத்தினை எவ்வாறு அகற்றுவது என்ற கேள்வி விடைகாண முடியாதவொன்றாயிருந்தது. இவ்வேளையில் ஒருநாள் திடீரென வானம் கறுத்து மழை தூறத் தொடங்கியது. கூடவே சூறைக் காற்றும் வீசியது. கிராமத்தின் வேறெந்தப்பகுதியிலும் இக்காற்று ஒரு கிளையைத்தானும் உடைக்கவில்லை. ஆனால் ஆலயவிருட்சத்தின் கிளைகள் முறித்தெறியப் பட்டிருந்தன. இச்செய்திகேட்டு பக்தர்கள் வெள்ளம்போல் திரண்டனர். ஆலய கட்டடத் திருப்பணிகளை உடனே ஆரம்பிப்பதற்கான இறைவனின் ஆணையாகவும், இறைவனே இயற்கையின் வடிவில் இப்பணியினை ஆரம்பித்து வைத்ததாகவும் பக்தர்கள் நெஞ்சுருகிக் கொண்டாடினர்.

ஆகம விதிமுறைப் படியான எம்பெருமானின் ஆலயக் கட்டுமானப் பணிகள் நிறைவடைந்து 2008ஆம் ஆண்டு ஆனி மாதத்தில் மகா கும்பாபிசேகம் நடைபெற்றது.

#### ஆலயத்தில் நிகழ்ந்த கும்பாபிசேக நிகழ்வுகள்:

புனராவர்த்தன கும்பாபிசேகம் 2022 ஜுலை மாதம் 02ஆம் திகதி நடைபெற்றது. ஆனி உத்தரத்துடன் முடிவடையும் பத்து நாட்கள் திருவிழாக்காலமாகும்.

### ஸ்ரீ கந்தசுவாமி கோயில்

நற்பிட்டிமுனையின் மத்தியில் வயல்வெளிகள் இருபுறமும் புடைசூழ ஸ்ரீ கந்தசுவாமி கோயில் அமைந்துள்ளது. வயல்வெளிகளும் சலசலவென்று ஓடும் நீரோடையும் வெளிப் பிரகாரத்தில் சோவென்று காற்று வீசிக்கொண்டிருக்கும் ஆலமரமும் இக்கோயிலுக்கு தனிச்சிறப்பாகும்.

இவ்வாலயம் 1862இல் இராமநாதன் ஆறுமுகம் அவர்களினால் மரங்களை கொண்டு அமைக்கப்பட்டதாக அறியமுடிகிறது. ஆயினும் இந்துசமயத் திணைக்களம் வெளியிட்ட “இலங்கைத் திருநாட்டின் இந்தக் கோயில்கள்” எனும் நூல் குறிப்பின்பால் நோக்கும் போது இதன் காலம் 1780களில் என காட்டப்படுகின்றது (1984:362). இவ்வாலயத்தின் மூலமூர்த்தி வள்ளி தெய்வயானை சமேத சுப்பிரமணியர்.

இவ்வாலயம் அமைக்கப்பட்ட முறை பற்றிக் கர்ணபரம்பரைக் கதை ஒன்று உள்ளது. இராமநாதன் ஆறுமுகம் என்பவரும் அவரது மனைவி அருணாசலம் பிச்சையம்மாவும் இவ்வாலயம் அமைந்துள்ள இடத்தில் வசித்துவந்தனர். இராமநாதன் ஆறுமுகம் அவர்கள் வேளாளர் மரபினர் எனவும் பிச்சையம்மா அவர்கள் தனக்காரர் வகுப்பைச் சேர்ந்தவர் எனவும் கூறப்படுகிறது. கிட்டங்கித் துறையின் ஊடாக தேக்குமர வர்த்தகத்தில் தென்னிந்திய செட்டியார்கள் ஈடுபட்டு வந்தனர். அவர்களுடன் இணைந்து வர்த்தகம் செயற்பாட்டில் ஆறுமுகம் அவர்களும் ஈடுபட்டு வந்தார். அத்துடன் கிட்டங்கி ஊடாக வர்த்தகத்தில் ஈடுபட்ட முஸ்லிம் வர்த்தகர்கள் இராமநாதன் ஆறுமுகம் அவர்கள் குடியிருந்த காணியுடன் இணைந்த வளவில் தமது பொருட்களை விற்பனை செய்துவந்தனர். நெல்லுடனான பண்டமாற்று முறையிலும் அவர்கள் வர்த்தகம் செய்தமையால் விற்பனைப் பொருட்களையும் சேகரித்த நெல்லையும் தமது வள்ளத்தில் பரிமாற்றம் செய்வர். எனவே பாதுகாப்பாக வைப்பதற்கு

சரியான இடம் தேவைப்பட்டது. எனவே இந்தக் காணியில் ஒரு சந்தை கட்டித் தரும்படி கேட்டு வந்தனர். இதற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆயத்தமானார்.

இதனிடையே சிலநாட்கள் முன்னதாக இவரது கனவில். ஒரு வயது முதிர்ந்த பரதேசி தோன்றி தனக்கு குடியிருக்க ஒரு இருப்பிடம் அமைத்துத் தரும்படி கேட்டிருந்தார். இதை அவர் பெரிதுபடுத்த வில்லை. முஸ்லிம் வர்த்தகர்களின் வேண்டுகோளுக்கிசைந்த ஆறுமுகம் சந்தை அமைப்பதற்கான ஒழுங்குகளை மேற்கொண்டார். தனது வயற்காரர் சிலரையும் மரம் வெட்டுபவர்களையும் இதற்கான மரங்களை வெட்டி வரும்படி அனுப்பி வைத்தார். வேலை ஆட்கள் காட்டுக்குச் சென்று தேர்வு செய்தே மரங்களைத் தறித்தார்கள். ஆயினும் அம்மரங்கள் விழுந்து பிறகு மரத்தில் போர் (உட்குடைவான துளை) இருப்பதைக் கண்டார்கள். இவ்வாறு அன்றைய தினத்தில் தறித்த மரங்களெல்லாம் போர் மரங்களாக இருந்தமை மிக விந்தையாக இருந்தது. பொழுது படும்வரை பல மரங்களை தறித்த போதிலும் இவை பயன்படாத போர் மரங்களாக காணப்பட்டதால் வீடு திரும்பி வந்து வேலையாட்கள் திரு. ஆறுமுகம் அவர்களிடம் நடந்தவற்றைக் கூறினார்கள். வெளிப்பார்வைக்கு நல்ல மரங்களாக காணப்பட்ட போதிலும் விழுந்ததும் போர் மரமாக காணப்பட்டமை அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. ஆறுமுகம் அவர்கள் மனச்சஞ்சலத்துடன் யோசித்த போது சில நாட்களின் முன் அவர் கண்ட கனவு ஞாபகத்துக்கு வந்தது. இந்த விடயம் அவரின் மனதை ஆட்கொள்ள ஆறுமுகம் இந்தக் கனவு பற்றி ஆழமாகச் சிந்தித்தார். கனவில் வந்தது முருகன் தான் என்பதை மனம் உறுதியாக கூறியது. சந்தை கட்டும் வேலையை நிறுத்திவிட்டு முருகனுக்கு முதல் வேலையாக இவ்விடத்தில் கோயில் ஒன்று கட்டவேண்டும் என்ற முடிவை எடுத்தார்.

அடுத்த நாள் வேலையாட்களை அழைத்து இவ்விடத்தில் சந்தை கட்டுவதில்லை கோயில் ஒன்றை கட்ட வேண்டும் எம்பெருமான் முருகனை கோயில் கட்டி தரிசிக்க வேண்டும் என மீண்டும் மரம் வெட்ட காட்டுக்கு அனுப்பினார். அடுத்தடுத்து வெட்டப்பட்ட மரங்கள் எல்லாம் மிக நேர்த்தியாக காணப்பட்டன. முருகனின் திருவிளையாடலை நினைத்து நெக்குருகினார்.

1862 இல் இராமநாதன் ஆறுமுகம் மற்றும் அருணாசலம் பிச்சையம்மா அவர்களின் 1021 ஆம் இலக்க சாசனத்தின் படி ஆலயத்திற்கு நெற்காணிகளும் ஏனைய காணிகளும் நன்கொடையாக வழங்கப்பட்டன. இவர்களின் விருப்பத்தின்படி இக் கோயிலையும் ஆவணங்களையும் பராமரிக்க ஒருவரை தமது வம்சங்களில் இருந்து தலைமுறையாக வழங்க வேண்டும் என்றும் அவ்வாறு தலைமுறையில் எவரும் இல்லாத பட்சத்தில் ஊர், தேசம், வன்னிமை, சைவ சமயக் குருக்கள் கூடி பொருத்தமானவர்களை தெரிவு செய்ய வேண்டும் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த வகையில் திரு. இராமநாதன் ஆறுமுகம் அவர்களைத் தொடர்ந்து அவரது சந்ததியில் வந்த கந்தப்போடி முத்துப்பிள்ளை என்பவர் ஆலயத்தின் வண்ணக்கர் ஆக பணிபுரிந்தார். அதனைத் தொடர்ந்து மனைவி வம்சத்தில் அருணாசலம் இராமக்குட்டி என்பவர் வண்ணக்கராகப் பணியாற்றினார்.

பின்வந்த காலங்களில் இவர்களின் வமிசத்தில் எவரும் இல்லை என்பதால் 1921இல் கிராமப் பொதுக் கோயிலாக மாற்றப்பட்டது. இதன்போது சு.ப.கதிரமலைப்போடி, த.

கணபதிப்பிள்ளை ஆகியோர் கோயில் பராமரிப்பாளர்களாக தெரிவாகினர். 1941இல் ஞான முத்துப் பிச்சைப்பிள்ளை , தெய்வநாயகம் செல்லையா , சா.திருமேனிப்பிள்ளை ஆகியோர் ஆலயத்தைப் பராமரித்தனர். 1962இல் க.முருகேசபிள்ளை அவர்கள் தலைவராகச் செயற்பட்டார். அவரது மரணத்தின் பின் ஆலயத்தின் தலைவர் மற்றும் நிருவாகப் பதவிகள் குறித்த குழப்ப நிலையின் பின் ஆலயத்தை ஸ்ரீ கணேசராலயப் பரிபாலன சபை கையேற்று நடத்தியது. 1996இல் த. நாகராசா தலைவர் பதவிக்கு வந்தார். ஆயினும் ஆலய தலைமைத்தும் குறித்த சர்ச்சைகளால் 2002இல் ஸ்ரீ கணேசராலயத்தின் நிருவகிப்பின் கீழ் மீண்டும் ஆலயம் கொண்டுவரப்பட்டது . .

2011 ஆண்டு நீதிமன்றத் தீர்ப்பின்படி ஆலயம் பொதுமக்களால் தெரிவுசெய்யப்பட்ட நிருவாகிகளைக் கொண்டு நடாத்தப்பட வேண்டும் எனத் தீர்ப்பாகியது. அதன் அடிப்படையில் கந்தசுவாமி ஆலய நிறுவகிப்பு தொடர்கிறது.

1978 ஆம் ஆண்டு வீசிய சூறாவளியின் காரணமாக இவ்வாலயம் மற்றும் முழுதாக சேதமடைந்தது. நீற்றுக் கட்டிடம் என்பதால் சிதிலமடைந்து சுவர்கள் உதிர்த்த தொடங்கியிருந்தன. 1984 ஆம் ஆண்டு இவ்வாலயம் திருத்த வேலைகளின் பின் கும்பாபிஷே கம் செய்யப்பட்டது.

2023 ஆவணி மாதத்தில் ஆலயம் புனராவர்த்தனம் செய்யப்பட்டு கும்பாபிசேகம் நடைபெற்றது.

**நற்பிட்டிமுனை நகுலேசுவரர் ஆலயம்**

ந. குமாரசுவாமி ஐயர் அவர்களால் நற்பிட்டிமுனை நகுலேசுவரர் ஆலயம் நிறுவப்பட்டது. இவர் யாழ்ப்பாணம் மாதகல்லைச் சேர்ந்தவர். சத்துருக்கப்போடி வன்னியனார் கரவாகுப்பற்றினை பரிபாலித்த காலத்தில் அவருடனான தொடர்புகள் காரணமாக ந. குமாரசுவாமி ஐயர் அவர்கள் நற்பிட்டிமுனைக்கு வந்தார். நற்பிட்டிமுனையில் சமயப்பணியுடன் கல்விப் பணியிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். நற்பிட்டிமுனையில் முறைசார் கல்வி அமைப்பிலான ஒரு கல்விக் கூடத்தை நிருமானித்தார். ஐயரின் பள்ளி என வழங்கப்பட்ட பள்ளி பிற்காலத்தில் மட்/ நாய்ப்பிட்டிமுனை தனியார் இந்து கலவன் பாடசாலை என 1907 ஆம் ஆண்டின் 8ஆம் இலக்க நாட்டுப் பாடசாலை கட்டளைச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்டது. இப்பாடசாலையில் அருணாசலதேசிகர் முதலான பல சமய அறிஞர்களைக் கொண்டு கற்பிக்கச் செய்தார்.

குமாரசுவாமி ஐயர் அவர்கள் தனது தனிப்பட்ட ஆலயமாக நற்பிட்டிமுனை ஸ்ரீ நகுலேசுவரர் ஆலயத்தினை நிறுவினார். 1800களின் நடுப்பகுதியில் இவ்வாலயம் அமைக்கப்பட்டதாகக் கருதமுடியும். நவக்கிரக தோச நிவர்த்தி முதலான சமய பரிகாரங்களில் இவ்வாலயம் பக்தர்களைக் கவர்ந்தது. பங்குனி மாத அமாவாசையில் தீர்த்தோற்சவம் அமையும் வகையில் வருடாந்த உற்சவம் நடாத்தப்பட்டு இவ்வாலயம் சிறப்பாக இயங்கியது.

குமாரசுவாமி ஐயரைத் தொடர்ந்து அவரது மகன் தம்பிராசாக் குருக்கள் இவ்வாலயத்தைப் பொறுப்பேற்றுப் பராமரித்தார். தனது தந்தைவழி மாமி மகளைத் திருமணம் செய்துகொண்டு

நற்பிட்டிமுனையிலே வாழ்ந்தார், அவரது காலத்திலும் கோயிலில் பல நிருமானப் பணிகள் பொதுமக்களின் உதவியுடன் மேற்கொள்ளப்பட்டன.

தம்பிராசாக் குருக்கள் சிவபதமடைந்த பின் அவரது மருமகன் சிவஸ்ரீ நடராஜ சதீஷ்வர ஷர்மா அவர்கள் ஆலய முதன்மைக் குருவாக நடாத்தி வருகின்றார். இவரது முயற்சியால் ஆலயம் முழுமையாகப் புனர் நிருமானம் செய்யப்பட்டு 2023 ஏப்ரல் 05ஆந் திகதி (பங்குனி உத்தரத்தில்) கும்பாபிசேகம் நடைபெற்றது.

வருடாந்த உற்சவம் அதே மரபில் பங்குனி மாத அமாவாசையில் தீர்த்தோற்சவம் அமையும் வகையில் நடாத்தப்படுகின்றது. சங்காபிசேகம் பங்குனி உத்தரத்தில் நடைபெறும்.

**நற்பிட்டிமுனை நாகபூசணி அம்மன் ஆலயம்**

மட்டக்களப்பின் பல்வேறு பகுதிகளிலும் நாகர்களின் ஆட்சி நடைபெற்ற அடையாளங் களையும் அவர்களின் வழிப்பாட்டுக் கூறுகளாக அமையும் நாக வழிபாடுகளையும் சின்னங்களையும் வரலாற்றாய்வாளர்கள் எடுத்துக் காட்டுவர்.இதன் தொடர்ச்சியாக இக்காலம் வரைத்தொடரும் நாகதம்பிரான், நாககன்னி, நாகபூசணி, வழிபாடுகளை இதன் எச்சசொச்ச மாகவும் சிலர் கொள்வர். நாகங்களுக்கு மக்களுக்குமான இத்தகைய பக்திபூர்வமாக தொடர்பைக் காட்டும் அற்புதமொன்று 2008களில் நற்பிட்டிமுனையில் நிகழ்ந்தது.

பதினாறு வயது நிரம்பிய குணசேகரம் டிலக்சனா எனும் பெண்பிள்ளை திடீரெனத் தன்னை நாககன்னியாகப் பாவனை செய்து ஆடத்தொடங்கியதும், அருள்வாக்குத் தந்ததுமான நிகழ்வே அது. அயல் கிராமங்களை சேர்ந்த மக்கள் கூட இந்த அற்புதத்தைக் காண நற்பிட்டி முனைக்குசாரி சாரியாக வருகை தந்தனர். பல சந்ததிகளுக்கு முன் அவ்விடத்தில் வாழ்ந்துவந்த "நாகசுவர்ணா" எனும் நாககன்னியின் ஆன்மாவாக டிலக்சனாவின் மூலம் வெளிப்பட்டு அருள்வாக்கு தந்த நாகபூசணி அம்மன் அவரது அருள்வாக்குத் தத்தத்தின் பிரகாரம் கூறப்பட்ட இடத்தில் ஆலயமாக அமைக்கப்பட்டது. பல்வேறு பகுதிகளி லிருந்தும் பக்தர்கள் நேர்த்திப் பொருள்களுடன் வருகை தந்து வழிபட்டுச் சென்றனர். பக்தர்களின் பங்களிப்புடன் அதே ஆண்டு அம்மனுக்கான ஆலயம் கருப்பக்கிரகத்தையும் மண்டபத்தையும் கொண்டதாக அமைக்கப்பட்டது. பத்ததி முறையில் ஆலயத்தின் பூசைகள் இன்றுவரை நடைபெற்று வருகின்றன.

## ஸ்ரீ மகா விஷ்ணு ஆலயம்

நற்பிட்டிமுனை நிலவரைபடத்தில் மட்டக்களப்பு வாவி பட்டிப்பளை ஆற்றின் கிளையுடன் இணையும் முக்கியத்துவமிக்க பகுதிக்கு நேராக ஸ்ரீ மகா விஷ்ணு ஆலயம் அமைந்துள்ளது. இந்த ஆலயப்பகுதிக்கு அருகில்தான் பண்டைய இறங்குதுறை அமைந்திருந் ததாகக் கருதப்படுகின்றது. இந்த வகையில் ஸ்ரீ மகா விஷ்ணு ஆலயம் முக்கியமிக்க நிலவியல் பகுதியாக குறிப்பிடத்தக்கதாகும்.

1970களை அண்டிய காலப்பகுதியிலிருந்து வயல் கரையில் அமைந்துள்ள வம்மி மரத்தடியில் சிறு சிலையொன்றை வைத்து வழிபடத்தொடங்கினர். எம்பெருமானுக்கான கற்கோயில் கிராம மக்களின் நிதிப்பங்களிப்பில் எழுப்பப்பட்டு ஆலய கும்பாபிசேகம் 25.10.2013 தொடக்கம் 30.10.2013 வரை நடைபெற்றது.

மகாவிஷ்ணு, பூமி இலட்சுமி , மகாலட்சுமி சமேதரராய் மூல மூர்த்தியாக அமைந்திருக்க பரிபால தெய்வங்களாக பிள்ளையார், நாகதம்பிரான், ஆஞ்சநேயர் என்பன அமைக்கப் பட்டுள்ளன.

நற்பிட்டிமுனை மகாவிஷ்னு ஆலய வருடாந்த அலங்காரத் திருவிழா ஆவணி மாத மூல நட்சத்திரத்தில் தீர்த்தோட்சவம் அமையும் வகையில் நடைபெறும்.. ஆலயத்தின் சங்காபிசேகம் ஐப்பசி மாதப் பூர நட்சத்திரத்தில் நடைபெறும்

**வேம்படி விநாயகர் ஆலயம்**

நற்பிட்டிமுனை வேம்படி விநாயகர் ஆலயம் நீண்டகாலமாக பாண்டிருப்பு நற்பிட்டிமுனை வீதியில் ஒரு வழிக் கோயிலாக இருந்து வருகின்றது. ஆரம்பத்தில் நிருவாக ஒழுங்கமைப்புக் காணப்படாமல் சுற்றயலில் காணப்பட்ட மக்களாலும் நடைவழிப் பயணிக ளாலும் அவ்வாலயம் வழிபடப்பட்டு வந்தது. பின்னர் நற்பிட்டிமுனை சுருட்டுத் தொழிலாளர் சங்கம் இவ்வாலயத்தை பராமரித்து வந்தது. பின்னர் சுருட்டுத் தொழிலாளர் சங்கத்தின் முற்படுத்தலில் நிருவாகக் கட்டமைப்பு நிறுவகித்து வருகின்றது.

நற்பிட்டிமுனை வேம்படிப் பிள்ளையார் ஆலயம் தோற்றம் பெற்றமை குறித்து ஒரு செவிவழிக் கதை கூறப்படுகின்றது. ஆலயம் அமைந்துள்ள இடத்திற்கு அருகில் குடிசை வீடொன்றை அமைப்பதற்காக கால்களை நடுவதற்காக மடு தோண்டப்பட்டது. இந்த வேளையில் கிடங்கில் கடினமாக ஏதோ ஒன்று தட்டுப்படுவதை உணர்ந்தனர். கஷ்டப்பட்டு மேலும் தோண்டிய போது பிள்ளையாரின் முகப்பொலிவைப் பிரதிபலிக்கும் நீள்வட்ட வடிவிலான பெரிய கற்பாறை ஒன்றைக் கண்டனர். வெளியில் எடுத்து நீர்கொண்டு சுத்தம் செய்து அருகேயிருந்த வேப்பை மரத்தடியில் வைத்து வழிபடத் தொடங்கினர்.

இவ்வாலயத்தின் மூலமான பிள்ளையார் உருவம் துலங்கும் பாறையை இவ்விடத்தில் வைத்து வழிபட்டவர்களில் திரு. அழகையா , காணியின் உரிமையாளரவிருந்த சின்னத்தம்பிக் கிளாக்கர் மற்றும் கிளாக்கரின் பராமரிப்பாளரான கன்னங்குடாவைச் சேர்ந்த மாணிக்கம் முதலானவர்களை மக்கள் குறிப்பிடுவர்.

நற்பிட்டிமுனையில் புகையிலைச் செய்கை பழங்காலம் முதல் நடைபெற்று வருவதை ஏற்கனவே கூறியிருந்தேன். இதன் வழியே சுருட்டுத் தொழிலும் இப்பகுதியில் வேரூன்றிக் காணப்பட்டது. யாழ்ப்பாணம் முதலான தூர இடங்களில் இருந்து தொழில் நிமித்தம் வருகை தருபவர்களுக்கு இவ்வாலயத்தில் நாட்டம் கொண்டனர். இதனால் வேம்பையடி பிள்ளையார் ஆலயத்தில் சுருட்டுத் தொழிலாளர்கள் ஈடுபாடுகாட்டத் தொடங்கினர். பின்னாட்களில் சுருட்டுத் தொழிலாளர்களின் பராமரிப்பில் இவ்வாலயம் சிறப்புற்றது. சித்திரைப் பூரணையில் நிகழும் சித்திரைக்கு கஞ்சி இவ்வாலயத்தில் சிறப்புவாய்ந்த ஒன்றாகும்.

காலப்போக்கில் சுருட்டுத்தொழில் முதன்மை குன்றிப்போக கிராமப் பொதுவிலான புதிய நிர்வாகக் கட்டமைப்பு உருவாக்கப்பட்டு ஆலயத்தின் புனரமைப்பு பணிகள் ஆரம்பிக்கப்பட்டன. புனரமைப்பின் பின்னராக இவ்வாலயம் 09.06.2023இல் கும்பாபிஷே கம் செய்யப்பட்டது.

## 7.2 நற்பிட்டிமுனையில் தொடர்புபட்ட பிரதேச ஆலயம் சார் நிகழ்வுகள்

நற்பிட்டிமுனைக் கிராமம் அயல் கிராம ஆன்மிக செயற்பாடுகளுடன் நெருக்கமான தொடர்புகளைக் கொண்டு காணப்பட்டு வந்துள்ளது. சுற்றயல் கிராமங்களுக்கான ஆலயத் தலைமைத்துவத்தை வழங்கியமை மற்றும் மற்றைய கிராம நிகழ்வுகளில் பங்குதாரர்களாக காணப்படுகின்றமையை இங்கு நோக்கலாம்.

**1. பாண்டிருப்பு திரௌபதி அம்மன் ஆலய வனவாச நிகழ்வு**

திரௌபதி அம்மன் ஆலய வருடாந்த உற்சவத்தின் பதினாறாம் நாள் வனவாச நிகழ்வு நற்பிட்டிமுனையை முக்கியப்படுத்துகின்ற ஒரு நிகழ்வாகும். வனவாசம் வருவதற்கு முன்னரான காவடிக்கு முள்ளுப்பாய்ச்சுதல் மற்றும் வயலுக்கு பாய்ச்சுதல் என்பன கணேசராலயத்தில் நடைபெறும்.

பகடையாட்டத்தில் தோற்றுப் போன தர்மர் ஆதியோர் ஏற்றுக் கொண்டபடி 12 ஆண்டுகள் வனவாசம் செய்ய வேண்டும். அடுத்துவரும் 13 ஆம் ஆண்டு யாரும் காணாதபடி மறைந்து வாழ வேண்டும். காட்டுவாழ்க்கையின் பல்வேறு பரிமானக் கூறுகளை யும் காட்டுவதாகவும் மத்சய (விராட) தேசத்தில் மறைந்து வாழ்ந்ததைச் சுட்டுவதாகவும் இந்த வனவாசம், அஞ்சாதவாசம் என்பன அமைகின்றன.

தனித்துவமானகாட்சியமைப்பு, ஆடை அலங்காரம், இசை,அசைவொழுங்கு என்பவற்றைக் கொண்டிருப்பதும் மையக்கருவான செய்தியொன்றை குறியீடாக உணர்த்தி நிற்பதும் தனித்துவமான திட்டம் செய்யப்பட்ட பாதையூடாக நகர்வதும் முதலான சிறப்பியல் புகளை வனவாசம் கொண்டமைந்துள்ளது.

காவடி எடுப்போர், தீச்சட்டி தூக்குவோர், வாயலகு போடுவோர் என ஆயிரக்கணக் கானோர் புடைசூழ தேவாதிகளோடு உற்சவத்தின் 16ஆம் நாள் பயணிக்கும் பாண்டவர் கொலு மகாபாரதம் கூறும் வனவாசத்தை நிகழ்த்தும்.

திரௌபதி அம்மன் ஆலயத்தில் இருந்து புறப்படும் ஐவர் கொலு வாள் மாற்றும் சந்தியில் (ஆலய வீதி பாண்டிருப்பு பிரதான வீதியும் சந்திக்கும் இடம்) சடங்கு நிகழ்வு ஒன்றினை மேற்கொள்ளும். அதில் தருமர் தம்பி வீமனிடம் நிபந்தனையுடன் வாளை ஒப்படைப்பார். உணவுக்காக இலை, குழை, காய், கனிகளை மட்டும் பறிக்க வேண்டும். எந்தவொரு விலங்குக்கும் துன்பம் நேரக் கூடாது என்பது அந்த நிபந்தனை. வாளைப் பெற்றுக் கொண்டதும் வீமன் முதலாவதாக அரசடி அம்மன் ஆலயத்தின் அரச மரத்தில் காணப்படும் முல்லை, முசுட்டை, காரை, கானாந்தி, பிரண்டை ஆகியவற்றை பறிப்பார். இவை மோட்ச இலைகள் எனப்படுகின்றன. யுத்தமொன்றில் நல்லவர்களும் இழக்க நேரிடும் என்ற குறியீடாகவும் அது விளக்குகிறது.

மக்கள் வழிநெடுகிலும் ஐவர் கொலுவை வரவேற்று ஆசி பெறுவர். மக்களுக்கு நெற்றியில் 'பண்டாரம்'எனப்படும் பிரசாதம் இட்டு தர்மர் ஆசி வழங்குவார். நற்பிட்டிமுனை ஸ்ரீ கணேசர் ஆலயத்தில் பாண்டவர் தாம் கூடவே கொண்டுவந்த கட்டுச்சோற்றினை கொண்டு பந்தியிருப்பர். பசியாறுவதாகப் பாவனை செய்வர். பின் அது குடிவழி கூறப்பட்டு பகரப்படும். வீமன் தனது வாளினால் எதிர்ப்படும் காய்கறிகளை பறித்துக் கொண்டு செல்வார். அதைத் தாண்டி சேனைக்குடியிருப்பு செல்லப்பிள்ளையார் ஆலயத்தை அடையும் ஐவர் கொலு

தாம்பூலம் தரித்து தமது ஆயுதங்களை வன்னி மரப்பொந்தில் மறைத்து வைப்பது குறியீடாக நிகழ்த்தப்படும் பின்னர் உப்புத் தண்ணிக்கட்டு எனும் வயல் பகுதியினூடாக செல்லும்போது எந்தவொரு சந்தடியுமின்றி பயணிப்பர். இதன் போது தாரை, தப்பட்டை,மேளம், மணி, சங்கு எந்த இசையும் இன்றி அமைதியாக பயணம் தொடரும். இது மட்சய தேசத்தில் மேற்கொண்ட அஞ்ஞாதவாசத்தைக் குறிப்பதாகும். பின் அங்கிருந்து ஐவர்கொலு ஆலயத்தினைச் சென்றடையும். இறுதியாக படையுறக்கம் ஆலயத்தில் நிகழும்.

வனவாசத்தின்போது துரௌபதி சுமந்துவரும் கட்டுச்சோறு நற்பட்டிமுனை கணேசர் ஆலயத்தில் பாண்டவர்களுக்கு பரிமாறப்பட்டு அப் பங்குகள் ஏழும் ஏழு குடியினருக்கு வரிசை கூறி வழங்கப்படுகிறது. இதில் தருமரின் பங்கு கோயில் பூசகருக்கும் வீமரின் பங்கு கோயில் தலைவருக்கும், திரௌபதியின் பங்கு கோயில் செயலாளருக்கும் அர்ஜுனரின் பங்கு வண்ணக்கருக்கும், நகுலனின் பங்கு உடையார்க்கும் சகாதேவனின் பங்கு பணிக்கர் குடிக்கும், கிருஷ்ணரின் பங்கு ஊர்ப் போடிக்கும் வழங்கப்படுகிறது. இங்கு குடிவழி பெயர் கூறப்பட்டு வழங்கப்படுவது நோக்கப்பாலது. ஆலயத்தின் நிர்வாகக் கட்டமைப்பின் குடிவழி முதுசத்தை பின்பற்றி இந்த வரிசை பேணப்படுகின்றது.

#### 2. சேனைக்குடியிருப்பு கம்ப காமாட்சி அம்மன் கும்பம்

சேனைக்குடியிருப்பு கம்ப காமாட்சி அம்மன் ஆலயம் ஒரு சடங்குக் கோயிலாக காணப்படுகிறது. இது சீதை இளையார் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டமையால் இதனை சீதை இளையார் கோயில் எனவும் அழைப்பர். 1980கள் வரையான காலப்பகுதியில் சேனைக்குடிருப்புக் கம்ப காமாட்சி அம்மன் ஆலயக் கும்பம் நற்பிட்டிமுனை மக்களின் தரிசனத்திற்காக்கவும் ஒருநாள் நற்பிட்டிமுனைக் கிராம வீதிகளின் வழியே கொண்டுவரப்படும். கிராமங்களுக்கிடையேயேயான சகோதர உறவைக்க காட்டும் இந்த நடைமுறைக்கு நற்பிட்டிமுனை யிலும் மக்கள் தம் ஆதரவைக் காட்டினர். தெருமருங்குகள் தோறும் கும்பம் வைத்து கம்பகாமாட்சி அம்மனை வரவேற்றனர். பின்னாளில் இந்த நடைமுறை கைவிடப்பட்டது.

#### 3. அம்பாறை மாணிக்கப் பிள்ளையார் ஆலயத் திருவிழா

அம்பாறை வில் குளத்தின் கரையில் இவ்வாலயம் அமைந்துள்ளது. ஆரம்பத்தில் அம்பாறை வில்லுப் பிள்ளையார் ஆலயம் என இவ்வாலயம் அழைக்கப்பட்டு வந்தது. துவேசம் கொண்ட அந்நியன் ஒருவனால் இவ்வாலயத்தின் சிலை அருகில் இருந்த குளத்தில் வீசப்பட்டுக் கிடந்ததாகவும், வீரமுனையைச் சேர்ந்த துரைசாமி என்ற பக்தர் ஒருவரின் கனவினைத் தொடர்ந்து அவரது உள்ளுணர்வில் இந்த சிலையை பிரதிட்சை செய்வதற்கான உந்துதல் ஏற்பட்டது. ஆனைக்குட்டிச் சித்தரின் உதவியுடன் சிலையை மீட்டு மீண்டும் பிரதிட்சை செய்யப்பட்டு வழிபாடியற்றப்பட்டது. 1965ம் ஆண்டு ஆலயம் நிருமாணிக்கப்பட்டு முதலாவது கும்பாபிசேகம் நிகழ்ந்தது. அதிலிருந்து இவ்வாலயம் அம்பாறை மாணிக்கப் பிள்ளையார் ஆலயம் என வழங்கப்படுகின்றது.

ஆலய வருடாந்த உற்சவத்தில் நற்பிட்டிமுனை பொதுமக்கள் சார்பாக பூசை வழங்கப்பட்டு ஆண்டுதோறும் அது நிறைவேற்றப்பட்டுவருகின்றது.

**உசாத்துணை :**


1. Dennis B McGilvray, Crucible of conflict: Tamil and Muslim society on the east coast of Sri Lanka, 2008
2. Nira Wickramasinghe,"Slave in a Palanquin", Colonial Servitude and Resistance in Sri Lanka, Columbia University, New York,2020.
3. இராமநாதன் ஆறுமுகம் அவர்களால் எழுதப்பட்ட சாசனம்,1862
4. இலங்கைத் திருநாட்டின் இந்துக் கோவில்கள் , இந்து சமயத் திணைக்களம், பிரதேச அபிவிருத்தி அமைச்சு , கொழும்பு. 1984
5. இலங்கை அரசாங்க வர்த்தமானி , யூலை 19, 1895.
6. கணபதிப்பிள்ளை சி., பூர்வீக சப்த ஸ்தலங்கள், விபுலானந்த அச்சகம் , யாழ்ப்பாணம், 1979.
7. கவிக்கோ வெல்லவூர்க் கோபால், மட்டக்களப்பு வரலாறு ஓர் அறிமுகம், மட்டக்களப்பு, 2011.
8. குமாரசாமி. வ ,கதிரமலைப்பள்ளு , இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம், 1935,பக் 280-294
9. சஞ்சீவி சிவகுமார், ஈழத்து இந்துப் புலமைத்துவப் பண்பாட்டில் அணி உலா அரங்கு-பாண்டிருப்பு வனவாசத்தை அடிப்படையாகக் கொண்ட ஆய்வு, வருடாந்த ஆய்வு மாநாடு-2021, கலைப் பீடம் , கிழக்குப் பல்கலைக் கழகம்
10. சிவசண்முகம் ஞா , மட்டக்களப்பு குகன்குல முற்குகர் வரலாறும் மரபுகளும் , விபுலம் வெளியீடு 2000.
11. சிவப்பிரகாசம் மு.சு, விஷ்ணுபுத்திர வெடியரசன் வரலாறு, தொல்புரம், இலங்கை 1988.
12. 'நற்பிட்டிமுனை சேனைக்குடியிருப்பில் வரலாற்றுக் காலத்துத் தென்பத்திரகாளி' , இந்து தர்மக்குரல், கிழக்குத் தினக்குரல்,12 மே 2009.
13. 'மகோற்சவம் காணும் நற்பிட்டிமுனை ஸ்ரீ கணேசராலயம்', இந்து தர்மக்குரல், கிழக்குத் தினக்குரல், 11 ஆகஸ்ட் 2009.
14. நிஜந்தன் இ, 'நற்பிட்டிமுனை ஸ்ரீ அம்பலத்தடிப் பிள்ளையார் ஆலயத்தின் தோற்றமும் வளர்ச்சியும்', இந்து தர்மக்குரல், கிழக்குத் தினக்குரல், 16 யூன் 2009
15. நடராசா எவ். எக்ஸ் சி, மட்டக்களப்பு மான்மியம், 1998.

# 08. நற்பிட்டிமுனையின் கலை இலக்கிய வரலாறு

**ந**ற்பிட்டிமுனையின் கலை இலக்கிய வரலாறு குறித்து முறைப் படியான சேகரங்கள் கிடைக்கவில்லை. வாய்மொழியாகப் கிராமப் பெரியவர்கள் பலரிடமும் பெற்றுக்கொண்ட தகவல்களின் அடிப்படையில் நற்பிட்டிமுனையின் கலை இலக்கியச் செயல்பாடுகள் குறித்துத் தெரிந்து கொண்ட விடயங்களை ஒன்றுதிரட்டி இங்கு பதிவு செய்கிறேன். நாட்டார் கலை இலக்கியங்களான குரவை, கும்மி, கோலாட்டம், நாட்டார் பாட்டிசை, கிராமிய இசைக்கருவிகளின் பயன்பாடு, நாட்டுக் கூத்து ஆகியவற்றின் இருப்பு இப்பிரதேசத்தில் இருந்தமையை காண்கிறோம். இவை பிற்பட்ட காலங்களில் சிற்சில மாற்றங்களுடன் ஆற்றுகைக் கலைகளாக மாற்றம் பெற்று பெருவாரியாக வழங்கிவருகின்றமையையும் காணலாம். கரகம், காவடி, அம்மன் கும்பம் எடுத்தல், தெய்வமாடுதல், முதலான சடங்காட்டங்களும் உலா அரங்கச் செயற்பாடுகள் முதலானவை யும் பண்டைத்தொட்டு நற்பிட்டிமுனையிலும் சுற்றயல் கிராமங்களிலும் விளங்கி வருகின்றன.

நம் பிரதேச வரலாறுகளில் மூன்று முக்கிய சந்தர்ப்பங்களில் ஆற்றுகைக் கலைகள் முக்கியத்துவம் பெறுகின்ற குறிப்புகளைக் காண முடியும்.

1. கலாசார நிகழ்வுகளில் / ஆன்மீகச் செயற்பாடுகளில்
2. அரச /பிரதானிகளை வரவேற்கும் போது
3. ஓய்வுப் பொழுதில் மகிழ்ந்திருப்பதற்காக

ஆன்மீகம் சார்ந்த அல்லது கலை கலாசார செயற்பாடுகளின் போது இசைக் கருவிகளாக செகண்டி, சல்லாரி, சதங்கை, உடுக்கை, சிலம்பு, சங்கு, முதலான கிராமியக் கருவிகள் முக்கியம் பெற்றிருந்தன. பிற்காலங்களில் நாதசுரம், மேளம், தாளம், புல்லாங்குழல் என்பன இவற்று டன் இணைந்து கொண்டன. இவை இந்துப் பண்பாட்டுடன் இணைந்து

சடங்கு சார் நிகழ்வுகளில் நிகழ்த்தப்பட்டுவந்தமை குறித்துக் கூறப்பட்டாலும், அதன் ஆரம்பகாலம் குறித்து எந்தக் குறிப்புகளும் கிடைக்கவில்லை.

வனவாச நிகழ்வு, திருவெம்பாவை என்பவற்றிலும் ஆலய பத்ததி வழிபாடு,வீடுகளில் வைரவர் மேடைகளில் நடத்தப்படுகின்ற வழிபாடுகள் மற்றும் ஆகம முறை வழிபாடுகளிலும் இவ்வகை இசைக் கருவிகள் இன்று வரைப் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். பாண்டிருப்புத் திரௌபதியம்மன் ஆலய வனவாச நிகழ்வில் பயன்படுத்தப்படும் கருவிகளின் வகை கொண்டு நோக்கும் போது இத்தகைய இசைக் கருவிகளின் பயன்பாடு 15 ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்னரே இப்பகுதி மக்களால் கையாளப் பட்டுவருவதை அவதானிக்க முடியும்.

**“தம்பட்ட சல்லாரி தாரை சின்னஞ் சங்கு தொனி**
**உடுக்குச் சிலம்பு மணி ஒளி தங்கு தீபமெழ**
**அடுக்கு முறையோ டரவான் களப்பலியும்”**

(நடராசா எவ். எக்ஸ் சி 1998:91, தாதன் கல்வெட்டுப் பாடல்)

நற்பிட்டிமுனை காளியம்மன் வழிபாட்டுடன் கூடிய கிராமம் ஆகையால் சடங்காட்டங்களும் சிலம்பு, உடுக்கை முதலான இசைக்கருவிகளும் பண்டைத்தொட்டு விளங்கிவந்தன எனலாம். 19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதிகளிலிருந்து கந்தபுராண படலம் படித்தலும் பயன் கூறுதலும் ஒரு கலாசாரமாக இங்கு விளங்கிவருகின்றது.

குரவையிட்டு வரவேற்பது, தாலாட்டு பாடுவது, மரண நிகழ்வுகளில் ஒப்பாரி பாடுவது, கட்டிக்குளறுவது, புறம்பாடுவது முதலான கிராமிய வழக்கியல்கள் தற்போது மங்கித் தெரியும் ஒன்றாக மறைந்து கொண்டிருந்தாலும் தோராயமாக இற்றைக்கு 40 வருடங்களுக்கு முன்வரை இவை பெரிதும் வழக்கில் காணப்பட்டவை எனலாம்.




அரச பிரதானிகளை வரவேற்பதற்கும் அவர்களின் வருகை குறித்து அறிவிப்பதற்கும் பறை, முரசு, மற்றும் சங்கு முதலான கருவிகள் பயன்படுத்தப்பட்டு வந்தமையை அறிகிறோம். நிழற்பட நுட்பங்கள் அறிமுகமாகாத பண்டைக் காலத்தில் அரசவை ஓவியர்களைக் கொண்டு இத்தகைய நிகழ்வுகள் படங்களாக வரையப்பட்டன. இவ்வாறாக 1602இல் ஒல்லாந்துத் தளபதியான இஸ்பில்பேர்க்கன் பண்டைய மட்டக்களப்புக்கு (தற்போதைய சம்மாந்துறைக்கு) வருகை தந்தமை குறித்து வரையப்பட்ட படம் ஒன்றில் அவரை வரவேற்பதில் இசை மீட்டுபவர்கள் வரிசையொன்றும் காட்டப்பட்டுள்ளது. இதனை டொனால்ட் பெர்குசன் அவர்கள் தனது கட்டுரையில் குறிப்பிடுவார் (Journal of RAS, Vol. XXXI, 1928:134). பல்வேறு இசைக்கருவிகளை இசைத்து பிரதானிகள் வரவேற்கப்பட்டமை இப்பிரதேசத்தில் காணப்பட்டமையை இதன் மூலம் உறுதிசெய்யலாம்.

ஓய்வுப் பொழுதினைக் களிப்புடன் செலவிடும் வகையில் கூத்துப்பாட்டுகள் பாடுவதும் கூத்து முதலான கலைகளில் ஈடுபடுவதும் மிக நீண்ட காலமாக இங்கு இலங்கிவருகின்றது.

## 8.1 கூத்து

நற்பிட்டிமுனையில் இரண்டு மூன்று சந்ததிகளுக்கு முந்திய பரம்பரையின் முக்கிய அரங்கியல் செயற்பாடாக நாட்டுக்கூத்துகள் ஆடப்பட்ட தகவல்கள் கிடைக்கின்றன. கூத்துகள் பொதுவாக அறுவடைக்காலத்தை அடுத்து வரும் ஓய்வான காலப்பகுதிகளில் ஆடப்பட்டதாக அறியமுடிகின்றது. நற்பிட்டிமுனை ஸ்ரீ கணேசராலயத்திற்கும் முருகன் ஆலயத்திற்கும் இடையில் (நகவிதா அரங்கின் எதிர்க்கரையில்- தற்போதய ஸ்ரீ பத்திரகாளியம்மன் ஆலயத்திற்கு நேர் எதிராக உள்ள வீதி அமைந்துள்ள இடத்தில்) கூத்துக் களரி ஒன்று நெடுங்காலமாகக் காணப்பட்டது. மண்ணினால் உயரமாக இடப்பட்ட மேடை போல அது இருக்கும். பின்னாட்களில் சூரன்போர் நிகழ்வுகளின் போது சூரபத்மன் அதில் அமைந்திருந்து சூரன் போர் நிகழ்த்தப்படுவதால் அது சூரன் மேடை எனவும் அழைக்கப்பட்டதுண்டு.

கூத்து ஆட்டங்களை அவை பழக்க தொடங்கியதிலிருந்து அவை அரங்கேறும் வரை பார்வையாளர் ஈடுபாட்டுடன் சூழ்ந்திருந்து இரசிப்பர். இதனால் அக்காலத்தில் கூத்தின் பாடல் அடிகள் மனனமாகிவிடுமளவு ஈடுபாட்டுடன் இரசிகர்கள் காணப்படுவதைக் காணமுடியும். ஆரம்பகால நாட்டுக்கூத்துகள் மாலைப்பொழுதில் தொடங்கினால் நள்ளிரவு தாண்டும் வரைத் தொடரும். இதனால் இரவுகளில் உணவுப் பொதிகளுடன் வந்தமர்ந்து கூத்து பார்த்த அனுவபங்களையும் பெரியவர் ஒருவர் பதிவுசெய்தார். மின்சார வசதி இல்லாத மற்றும் வேறு பொழுது போக்குகள் இல்லாத அந்தக் காலப்பகுதியில் தூக்கம் வரும் வரை கூத்துப்பாடல்களை இசைகூட்டிப் பாடுதல் பெரும் பொழுதுபோக்காகக் காணப்பட்டது. இதனால் கூத்தில் அவர்கள் வகித்த பாத்திரங்களின் பெயர்கள் அவர்களின் உண்மைப் பெயர்களுடன் சேர்த்து முன்னொட்டாக மக்களால் அழைக்கப்படுவதையும் காணமுடியும். எடுத்துக்காட்டாக, நற்பிட்டிமுனையில் இவ்வாறு பெயர் வழக்குகளில் கூத்தின் பாத்திரமும் சேர்ந்தே வழங்கப்பட்டுவந்த பெயர்கள் சில வருமாறு:

» இளையதம்பி (சீதை இளையார்)
» காளிக்குட்டி (குறவன் காளியர்)
» விஸ்வலிங்கம் (வீமன் விஸ்வலிங்கம்)

இத்தகைய பெருவழக்கம் இப்பகுதியில் கூத்துக்கலை பெற்ற முக்கியத்துவத்தை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது.

## நற்பிட்டிமுனையில் அரங்கேற்றப்பட்ட கூத்துகள்

அல்லி அருச்சுனன், நளாயினி கதை, காத்தவராயன் கூத்து, பப்பரவாகன் கூத்து, சத்தியவான் சாவித்திரி, பவளக்கொடி, அருச்சுனன் தவசி, குருச்சேத்திரம் போர் ஆகிய கூத்துக்கள் நற்பிட்டிமுனையில் ஆடப்பட்டதாக வாய்வழிச் செய்திகள் மூலம் அறிய முடிகின்றது. 1960களில் குருச்சேத்திரன் போர், காத்தவராயன் கூத்து ஆடப்பட்டதாக அறிய முடிகின்றது. இவற்றில் கணபதிப்பிள்ளையர், காத்தமுத்தர், பூபாலியர், மார்க்கண்டர், காளியர் ஆகியோர் ஆடியதாக அறிய முடிகின்றது. ( பெயர்களின் பின்னொட்டாக வரும் “அர்” விகுதி மரியாதை நிமித்தம் வழக்காயிருந்தது). 1970களில் ஆசிரியரான சீ.குணரெத்தினம் அவர்கள் கூத்து நெறிப்படுத்தும் கலைச்செயற்பாடுகளில் ஈடுபட்டார். அவரால் அல்லி அருச்சுனன், பவளக் கொடி ஆகிய கூத்துக்கள் பழக்குவிக்கப்பட்டன. இதில் சாமித்தம்பியர், கணபதிப்பிள்ளையர்

முதலானோர் ஆடியிருந்தனர். பின்னாளில் 1990களில் மீண்டும் குருச்சேத்திரம் போர் கூத்து அடுத்த சந்ததியைச் சேர்ந்தவர்களால் நடிக்கப்பட்டது. கிருபைராசா, சின்னவர், வடிவேல், குலேந்திரன், இராசேந்திரன் ஆகியோர் இதில் நடித்தனர். இதன் ஒத்திகைகள் பலதடவைகள் நிகழ்ந்த போதிலும் நாட்டில் நிகழ்ந்த யுத்த சூழல் காரணமாக அரங்கேற்றம் நிகழவில்லை.

## 8.2 கலாமன்றங்களும் மேடை நாடகங்களும்

ஆரம்ப காலத்தில் நற்பிட்டிமுனையில் காணப்பட்ட கலை, இலக்கிய அமைப்புகள் குறித்து அதிகம் அறிய முடியவில்லை. குறித்த காலத்தில் குறித்த நிகழ்வுகளுக்காக தோன்றி மறையும் அமைப்புகளாக இவை செயற்பட்டிருக்க முடியும். பின் வந்த காலங்களில் நற்பிட்டிமுனையில் செயற்பட்ட அமைப்புகளில் திரு. பாக்கியராசா அவர்களின் தலைமையில் "திங்களொளி மன்றம்" இயங்கியமை பற்றி அறிய முடிகின்றது. "பாரதி கலா மன்றம்" என்ற மன்றமும் செயற்பட்டமை பற்றி அறிய முடிந்தது. பின் வந்த காலங்களில் அண்ணா கலாமன்றத்தின் செயற்பாடுகள் குறித்து அறியமுடிகின்றது. அண்ணா மன்றத்தின் மூலம் பல்வேறு மேடை நிகழ்ச்சிகளை நிகழ்த்தப்பட்டதாக அறியமுடிகின்றது. இதற்கு அமரர் இராசதுரை அவர்கள் தலைவராகச் செயற்பட்டார். 1980களின் முற்பகுதியில் திரு. க.கனகராசா அவர்களின் தலைமையில் கலைக்கதிர் மன்றம் எனும் கலை மன்றம் ஒன்று நடாத்தப்பட்டது. இது நற்பிட்டிமுனை முருகன் ஆலய முன்றலில் கலை நிகழ்ச்சிகள், நாடகங்கள் முதலானவற்றை மேடையேற்றின. இதே சம காலத்தில் அமரர். எ. அமிர்தலிங்கம் அவர்கள் முத்தமிழ் மன்றம் என்ற மன்றம் ஒன்றை நடாத்தினார். சிலகாலம் இதற்கு திரு பஞ்சாட்சரம் அவர்களும் தலைமை வகித்தார்.

1970-80 காலப்பகுதிகளில் அமரர் ந. நல்லரெத்தினம் அவர்களின் நெறிப்படுத்தலில் " பாவை என் நெஞ்சில், அகல்விளக்கு, முதலான சமூக நாடகங்களும், "சக்தியின் சலசலப்பு" முதலான பக்தி நாடகங்களும், "சுந்தரிக்கு சுபமில்லை", "பொறு பெடியா புள்ள பெருக்கட்டும்" முதலான நகைச்சுவை நாடகங்களும் மேடையேறின. திரு.சு.நடராசா அவர்களின் கதை வசனத்தில் "யார் அந்தக் கொலைகாரன்" என்ற நாடகமும், க.குலேந்திரனின் கதை வசனத்தில் அமைந்த "மன்னிச்சுடு மச்சான்" என்ற நகைச்சுவை நாடகமும் மேடையேறி பெரு வரவேற்பைப் பெற்ற நாடகங்களாகும். திரு. கா.சந்திரலிங்கம் அவர்களின் கதை, வசனம் இயக்கத்தில் " இரண்டு முண்டங்கள் மேடையேறுகின்றன" என்ற நாடகம் மேடையேறியது. 1970களில் சோமநாதன், குணசீலன், தவராசா, இராஜன், மனோகரன் முதலானவர்களின் நடிப்பிலான நாடகங்கள் மேடையேறிய குறிப்புகளை அறியமுடிகின்றது. பஞ்சாட்சரம் (பஞ்சு), சின்னவன், கிருபைராசா,டேவிட், இராஜகுலேந்திரன், சந்திரலிங்கம், மனோகரன், இராசதுரை முதலானவர்களின் அரங்கச் செயற்பாடுகள் 1980 காலப்பகுதிகளில் முக்கியம் பெற்றிருந்தன. நாடகங்கள், ஓரங்க நாடகங்கள் என்பன இவர்களின் நடிப்பில் அரங்கேறின. பெரும்பாலும் நகைச்சுவை உணர்வு மேலோங்கி நிற்கும் நாடகங்களான பஞ்சாட்சரத்தின் நாடகங்கள் பிரதிகள் எழுதாமலேயே நடிக்கப்பட்டு மேடையேறின.

1990களில் இங்கு மேடையேற்றப்பட்ட சமூக நாடகங்களின் வரிசையில் சதுரங்கம், சித்திராங்கி, கோபுரங்கள் சாய்வதில்லை முதலான சமூக நாடகங்கள் குறிப்பிட்டுக் கூறத்தக்கவை. இதில் சித்திராங்கி, சதுரங்கம் ஆகிய நாடகங்கள் அமரர் ந.நல்லரெத்தினம் அவர்களால் பிரதியாக்கம் செய்யப்பட்டவை. இக்காலப்பகுதியில் அமரர் சசீந்திரன் மற்றும் நித்தியகுமார்

ஆகியோர் சில பக்தி நாடகங்களை அறநெறிப்பாடசாலை மாணவர்களின் நடிப்பில் மேடை யேற்றினர். 1994களில் "கோபுரங்கள் சாய்வதில்லை" என்ற நாடகத்தை திரு. க.மனோகரன் அவர்கள் நெறியாள்கை செய்திருந்தார். அதனைத் தொடர்ந்து 1995இல் 'அழியாத சுவடுகள்' நாடகத்தையும் 1996இல் "மீட்ட முடியாத ராகங்கள்" எனும் நாடகத்தையும் அவர் தயாரித்தார்.

1992களில் புதிய கலைக்கதிர் மன்றத்தை திரு.கா.நாகராசா அவர்கள் தொடங்கினார். போடியார் வீட்டு வேலைக்காரன், ஏமாந்த வாசுன, எங்கேயோ கொண்டு போறான், CID சங்கர் 443 முதல் சூக்கேசு மாப்பிள்ளை வரை ஏறக்குறைய 17 நாடகங்களை இம்மன்றத்தின் கலைஞர்கள் வழங்கினர். இவை முழுவதும் நகைச்சுவை நாடகங்களாக அமைந்திருந்தன.

2013களில் கல்முனை கார்மேல் பற்றிமாக் கல்லூரி முன்வைத்த "செங்கோண முக்கோணம்" எனும் நாடகம், கணித நாடகப் போட்டியில் தேசிய மட்டத்தில் இரண்டாம் இடம் பெற்றது. அதேபோல் விஞ்ஞான நாடகப் போட்டியில் "மாற்றுலகு தேடி" எனும் நாடகம் தேசிய மட்டம் வரை சென்றது. இவற்றின் பிரதியாக்கங்களை நற்பிட்டிமுனை சஞ்சீவி சிவகுமார் ஆக்கியிருந்தார். இதில் நற்பிட்டிமுனையைச் சேர்ந்த சந்திரமூர்த்தி சஜீத் நடித்திருந்தார். 2014 இல் "வேக வேகம்" எனும் தலைப்பிலான சூழலியல் சார் நாடகம் ஒன்றினையும் கமு / கார்மேல் பற்றிமாக் கல்லூரிக்காக எழுதியிருந்தார்.

பின்னாட்களில் நற்பிட்டிமுனையின் குறும்படமுயற்சிகளாக குறிப்பிட்டுக் கூறக் கூடியது கஜானா சந்திரபோஷ் அவர்களின் இயக்கத்தில் வெளிவந்த "ஈடாட்டம்" எனும் குறும்படம் ஆகும். 2018இல் வெளியான இக்குறும்படத்தில் நற்பட்டிமுனையைச் சேர்ந்த தஷணிக்கா, பிரஜானந் ஆகியோர் நடித்திருந்தனர். கிழக்கு மாகாணத்தில் முதலாவது பெண் குறும்பட இயக்குனர் என்ற பெருமையை கஜானா சந்திரபோஸ் இதன் மூலம் பெற்றுக் கொண்டார். இவர் ஒரு ஊடகச் செயற்பாட்டாளராகவும் இயங்கி வருகிறார்

## 8.3 அரங்க அமைப்புகள்




ஆரம்ப காலத்தில் மண்ணினால் உயரமாக அமைக்கப்பட்ட மண் மேடைகளிலேயே பொதுவாக அரங்கச் செயற்பாடுகள் நடாத்தப்பட்டன. இவை கூத்து மேடை என அழைக்கப் பட்டன. கூத்தின் அரங்கச் செயற்பாடுகளுக்கு இத்தகைய மேடைகள் பொருத்தமானவை. மேடையின் நான்கு மூலையிலும் தீப்பந்தங்கள் மற்றும் சூள் விளக்குகள் வைக்கப் பட்டு ஒளியூட்டப்பட்டன. பின் வந்த காலங்க ளில் கூத்துக்கு பதிலாக பெருவாரியாக நாடகங்கள் அரங்கேறின. மண்மேடைகளுக்குப் பதிலாக சற்று உயரமான மேடை அமைப்பைத்தரக்கூடியதாக பாடசாலை மேசைகளைக் கொண்டு அவற்றை வரிசைப்பட அடுக்கி இறுக்கமாக கட்டி மேடை அமைப்புகள் செய்யப்பட்டன. மின்வசதிகள் வந்தபின் மின்விளக்குகள் கொண்டு மேடைகளை ஒளியூட்டும் வசதிகள் கிடைத்தன. பின்நாட்களில் உழவு வண்டிகளின் பெட்டிகள் அடுக்கப்பட்டு மேடைகள் அமைக்கப்பட்டன. இத்தகைய மேடைகள் வசதியாக அமையவில்லை.

1991ஆம் ஆண்டு கிராம இளைஞர்களின் பிரயத்தனத்தில் நகவிதா அரங்கு அமைக்கப்பட்டது. மேடை கட்டுமானத்திற்கு கிராம மக்களிடம் சித்திரை வருடக் கலை நிகழ்ச்சிகள் நடாத்தப் பெற்றுக் கொண்ட நன்கொடை மிகுதிகளுடன் நலன் விரும்பிகளின் உதவிகளும் கிடைத்தன. சில தளவாடங்களை ஆலயங்கள் தந்துதவின. கூரை அமைப்புக்கு சர்வோதய நிறுவனம் உதவியது. திரைச்சீலை நலன் விரும்பி ஒருவரால் தரப்பட்டது. இவ்வாறு நகவிதா மேடை கடின உழைப்பின் விளைவாக கிடைத்தது. 2022 ஆம் ஆண்டு ஆலயக் கட்டுமானத்திற்காக நகவிதா அரங்கு அகற்றப்பட்டது.

2012களில் பிரதான வீதியில் அமைந்துள்ள பொது மைதானத்திலும் அரங்கு ஒன்று அமைக்கப்பட்டது. அது பிரதான வீதிக்கு அருகில் அமைந்திருப்பதால் உள்ளூர் கலைநிகழ்ச்சி களுக்கு மட்டுமன்றி வெளி நிகழ்வுகளும் அரங்கேற இடமளித்தது.

## ஆக்க இலக்கிய ஈடுபாடு

**கட்டுரைகளும் உரைகளும்:** நற்பிட்டிமுனை மக்களின் ஆக்க இலக்கிய ஈடுபாடு குறித்த ஆரம்பகாலத் தகவல்களின் பதிவுகள் மிக அரிதாகவே கிடைக்கின்றன. வகித்த பதவி நிலை அல்லது சமூக வகிபாகம் சார்ந்து பிரதேச வெளியீடுகளுக்கு எழுதப்பட்ட கட்டுரைகள், வாழ்த்துரைகள், பொதுவான விளக்கக் கட்டுரைகள் என்பவற்றைத் தவிர்த்து இலக்கிய, விமர்சன மற்றும் திறனாய்வுக் கட்டுரைகள், மதிப்புரைகள் என்ற வகையாறாக்களுள் எழுத்துக்களாகவும் உரைகளாகவும் பலர் பங்களித்துள்ளனர். இவர்களுள் வ .சுப்பிரமணியம், ந.நல்லரெத்தினம் , சபா-சபேசன், சி.கா தெய்வநாயகம், சஞ்சீவி சிவகுமார், எஸ். சபாரெத்தினம் முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள். நற்பிட்டிமுனை கல்வி அபிவிருத்தி அமைப்பின் இலக்கியப்பிரிவு 2000 ஆண்டில் சஞ்சீவி சிவகுமாரின் "கறிவேப்பிலை மரம்" அ. கோகுலதீபனின் "ஊனம்" முதலான சிறுகதைகளின் மீதான விமர்சன நிகழ்வை நிகழ்த்தியது. இது தவிர இலக்கிய இயக்கங்கள் இயங்கியமை குறித்து அறியமுடியவில்லை.

**சிறுகதைகள் மற்றும் கதைகள்:** நற்பிட்டிமுனையில் சிறுகதைத் துறையில் சபா-சபேசன், வி. அரசரெத்தினம், சஞ்சீவி சிவகுமார், அ.கோகுலதீபன் ஆகியோர் எழுதி வந்துள்ளனர். நற்பிட்டிமுனை நல்லரெத்தினம் எனும் பெயரில் 1968களில் "அப்பா" என்றொரு கதை எழுதப்பட்ட குறிப்புகளும் உள்ளன.

**கவிதை:** கவிதைத் துறையில் சபா-சபேசன், சஞ்சீவி சிவகுமார், எஸ். சிவகுருநாதன், ஜெனிற்றா மோகன், எஸ். ரகுவரன், சுபத்திரா, இ. நிஜந்தன் ஆகியோர் பங்களித்துவருகின்றனர். அடுத்த சந்ததியின் புதிய எழுத்தாளர்கள் குறித்து பெரிதும் அறியக் கிடைக்கவில்லை. .

## 8.4 நற்பிட்டிமுனையிலிருந்து வெளிவந்த நூல்கள்

1. 1964களில் அமரர் எஸ். எஸ். நாதன் அவர்கள் கதிர்காமத் திருமுருகன் என்ற சிறு நூலை வெளியிட்டார். இதன் மறுபதிப்பு 2012இல் அவரது மகன் சிவகுருநாதன் அவர்களால் செய்யப்பட்டது.

2. அமரர். ந. நல்லரெத்தினம் அவர்கள் "தமிழ் இலக்கணத் தெளிவு ", "ஈழத்து தமிழ் மணிகளின் தமிழ்ப் பணிகள்","ஈழத்துப் பெரியார்கள்" முதலான கற்றல்- கற்றல் துணை நூல்களைத் தொகுத்துள்ளார்.

3. சஞ்சீவி சபாரெட்ணம் தான் கற்பிக்கும் கல்விப்புலம் சார்ந்ததாக, "இலங்கையின் வெளி நாட்டுக் கொள்கை", "13வது திருத்தமும் மாகாணசபை முறைமையும்" ஆகிய சில சிறு நூல்களை வெளியிட்டார்.

4. கிழக்குப் பல்கலைக்கழக தமிழ் சங்கம் "முகங்கள்" எனும் பெயரில் ஏழு பேரில் சிறுகதை களை 1998இல் வெளியிட்டது. அதில் சஞ்சீவி சிவகுமாரின் கதையும் அடங்கியிருந்தது. சஞ்சீவி சிவகுமார், ரோஜாச் செய்கை எனும் விவசாயத் துறை சார்ந்த நூல் ஒன்றையும் 2004 இல் வெளியிட்டார். சுற்றாடல் அமைச்சின் வேண்டுகோளுக்கு அமைய மொன்றியலில் செய்யப்பட்ட Cartagena protocol on biosafety and BioTechnology எனும் உடன்படிக்கையின் தமிழாக்கம் சஞ்சீவி சிவகுமாரினால் 2003 ஆம் ஆண்டு மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டு நூலுருவானது.

5. ஜெனிதா பிரதீபன் அவர்கள் 2016இல் நற்பிட்டிமுனை "சமூகவியல் ஆய்வு" எனும் நூலை வெளியிட்டுள்ளார். இது தவிர தனது தொழில் சார்ந்து இல்லத்து வழக்காடல்கள், தண்டனைச் சட்டக் கோவை முதலான தொகுப்புகளையும் வெளியிட்டுள்ளார்.

6. இரா. தவசீலன் அவர்கள் 2018, 2019இல் "அபிவிருத்தி இலக்குகளை நோக்கி அணி வகுக்கும் இலங்கை" எனும் நூலை ஆங்கில, தமிழ் மொழிகளில் வெளியிட்டுள்ளார்.

7. திரு. சிவகுருநாதன் அவர்கள் "வரலாறு தரும் நற்பிட்டிமுனை" எனும் நூலினை 2022இல் வெளியிட்டார்.

8. க. குலேந்திரன் அவர்கள் 2022இல் "பலதும் பத்தும் - பொது அறிவு தொகுப்பு" எனும் தொகுப்பையும் செல்லையா வன்னியனாரைப் பற்றிய நூலையும் வெளியிட்டார்.

**உசாத்துணைகள்:**


1. Donald Furguson, The Earliest Dutch Visit to Ceylon, Journal of RAS, Vol. XXXI, 1928.
2. கல்வி விடியலின் கலங்கரை விளக்கு, அமரர் ந. நல்லரெத்தினம் நினைவு வெளியீடு-2007, நற்பிட்டிமுனை.
3. முனையம், பிரதேச செயலக கலாசாரப் பேரவை, பிரதேச செயலகம், கல்முனை (த.பி), 2017.
4. நடராசா எவ். எக்ஸ் சி, மட்டக்களப்பு மான்மியம், 1998.
5. வாய்மொழித் தகவல்களை வழங்கியவர்கள்
   திரு. க.குலேந்திரன், நாடகக் கலைஞர்
   திரு. க. நாகராசா, நாடகக் கலைஞர்
   திரு. க. கணபதிப்பிள்ளை
   திரு க.மனோகரன், நாடகக் கலைஞர்
   திரு. கா.கிருபைராஜா, நாடகக் கலைஞர்

# 09. நற்பிட்டிமுனையின் சமூக நிறுவனங்கள்

## 1. நற்பிட்டிமுனை கூட்டுறவுச் சங்கம்

1911 இல் நற்பிட்டிமுனை கூட்டுறவுக் கடன் சங்கம் என்ற பெயரிலான சங்கம் இயங்கிவந்தமை பற்றிய குறிப்புகளுள்ளன (Lyne R.N,1913). 1920-1921 இல் நற்பிட்டிமுனை கூட்டுறவுக் கடன் சங்கம் என்ற பெயரிலான சங்கம் 34 உறுப்பினர்களுடன் இயங்கிவந்தமை பற்றி அறிய முடிகின்றது. (Kanthappoo Paramothayan, 1990:123) இதுவே நற்பிட்டிமுனையின் முதலாவது கூட்டுறவு அமைப்பாக இருக்கமுடியும். 1931 இல் நற்பிட்டி முனை மத்தி கூட்டுறவுச் சங்கம் என்ற பெயரிலான மற்றோரு கூட்டுறவுச் சங்கம் பதிவுசெய்யப்பட்ட வர்த்தமானி அறிவிப்பும் அவதானிக்கப்பட்டது (இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 7883,செப்டம்பர் 25, 1931).

மட்டுப்படுத்தப்பட்ட நாய்ப்பட்டிமுனை ஸ்ரீ கணேஷா பலநோக்கு கூட்டுறவுச் சங்கம் (பதிவிலக்கம் KM 71, பதிவுத் திகதி 13.08.1962) மட்டுப்படுத்தப்பட்ட நாய்ப்பட்டிமுனை தமிழ் குறிச்சி ஐக்கிய பண்டக சாலைச் சங்கம் (பதிவிலக்கம் J490, பதிவுத் திகதி 03. 05.1943) ஆகிய இரண்டு கூட்டுறவுச் சங்கங்களும் பதிவுசெய்யப்பட்டு இயங்கி வந்துள்ளன ( இலங்கை அரசாங்க வர்த்தமானி, மார்ச் 1971).

## 2. நற்பிட்டிமுனை புகையிலை செய்கையாளர் கூட்டுறவுச் சங்கம்

1930இல் நற்பிட்டிமுனை புகையிலை செய்கையாளர் கூட்டுறவுச் சங்கம் அரச வர்த்தமானியில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. 1930 ஏப்ரல் 23ஆந் திகதியிலிருந்து வரிவிதிப்பு செய்யப்பட்ட நிறுவனங்களில் இதுவும் குறிப்பிடப்படுகின்றது (இலங்கை அரசாங்க வர்த்தமானி இல:7786, ஜூன் 20, 1930). பண்டைதொட்டு நற்பிட்டிமுனை புகையிலைச் செய்கையில் மேம்பட்டு காணப்பட்டமையுடன் தொழில்சார் கூட்டிணைவு காணப்பட்டமையை இதன் மூலம் துணியலாம். 1893 மேற்கொள்ளப்பட்ட காணிப்பதிவுகளில் (இலங்கை அரசாங்க வர்த்தமானி இல:1459, ஜூலை

7,1893) புகையிலைச் செய்கைக்குரிய காணி என்ற குறிப்புக் காணப்படுவதில் இருந்து நற்பிட்டிமுனை புகையிலைக் செய்கையில் அக்காலத்திலிருந்தே முக்கியமுடையது என்பது தெளிவு. பின்னாளில் சுருட்டு தொழில் பிரபலம் பெற்றுக் காணப்பட்ட இடங்களில் ஒன்றாக நற்பிட்டிமுனை காணப்பட்டது.

### 3. கரவாகு மேற்குப்பிரிவுக் கமத்தொழில் சங்கம்

1933 களில் கரவாகு மேற்குப் பிரிவுக் கமத்தொழில் சங்கம் அமைக்கப்பட்டு அதன் கிராம குழுப் பிரதிநிதியாக திரு. எஸ் .பி. ஆறுமுகம் அவர்களும் தேர்வு செய்யப்பட்ட உறுப்பினராக திரு. எஸ். செல்லையா வன்னியனார் அவர்களும் செயற்பட்டனர் (இலங்கை அரசாங்க வர்த்தமானி இல:8019, நவம்பர் 24, 1933).

### 4. கலைக் கதிர் மன்றம்:

கலைக்கதிர் மன்றம், 1980களிலிருந்து மேடைக் கலை நிகழ்ச்சிகள், நாடகங்கள் ஆகியவற்றை நடாத்தி வந்தன. திரு. க.கனகராசா அவர்கள் மன்றத்திற்கு தலைவராகச் செயற்பட்டார். இது நற்பிட்டிமுனை முருகன் ஆலய முன்றலில் அமைக்கப்பட்ட தற்காலிக மேடையில் சித்திரை வருட, சிவராத்திரிக்கு காலங்களில் நிகழ்வுகளை நடாத்தின.

### 5. நற்பிட்டிமுனை இளைஞர் வட்டம்:

கலா மன்றங்களின் செயற்பாடுகள் 1985களுக்குப் பின் வந்த காலங்களில் சரிவு காண அவ்வப் போது நிகழ்வுகளை நடாத்தும் தற்காலிக மன்றமாக நற்பிட்டிமுனை இளைஞர் வட்டம் உருவாகியது. சித்திரைப் புத்தாண்டையொட்டி மற்றும் சிவராத்திரி நிகழ்வுகளுக்காக இவை உருவாக்கம் பெற்றன.

### 6. முத்தமிழ் மன்றம்

முத்தமிழ் மன்றம், 1980காலப்பகுதிகளில் அம்பலத்தடிப் பிள்ளையார் முன்றலில் மேடைக் கலை நிகழ்ச்சிகள், நாடகங்கள் ஆகியவற்றை நடாத்தி வந்தன. இதன் ஆரம்பிப் பாளராக அமரர். எ. அமிர்தலிங்கம் அவர்கள் செயற்பட்டார். சிலகாலம் இதற்கு திரு பஞ்சாட்சரம் அவர்களும் தலைமை வகித்தார்.

### 7. கிராம முன்னேற்றச் சங்கங்கள்

நற்பிட்டிமுனையின் உள்ளூர் நிருவாக அலகுகள் ஆரம்பத்தில் வட்டாரங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஆறாம், ஏழாம் வட்டாரங்கள் நற்பிட்டிமுனை தமிழ் பிரிவுகளை உள்ளடக்கியிருந்தது. பின்னர் நற்பிட்டிமுனை தமிழ் பிரிவு-1, தமிழ் பிரிவு-2, தமிழ் பிரிவு-3 என வகுக்கப்பட்டது. இவற்றுக்கென தனித்தனி கிராம முன்னேற்றச் சங்கங்கள் அமைக்கப்பட்டு இயங்கிவருகின்றன. நற்பிட்டிமுனை தமிழ் பிரிவு-1 கிராம முன்னேற்றச் சங்கம் RD/NEP/AM/K(TD)N/1/1 (பதிவுத் திகதி 06.04.1994) எனும் பதிவிலக்கத்திலும், நற்பிட்டிமுனை தமிழ் பிரிவு-2 கிராம முன்னேற்றச் சங்க NEP/RD/AM/KPT/62/2/1 எனும் பதிவிலக்கத்திலும் இயங்கி வருகின்றன.

## 8. அறிவுத்தாரை சனசமூக நிலையம்

1989களில் அறிவுத்தாரை சனசமூக நிலையம் பதிவுசெய்யப்பட்டு 'அறித்தாரை வாசிகசாலை' எனும் வாசிகசாலையை தனியாருக்கு சொந்தமான "இந்திர பவனம்" இல்லத்தில் நடாத்தியது. சில சஞ்சிகைகள் மற்றும் நாளாந்தப் பத்திரிகைகள் இங்கு கிடைத்தன. சில சந்தாதாரர்களை அணுகி நாளாந்த பத்திரிகைகள் பெறப்பட்டு வாசிகசாலையில் இடப்பட்டன. 1997வாக்கில் இந்த வாசிகசாலை பிள்ளையார் கோயிலுக்கு அருகில் உள்ள மகளிர் கொத்தணி அமைப்பு கட்டிடத்தில் நடாத்தப்பட்டது. ஆயினும் பிற்பகலில் மட்டும் திறந்திருக்கும் நடைமுறை காணப்பட்டது.

## 9. இந்து இளைஞர் மன்றம்

நற்பிட்டிமுனை இந்து இளைஞர் மன்றம் 1983ஆம் ஆண்டு பதிவுசெய்யப்பட்டு (பதிவிலக்கம்: 6/2/A/2/15) இயங்கி வந்த நிலையில் பின்வந்த காலங்களில் அது செயற்படாமல் கிடந்தது . இந்நிலையில் 1989ஆம் ஆண்டு மீண்டும் புனரமைப்பு செய்யப்பட்டு புது வேகத்துடன் இயங்கியது. முக்கிய செயற்பாடுகளாக அறநெறிப்பாடசாலை (பதிவிலக்கம்: HA/7/56/2/1) உருவாக்கப்பட்டு சிவசக்தி வித்தியாலயத்தில் இயக்கச் செய்யப்பட்டது. யுத்த காலத்தில் பல சவால்களுக்கு மத்தியில் ஞாயிற்றுக் கிழமைகளில் சமய வகுப்புகள் இடம் பெற்றதுடன் இந்துக் கலாசாரத் திணைக்களத்தின் பலவேறு செயற்பாடுகளையும் முன்னெடுத்துச் சென்றனர்.அம்பாறை மாவட்ட இந்து இளைஞர் பேரவை புனரமைப்பிலும் நற்பிட்டிமுனை இந்து இளைஞர் மன்றம் முக்கிய பங்கு வகித்தது.

## 10. விளையாட்டுக் கழகங்கள்

நற்பிட்டிமுனையில் பல்வேறு விளையாட்டுக் கழகங்கள் இயங்கிவந்தமை குறித்த ஆதாரங்கள் காணப்படுகின்றன. துடுப்பாட்டம், வலைப்பந்தாட்டம், எல்லே, உதைபந்தாட்டக் குழுக்கள் உட்பட குழுக்களாக விளையாட்டுச் செயற்பாடுகளில் ஈடுபட்டுவந்தனர். ஒல்லியன்ஸ் விளையாட்டுக் கழகம், விண்ணொளி விளையாட்டுக் கழகம், கோல்டு ஸ்டார் விளையாட்டுக் கழகம், சூப்பர் ஸ்டார் விளையாட்டுக் கழகம், விவேகானந்தா விளையாட்டுக் கழகம், வாரணம் விளையாட்டுக் கழகம் எனப் பல்வேறு விளையாட்டுக் கழகங்கள் செயற் பட்டுவந்தன. விவேகானந்தா விளையாட்டுக் கழகம், வாரணம் விளையாட்டுக் கழகம் தொடர்ந்து செயற்பட்டுவருகின்றன.

**உசாத்துணை**


1. Kanthappoo Paramothayan, "The Cooperative movement in the Jaffna District of Sri Lanka from 1911-1970", PhD thesis, Institute of Education, University of London, February, 1990.
2. Lyne R.N, Direcor of Agriculure, Administrative Report 1911-12, Part IV, 1913
3. இலங்கை அரசாங்க வர்த்தமானி இலக்கம் 7883,செப்டம்பர் 25, 1931
4. இலங்கை அரசாங்க வர்த்தமானி, மார்ச் 1971
5. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல:7786, ஜூன் 20, 1930
6. இலங்கை அரசாங்க வர்த்தமானி இல:8019, நவம்பர் 24, 1933
7. அமரர்.சா.ஆனந்தராசா அவர்களின் வசமிருந்த தொடர்பாடல் கோவைகளில் பெறப்பட்டவை.

# 10. நற்பிட்டிமுனை சந்தித்த அனர்த்தங்கள்

**கா**லத்துக்குக் காலம் இப்பகுதிகளில் ஏற்பட்ட பல்வேறு அனர்த்தங்களுக்கு நற்பிட்டிமுனையும் முகம் கொடுத்து வந்துள்ளது. வெள்ளப் பெருக்குகள், சூறாவளி, வறட்சி முதலான இயற்கை அனர்த்தங்கள் மட்டு மன்றி யுத்த வடுக்களையும் அது சுமந்தது. 1957களில் நிகழ்ந்த வெள்ளப் பெருக்கு, 1978 சூறாவளி, என்பவை பாரிய இழப்புகளைத் தந்தவை. முப்பது வருடகால யுத்தம் பல்வேறு இழப்புகளையும் துயரங்களையும் இம்மண்ணில் ஏற்படுத்தின.

**வெள்ளப்பெருக்கு - 1957:** பெரிய வெள்ளம் எனக் குறிப்பிட்டு பேசப் படுகின்ற வெள்ளப்பெருக்கு 1957களில் இப்பிரத்தேசத்தில் நிகழ்ந்தது. தொடர்மழையினால் ஏற்பட்ட வெள்ளம் காரணமாக இக்கினியாகல அணைக்கட்டு உடைப்பெடுத்து வெள்ளம் கட்டுக்கடங்காமல் ஏற்பட்டது. பொதுவாக நிகழும் ஆண்டு வெள்ளம் காரணமாக பட்டிப்பளை ஆறு கரை கடந்து அருகிலுள்ள வயல்நிலங்களையும் தாண்டி சிறிதளவு வெள்ளநீர் வயல் வீதிக்கு வரும். அனால் 1957 வெள்ளம் அதைத் தாண்டி பிள்ளையார் கோயில் வீதி வரை வெள்ளநீர் வந்ததாகக் கூறப்படுகின்றது.

**சூறாவளி-1978** :நவம்பர் 23, 1978 அன்று இலங்கையின் கிழக்கு மாகாணத் தைத் தாக்கிய சூறாவளி இதுவாகும். மரங்கள் வேரோடு சாய்ந்து, கூரைகள் தூக்கி வீசப்பட்டுவீடுகள் சரிந்து வீழ்ந்து ஒரு மனிதப் பேரவலம். சூறாவளி காரணமாக மக்களின் குடியிருப்பு வீடுகள், குடிசைகள் என்பன சேதமடைந்தன. அத்துடன் கமு / சிவசக்தி வித்தியாலயத்தின் கன்னார்த் தகட்டினால் வேயப்பட்டிருந்த கூரையும் தேசமாகியது. சூறாவளி காரணமாக பலவற்றின் கூரைகளும் சேதமடைந்தன. நற்பிட்டிமுனை முருகன் ஆலயம் முழுமையாகச் சேதமடைந்தமை குறித்து பதிவாகியுள்ளது.

**யுத்தம்:** இயற்கை அனர்த்தங்களை விடப் பாரதூரமான இழப்புகளைத் தந்த மனிதன் உருவாக்கிய அனர்த்தமாகிய யுத்தம் 30 ஆண்டுகளைக் கடந்து இலங்கைத் தீவை ஆட் கொண்டது. நற்பிட்டிமுனையும் அதற்கு விதிவிலக்கல்ல. நற்பிட்டிமுனையில் அங்குமிங்குமாகப் பல மனித இழப்புகள் ஏற்பட்டன. குண்டுவெடிப்பு, செல்தாக்குதல், இடம்பெயர்வு எனப் பல்வேறு பாதிப்புகளைச் சந்தித்தன. அவற்றில் 17.05.1985 அன்று நிகழ்ந்த சுற்றிவளைப்பும் கைதும் மிகப்பெரும் துயரத்தையும் அச்சசூழலையும் ஏற்படுத்தின. அன்றைய தினம் அதிகாலையில் படுக்கையில் இருந்தவர்களும் காலைக்கடமைகளுக்கு தயாரானவர்களுமாக 23 இளைஞர்கள் கைதாகினர் (Tamil Massacres 1956-2001; Cycle of violence:human Rights in Sri Lanka since the Indo Sri Lanka agreement: Pg116; Amnesty International report 1986:259). இதுவே நற்பிட்டிமுனையில் ஒரே தடவையில் நிகழ்ந்த மிகப்பெரிய அனர்த்தமாகும். இக்கைது மற்றும் காணாமல் ஆக்கப்பட்டமை தொடர்பில் உலகளாவிய ரீதியில் பல்வேறு உணர்வலைகள் ஏற்பட்டதுடன் வெளிநாட்டு பல்கலைக்கழக மாணவர்களின் ஆய்வு அறிக்கைகளிலும் நற்பிட்டிமுனை எனும் பெயர் இடம் பிடிக்கக் காரணமானது. கனேடியரான பிலிப்ஸ் மைக்கல் ஒந்தாஜி (Philip Michael Ondaatje) எனும் புகழ்பெற்ற நாவலாசிரியர் எழுதிய பல விருதுகளை பெற்றதும் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்ப்பு பெற்றதுமான Anil's Ghost எனும் நாவலில் நற்பிட்டிமுனையின் இந்த அனர்த்தம் பற்றிய குறிப்பு வருகிறது. இந்நாவல் வெளிநாடுகளில் புலமைப்பரிசில் பெற்று கல்வி கற்றபின் மனித உரிமைகள் நிறுவனத்தின் ஆராய்ச்சியாளராக கடமையேற்கும் அனில் பெரேரா எனும் தடயவியல் வைத்தியர் ஒருவரின் கதை பற்றியது. ஒரு வெளிநாட்டு நாவலின் பதிவிடும் அளவிற்கு நற்பிட்டிமுனையின் இந்த அனர்த்தம் முக்கியமிக்க ஒன்றாக இருந்தது.

17.05.1985 அன்று நற்பிட்டிமுனையில் நிகழ்ந்த சுற்றிவளைப்பில் கைதாகி காணாமல் ஆக்கப்பட்டோர் விபரம் வருமாறு:

1. இளையதம்பி செல்வராசா (வயது 30)
2. கனகசூரியர் கோபாலசிங்கம் (வயது 28)
3. கனகரத்தினம் தங்கவேல் (வயது 19)
4. கந்தப்போடி புஸ்பராசா (வயது 23)
5. காசிப்பிள்ளை சிவகுமார் (வயது 31)
6. குழந்தைவேல் பொன்னுத்துரை (வயது 26)
7. குலசேகரம் செல்வநாயகம் (வயது 26)
8. கணபதிப்பிள்ளை நேசதுரை (வயது 22)
9. குணரத்தினம் முரளிதரன் (வயது 21)
10. குணரத்தினம் சுதாகரன் (வயது 23)
11. துரையப்பா நடேசன் (வயது 23)
12. தம்பிமுத்து பாக்கியராசா (வயது 27)
13. தம்பிராசா விவேகானந்தன் (வயது 22)
14. மயில்வாகனம் பரமேஸ்வரன் (வயது 27)
15. ஆறுமுகம் நடேசன் (வயது 29)

16. வெள்ளைப்பொடி தவராசா (வயது 23)
17. ஞானப்பிரகாசம் யூவானில் (வயது 22)
18. சதாசிவம் தங்கத்துரை (வயது 23)
19. சிவநாதப்பிள்ளை தங்கத்துரை (வயது 23)
20. வீரக்குட்டி தங்கவேல் (வயது 27)
21. வரதராசன் வரதீஸ்வரன் (வயது 20)
22. இராசமாணிக்கம் தியாகராசா (வயது 23)
23. ஏகாம்பரம் தமிழ்வாணன் (வயது 19)

Source: Massacres of Tamils 1956-2008

இவர்கயில் இதுவரை யாரும் உயிருடன் இருப்பதான தகவல்கள் கிடைக்கவில்லை

**உசாத்துணை**


1. Michael Ondaatje, Anil's Ghost (Historical fiction), Published by McClelland & Stewart, Canada,2000
2. Massacres of Tamils 1956-2008,North East Secretariat on Human Right,Manitham Publishers Tamil Nadu India,2009.
3. Cycle of violence:human Rights in Sri Lanka since the indo Sri lanka agreement:
4. Amnesty International report 1986
5. Foreign Assistance Legislation for Fiscal Years 1988-89: without special title United States. Congress. House. Committee on Foreign Affairs,pp720
6. Sri Lanka,State of Human Rights,1994.
7. Twenty One Years of CRM: An Annotated List of Documents of the Civil Rights Movement of Sri Lanka-1971-1992,1993

# 11. நற்பிட்டிமுனையின் வழக்கிலிருந்த கதையாடல்களும் கதை கூறும் கிராமிய விளையாட்டுகளும்

**நா**ட்டுப்புற மக்கள் தாம் காலங்காலமாக சேமித்து, தம் சந்ததி ஊடாகக் கடத்தி வருகின்ற ஒரு விடயமாக அவர்களது நாட்டுப்புறக் கலை மற்றும் இலக்கியங்களைக் குறிப்பிடலாம். ஒரு மக்கள் பரம்பரையின் உணர்வுகளை ஊடறுத்து அவர்களது வாழ்வியலையும் வழக்கையும் கதை கதையாய் கூறுகின்ற பாடல்களும், கதைகளும் இந்த நாட்டார் கலை இலக்கியக் கூறுகளுள் புதைந்து கிடக்கின்றன. சமூகநீதியை போதிப்பதும் பொழுதுபோக்கும் இதன் முக்கிய நோக்குகளாய் அமைந்திருந்தன.

நாட்டுப்புற இலக்கிய மரபில் கதைகூறல் ஒரு முக்கியமான இலக்கியப் பண்பாக இருந்தது. இத்தகைய நிகழ்கதைச் சூழலில் கதை சொல்லிகளாக முக்கிய வகிபங்கு பாட்டிமார்களுக்கிருந்தது. இற்றைக்கு முந்தைய சந்ததியில் நம் பாட்டிமார்களின் நாளாந்த கடமைகளில் ஒன்றாக தம் பேரர்களுக்கு கதை சொல்வது வழக்கமாகவே காணப்பட்டது. ஒரு வகையான முறைசாரா கல்வியாக இந்த கதை கூறல் மரபை அவர்கள் பேணி வந்தனர். மாலைப் பொழுதுகளில் மங்கிய நிலவொளியில் இதமளிக்கும் இயற்கை வெளிகளில் இருந்து கதை கேட்கும் கலாசாரம் இன்றில்லை. இப்போதெல்லாம் பாட்டிமார் பழைய கதைகள் சொல்வது என்ற வழக்கத்தை காணமுடிவதில்லை. இதனால் நாட்டுப்புறக்கதைகள் அல்லது நாடோடிக் கதைகள் அருகிவரும் ஒன்றாகப் போய்விட்டது. அந்த வகையில் பாட்டிமார்களின் மடியில் படுத்துக்கொண்டு கதைகளைக் கேட்டு நாளாந்தம் தூக்கம் கொண்ட பரம்பரையின் கடைசி வாரிசுக்களாக இப்போதுள்ள நடுத்தர வயதினரைக் கூறலாம்.

நாட்டுப்புறக் கதைகளை அறிஞர்கள் பல்வேறு வகைகளாக வகைப்படுத்தி இருக்கிறார்கள். இவற்றில் தெனாலிராமன் கதைகள், விக்கிரமாதித்தன் கதைகள் போன்றவை தமிழர்களின் தேசம் கடந்து வழங்கப்படுகின்ற பொதுக் கதைகளாக காணப்படுகின்றன. ஆயினும்

சில கதைகள் குறித்த ஒரு பிரதேசத்தை அடிப்படையாகக் கொண்டு அப்பிரதேசத்துக்கு உரியதாக வழங்கப்படுகிறது. தமது பிரதேசத்தில் தமது சமகாலத்தில் வாழ்ந்தவர்களின் கதைகள் போல இவை சித்தரிக்கப்படுவது இக்கதைகளில் முக்கியத்துவம் ஆகும். இத்தகைய குறித்த பிரதேசத்துக்கு மட்டுமுரிய கதைகள் அருகி அழிந்து வரும் ஆபத்து அதிகம் கொண்டவையாகும். அந்தவகையில் கல்முனை, நற்பிட்டிமுனை பிரதேசத்தில் பாட்டி கதை மரபாக வழங்கி வந்த முக்கியமான கதையாக "பேய் வெட்டிப் போடியார்" கதைகளைக் காணலாம். இவை திகிலூட்டும் பேய்க் கதை வகையைச் சார்ந்ததாக காணப்படுகின்றன. இது தவிர களவெட்டிப் பூதம் நெல் களவெடுக்கும் ஐதீகம் சார்ந்த கதைகளும் நெடுங்கால வழக்கில் காணப்படுகின்றன.

பேய் வெட்டிப் போடியார் இப்பிரதேசத்தில் வாழ்ந்து வந்த ஒரு விவசாயியாக கதையில் சித்தரிக்கப்படுகிறார். 'போடியார்' என்னும் பெயர் வழக்கு மட்டக்களப்பு மண்ணில் அதிக நில புலன்களுக்கு சொந்தமான பண்ணையாரை குறிக்கும். பின்னாளில் தம் பெயர்களின் பின்னொட்டாக போடியார் என்று சொல்லைக் கொண்ட நிலபுலன்கள் குறைந்த சாமானியர்கள் பலரும் (போடியார் என்ற பெயருடன்) காணப்பட்டனர். இந்தக் கதையில் வரும் பேய் வெட்டி போடியாரும் ஒரு சாதாரண விவசாயியாகவே விவரிக்கப்படுகிறார்.

மட்டக்களப்பு மண்ணின் வழங்கப்படுகின்ற இன்னும் ஒரு பண்பாட்டுக் கூறாகக் கூறக் கூடியது அவர்களது மாந்திரீக வழமையாகும். இதுவும் பாரம்பரியமாக வழங்கப்படும் முறைமையை கொண்டதே. பொதுவாக பேய் ஆடுதல், பேயோட்டுதல், மந்திரத்தால் கட்டுதல் முதலிய மந்திரம் சார்ந்த நடவடிக்கைகளை இங்கு குறிப்பிடலாம். இக்கதையின் நாயகனான பேய் வெட்டிப் போடியார் நன்கு மந்திரம் தெரிந்தவராக இங்கு காட்டப்படுகிறார்.

இக்கதை எடுத்துரைக்கும் காலம் வேளாண்மை வெட்டுதல் (அருவி வெட்டுதல்) மனித வலுவைப் பயன்படுத்தி ஆட்களின் மூலம் தாட்கத்தி (sickle) கொண்டு (வேளாண்மையின் கதிர் தாள் – தாள்+கத்தி =தாட்கத்தி) மேற்கொள்ளப்பட்டுவந்தது. அப்போது வேளாண்மை வெட்டும் அணி 'தத்தி' என்னப்பட்டது. இந்த வேளாண்மை வெட்டும் தத்தியின் தலைமை 'முகாமை' என அழைக்கப்படுவார். வேளாண்மை பங்குகளாக வகுக்கப்பட்டு வெட்டு நிகழும். வெட்டிய கதிர்கள் திரட்டப்பட்டு 'உப்பட்டி' என அழைக்கப்படும். உப்பட்டிகள் ஒன்றாக குவிக்கப்பட்டு சூடு என அழைக்கப்பட்டது. சூடு குவித்தல், சூடடித்தல், பொலி கிளறுதல், பொலி தூற்றுதல் என எல்லாமே மனித வலுவினாலே மேற்கொள்ளப்பட்டன. கூட்டு அருவி வெட்டி (combined harvester) அறிமுகப்படுத்தப்பட்டதுடன் இந்த மனித வலுவினால் வேளாண்மை வெட்டும் முறைமை மக்களிடமிருந்து அன்னியப்பட்டது. வெட்டு மெஷின் எனப்படும் இந்த கூட்டு அருவி வெட்டி வேலையை இலகுவாக்கி உள்ளது. ஆனால் வேளாண்மை வெட்டுதல் சார்ந்த மக்களின் தொழில் மரபு அவர்களிடம் இருந்து பிடுங்கி எறியப்பட்டுவிட்டது. அருகிவரும் இக்கதைகளை ஆவணப்படுத்தும் நோக்கில் பதிவிடுகின்றேன்.

### கதை 1: திரிப்பஞ்சமி

பேய் வெட்டி போடியார் ஒரு வேளாண்மை வெட்டும் தத்தியின் முகாமைக்காரராக இருந்தார். அவர் வேளாண்மை தத்தியுடன் வெவ்வேறு ஊர்களுக்கும் சென்று நெல் வயலில் அறுவடை செய்வதை தொழிலாகச் செய்துவந்தார். இவ்வாறு அவர் வயல் அறுவடைக்கு

செல்லும் இடங்களில் குச்சவெளியும் ஒன்று. கல்முனையில் இருந்து தனது குழுவுடன் குச்சவெளி பிரதேசத்துக்கு வேளாண்மை வெட்டுக்காகச் செல்கிறார். அந்தக் காலத்தில் முக்கிய நகரங்களுக்கு இடையில் மட்டும்தான் பேருந்து போக்குவரத்து இருக்கும். நகரத்தின் இறங்கி கிராமங்களுக்கு செல்வதற்கு நாலைந்து மைல் தூரம் என்றாலும் நடந்துதான் செல்ல வேண்டும். கொஞ்சம் தொலைவான இடங்கள் எனில் மாட்டுவண்டியில் செல்வர். குச்சவெளிக்கு பிற்பகலில் பயணத்தைத் தொடங்கும் பேருந்து நள்ளிரவு தான் அங்கு சென்றடையும். இந்தக் குழு குச்சவெளியை நோக்கி தமக்குத் தேவையான உடை மற்றும் உணவு பொட்டலங்களுடன் புறப்படுகிறது. தூர இடங்களுக்கு செல்லும்போது கட்டுச்சோறு கட்டுவது என்பது அந்தக் காலத்தில் ஒரு தனிக் கலை. துணியில் அல்லது வாழை இலையில் அதற்கென பொருத்தமாக தயாரிக்கப்பட்ட கறிவகைகளுடன் சோறு கட்டுவார்கள். நீண்ட நேரம் கெடாமலும் சுவை குன்றாமலும் இருக்க கறிகளின் பதமும் முறையும் அமையும்.

பேய் வெட்டிப் போடியார் குழுவினர் குச்சவெளியைச் சென்றடையும் போது நள்ளிரவு தாண்டியிருந்தது. மின்சாரம் இல்லாத காலம். எங்கும் கும்மிருட்டு. நாய்களின் ஊளையும் சில்லூறுகளின் இரைச்சலும் மட்டும் இடையிட்டுக் கேட்டுக் கொண்டிருந்தன. இடையிடையே சில்லென்ற காற்று உடலை தழுவிக் சென்றது. பேய் வெட்டிப் போடியாரின் வெட்டு தத்தி வழமையாக ஒவ்வொரு போகமும் குச்சவெளிக்கு வேளாண்மை வெட்டுக்குச் செல்வது வழக்கம். அவர்கள் வழமையாக சென்று தங்கி வேலைக்கு செல்லும் வீடு ஒன்று இருந்தது. இப்போது போல் தொலைபேசி தொடர்பு சாதனங்கள் அந்தக்காலத்தில் இல்லை. தொலை பேசிகள் பெரிதும் காணப்படாத அந்த காலத்தில் தமது வரவை முன்னறிவிப்பு செய்வதற்கு இருந்த ஒரே தொடர்பாடல் தந்தி அடித்தல் தான். ஆதலால் தங்கள் வரவை தந்தி மூலம் அறிவித்திருந்தனர். தந்தி கிடைத்திருக்கும் என்ற நம்பிக்கையில் குறித்த வீட்டை நோக்கிச் சென்றனர்.

வீட்டுப் படலை தாழிடப்பட்டிருந்தது. வீட்டின் உட்புறம் ஒரு இலேசான வெளிச்சம் காணப்பட்டது. வீட்டில் ஆட்கள் விழிப்புடன் இருக்கிறார்களா? என்ற எதிர்பார்ப்புடன் பேய் வெட்டிப் போடியாரும் குழுவினரும் வீட்டுப் படலையின் தாளினை அவிழ்த்துக் கொண்டு உள்ளே செல்கின்றனர். அது விசாலமான மண்டபத்தையும் பல அறைகளையும் கொண்ட பெரிய வீடு. வீட்டின் வாயிலில் நின்று “பிள்ளை, பிள்ளை” என சப்தமிட்டு அழைக்கின்றனர். வீட்டினுள்ளே ஏதோ சிலமன் கேட்ட போதிலும் யாரும் பதில் அளிக்கவில்லை. மீண்டும் அதே “பிள்ளை, பிள்ளை” என அழைக்கிறார் பேய் வெட்டி போடியார். எந்த சத்தமும் இல்லை. ஆயினும் வீட்டின் உள்ளே ஏதோ சத்தம் கேட்டுக்கொண்டே இருந்தது. பேய் வெட்டிப்போடியாரும் குழுவினரும் வீட்டுக் கதவு வரை முன்னேறி கதவின் ஓரமாக காதை வைத்து கேட்கின்றனர். வீட்டினுள்ளே ஒருவகையான ஆரவாரம் தெளிவாக கேட்டது. கதவை தட்டுகிறார். அந்த ஆரவாரச் சத்தம் ஓய்ந்து மீண்டும் தொடர்ந்தது. வேறுவழியின்றி கதவு திறப்பு துவாரத்தின் ஊடாக கண்ணை வைத்து நோக்குகிறார். மண்டபத்தின் உட்புறம் ஒவ்வொரு மூலைக்கும் விளக்குச் சுவாலை போல அங்கும் இங்கும் மாறிமாறி ஒளிர்ந்து அணைகிறது. அந்தச் சுவாலை விளக்குத்திரி போல ஒவ்வொரு மூலைக்கும் ஓடி ஓடி ஒளிர்ந்தது. வந்தவர்களில் சிலரும் அவ்வாறு திறப்பு துவாரத்தின் ஊடாக பார்க்கின்றனர். பேய் வெட்டிப் போடியாருக்கு விவரம் புரிந்துவிட்டது. ஒரு செருமல் உடன் நீயா உள்ளுக்கு

இருக்கிறாய் என்று எச்சில் உமிழ்ந்துவிட்டுப் பின் வாங்குகிறார். மற்றையவர்கள் என்ன நடக்கிறது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கிறார்கள். 'திரிப்பஞ்சமி' என்று முணுத்தவாறு பேய் வெட்டி போடியார் தனது இடுப்பில் செருகி வைத்திருந்த திருநீற்று வல்லுகத்தை எடுக்கின்றார். (வல்லுகம் என்பது இடுப்பில் செருகக் கூடிய பொருட்களை போட்டு வைக்கும் துணியினால் செய்யப்பட்ட பை) மந்திரத்தை உச்சாடனம் செய்ய தொடங்குகிறார். உள்ளே பேய்களின் கூச்சல் அதிகரிக்கிறது. உடன் வந்தவர்கள் அதிர்ச்சியில் உறைந்து போய் நிற்கிறார்கள். மந்திர உச்சாடனத்தைக் கேட்டதும் பேய்களின் கூச்சல் மேலும் அதிகரித்தது. அவை தமது விரல்களை கதவின் சாவித் துளையின் ஊடாக வெளியே நீட்டின. அவை மொட்டு மொட்டு விரல்களாகக் காணப்பட்டன. கோபமடைந்த போடியார், தன் இடுப்பில் செருகியிருந்த வில்லுக் கத்தியை எடுத்து பேயின் விரலை துண்டாக வெட்டினார். பேயின் விரல்களிலிருந்து குருதியோழுக பெரும் கூச்சல் போட்டு அவை அலறின. பேய் வெட்டி போடியார் தன் சகாக்களை 'பின்வாங்கச் சொல்லியவாறு திருநீற்றினால் கோடு மறித்து, மறித்து பின்னோக்கி நகர்ந்து நகர்ந்து வீட்டை விட்டு வெளியேறுகிறார்கள். எல்லோர் மீதும் திருநீறை தூவி மந்திரத்தால் கட்டியவாறு அப்படியே பின்னோக்கி நகர்ந்து அருகில் இருந்த வீடு ஒன்றுக்குள் செல்கிறார்கள். அந்த வீட்டில் தமக்கு நிகழ்ந்தவற்றை எடுத்துக் கூறுகிறார்கள்.

அதற்கு அவர்கள், " நீங்கள் விசாரிக்காமல் வந்து விட்டீர்களா?" அந்த வீட்டில் இருந்த பெண் பிள்ளை கடந்த மாதம் தூக்கு போட்டு இறந்து விட்டது. அதன்பின் நாளாந்தம் வீட்டில் பேய் நடமாட்டமும் பயமுறுத்தலும் தொடர்ந்தன. இதன் காரணமாக வீட்டிலிருந்த மற்றவர்களும் வீட்டை விட்டு வெளியேறி வேறிடம் சென்றுவிட்டனர். இப்போது மாலை பட்டால் அந்த வீட்டின் பேய்களின் அட்டகாசம் தான். இங்குள்ள சனங்கள் மாலை பட்டால் அந்த வீட்டுப் பக்கமே போவதில்லை" என விவரித்தனர்.

பேய் வெட்டிப் போடியார் தன் மாந்திரீக அவதானிப்பு மூலம் இது திரிப்பஞ்சமி என்பதை கண்டறிந்திருந்தார். அதன் குற்றத்தை நீக்க சகாக்களுக்கு தண்ணீர் ஓதி பேயின் பார்வையில் இருந்து சிகிச்சையளித்தார். மறுநாள் அனைவரும் ஊர் திரும்பினர். பேயின் பிடியில் இருந்து தன் சகாக்களை காப்பாற்றிய போடியாரின் பெயர் மக்களால் பேய் வெட்டிப் போடியார் என அழைக்கப்பட்டது.

### கதை 2: காடேறி

பேய் வெட்டிப் போடியாருக்கு குழந்தைகள் கிடையாது. ஊரவர்கள் இவர்களை மலடர்கள் என வசை கூறிவந்தனர். பேய் வெட்டிப் போடியாரின் மனைவி கண்ணாத்தைக்கு இது பெரும் கவலையாக இருந்தது. அவர் பேய் வெட்டிப் போடியாரை தொடர்ந்து நச்சரித்துக் கொண்டிருந்தார். எங்காவது ஒரு குழந்தையை தத்தெடுத்து வளர்க்க வேண்டும் என்பது அவர் ஆசையாக இருந்தது. இதனை பலமுறை பேய் வெட்டிப் போடியாரிடம் எடுத்துக்கூறியும் அவர் அதற்கு எந்த ஒழுங்கும் செய்யவில்லை என்பது அவரது குற்றச்சாட்டு.

இவ்வாறு காலம் ஓடிக்கொண்டிருந்தது. ஒருநாள் பேய் வெட்டி போடியார் ஒரு குழந்தையுடன் வீட்டுக்கு வந்திருந்தார். கருப்பு நிறமாக இருந்தாலும் அழகான துருதுருவென்று பெரிய கண்கள், சுருட்டையாக மிக நீண்ட கூந்தல். புது இடம் என்ற தயக்கம் சிறிதுமின்றி

குழந்தை துள்ளிக் குதித்துக் கொண்டே இருந்தது. மொத்தத்தில் அந்த வீடே பிள்ளைச் செல்வம் இல்லை என்ற குறையை மறந்து கலகலத்து கொண்டிருந்தது. கண்ணாத்தாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. பிள்ளையின் அழகிலும் துடினத்திலும் தன்னை மறந்து கொண்டார். குழந்தையைத் தடவித் தடவி ஆனந்தப்பட்டார். குழந்தைக்கு எல்லா பணிவிடைகளையும் செய்து அழகு பார்த்தார்.

குழந்தைக்கு மிக நீண்ட கூந்தல் என்பதால் உரல் ஒன்றின் மேல் வைத்து தலை வருவார் கண்ணாத்தா. குழந்தை மிகுந்த துடிப்புதனமும் உறுதியும் கொண்டதாக காணப்பட்டது. உணவு வகைகளை மிகுந்த விருப்புடன் உண்டது. அதிலும் மாமிச உணவுகள் என்றால் அதற்கு கொள்ளை பிரியமாக இருந்தது. வயதுக்கு அதிகமாகவே குழந்தையின் சாப்பாட்டின் அளவு இருந்தது. கண்ணாத்தா குழந்தைக்கு வகைவகையாக பிடித்தது எல்லாம் சமைத்துப் போட்டார். அதுவும் ஆசை ஆசையாக உண்டு மகிழ்ந்தது. ஆனாலும் கண்ணாத்தாவுக்கு ஒரு கவலை. காலையில் உணவு உண்டபின் வெளியே விளையாட ஓடிச் சென்றால் மதியம் சாப்பாட்டுக்கு எங்காவது தேடிப்பிடிக்க வேண்டும். அதேபோல் மாலை படும்வரை காடுமேடெல்லாம் திரிந்துவிட்டு இருட்டிய பின் தேடிப்பிடித்து ஆளை கொண்டு வர வேண்டி இருந்தது. இதுபற்றி கண்ணாத்தா பேய் வெட்டி போடியாரிடமும் பலதடவை முறையிட்டுள்ளார். குழந்தைப் பிள்ளை தானே வயது வந்ததும் திருந்தி விடுவார் என பேய் வெட்டிப் போடி யாரும் ஆறுதல் கூறினார். நன்றாக உண்பதும் பின் காட்டில் திரிந்தும் மரங்களில் ஏறியும் மாறுபட்டதாய் நடந்து கொள்ளும் அந்தப் பிள்ளையில் நடவடிக்கைகளில் கண்ணாத்தாவிற்கு கோபம் கூட இருந்தது.

இப்படியாக ஒரு நாள் கண்ணாத்தா பிள்ளைக்கு தலை வாரிக்கொண்டு இருந்தார். நீளமான கூந்தல் நிலத்தில் படாமல் இருக்க உயரமாக குத்தி ஒன்றில் வைத்து தலை வாரினார். அப்போது தலையில் ஏதோ ஒன்று இருந்து சீப்பில் தட்டு படுவதை கண்ணாத்தா உணர்ந்தார். விரலினால் தடவியபோது ஏதோ குச்சி ஒன்று தலையில் இருப்பது போல் தட்டுப்பட்டது. “சொன்னாலும் இந்தப் பிள்ளை கேட்பதில்லை. காடுமேடெல்லாம் திரிந்து இந்தா ஏதோ தலையில் சிராம்பு ஏறிவிட்டது” என முணுமுணுத்த வாறு மேலும் அந்த இடத்தை உற்று நோக்கினார். ஏதோ ஒன்று ஆழமாக குத்தி இருப்பது தெரிந்தது. பிள்ளையின் தலையில் ஏதோ சிராம்பு குத்தி இருப்பதாக எண்ணி அதனை பிடிங்கி அகற்ற முற்பட்டார். பிடுங்கினார் பிடிங்கி எடுத்தது ஒரு இரும்பு ஆணி. ஐயோ என்று நிமிர்ந்தார். என்ன மாயாஜாலம். முன் இருந்த குழந்தையை காணவில்லை. கண்ணாத்தா தலையில் கையை வைத்துக்கொண்டு ஓலமிட்ட படி எழுந்தார். எதிர்கொண்ட பேய் வெட்டி போடியாரிடம் நடந்தவற்றை கூறினார். போடியார் ஏன் அப்படி செய்தாய் என்று கண்ணாத்தாவைக் கடிந்தபடி, “காடேரியை அடக்கி அதன் தலையில் மந்திரத்தால் ஊன்றி ஆணியை அடித்தல்லவா அந்த குழந்தையை செய்தேன். என்ன வேலை செய்தாய்” என குழந்தையை உருவாக்கிய விவரத்தை கூறினார்.

கண்ணாத்தா கோபம் மிகுதியால் பேய் வெட்டிப் போடியாரைத் திட்டினார். “உங்கள் மந்திரவாதி புத்தியை காட்டி விட்டீர்கள் என அழுதார்”.

### கதை 3 : நெல்லுப்பாய் காவல் காத்த பேய்

பேய் வெட்டிப் போடியார் தூர இடம் ஒன்றில் இருந்து வேலையை முடித்துக் கொண்டு கல்முனை நோக்கி திரும்பி கொண்டிருந்தார். நேரம் நள்ளிரவு தாண்டிவிட்டது.

பூரணைக்கு அடுத்த நாள் என்பதால் நிலா பால் போல எறித்தது. பகல் வழி நடப்பது போது இருந்தது. அந்தக் காலங்களில் நள்ளிரவில் நடைவெளிப் பயணம் வருபவர்களுக்காக கிராமங்களிலும் நள்ளிரவு தேனீர் கடைகள் திறந்திருக்கும். இத்தகைய கடைகளில் ஒன்றுதான் ராமனின் தேனீர் கடை. கல்முனையில் இருந்து நற்பிட்டிமுனை நோக்கி வரும் வழியில் அம்பலத்தடி பிள்ளையார் சந்தியில் உள்ள வாகை மரத்தின் அருகில் அமைந்திருந்தது. பயணங்களின்போது பேய் வெட்டிப் போடியார், ராமனின் கடையில் சிறிது இருந்து தேநீர் அருந்திச் செல்வது வழமை. அந்தக் காலத்தில் அம்பலத்தடி பிள்ளையார் கோயிலடியில் இருந்து மக்கள் குடியிருக்கும் இடம் சற்று தொலைவாக அமைந்திருந்தது. அப்போது, இந்தக் கோயில் ஒரு வழிப்பிள்ளையார் போலவே சிறிய அளவில் அமைந்திருந்தது. ஊரைச் சென்றடைவதற்கு வயல் ஓரமாக இருக்கும் அணைக்கட்டின் ஊடாக நடக்க வேண்டும். மறுபுறம் நீர்ப்பாசனக் குளம் காணப்பட்டது. வீதியால் வருவதைவிட இந்த அணைக்கட்டு பாதை சுருக்கமானதாக அமைந்திருப்பதால் பொதுவாக இதைப் பயன்படுத்துவர்.

ராமன் கடையில் தேநீர் குடித்துவிட்டு பேய் வெட்டி போடியார் அணைக்கட்டின் ஊடாக நடக்க ஆரம்பித்தார். வயல் கட்டில் சிறிது தூரம் சென்றதும் பெரிய வம்மி மரம் ஒன்று வரும். நடை வசதிக்காக வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு பேய் வெட்டிப் போடியார் நடக்க ஆரம்பித்தார். வம்மி மரத்தின் முன்னாக விரிக்கப்பட்ட பாய் ஒன்றில் நெல் காய வைக்கப்பட்டு இருந்தது. காவலுக்கு இருந்த இரு பெண்களும் நிழலுக்காக மரத்தடியில் சாய்ந்தபடி நின்றுகொண்டிருந்தனர். பேய் வெட்டிப் போடியார் அவர்களை கடந்த படி அணைக்கட்டின் ஊடாக நடந்து செல்கிறார். அப்போதுதான் இது இரவு பொழுது என்பதும் நிலவில் யாரும் நெல் காய வைப்பார்களா என்பதும் அவருக்கு உணர்வாகியது. நிலவு வெளிச்சம் மிகப் பிரகாசமாக இருந்ததால் அந்த உணர்வு அவருக்கு உடனடியாக வரவில்லை. நள்ளிரவில் எப்படி நெல்லுப் பாய் என எண்ணியவராக உடனே திரும்பினார். நெல்லுப் பாயையோ கூட இருந்த பெண்களையோ அங்கு காணமுடியவில்லை. போடியாருக்கு ஏதோ விடயம் இருக்கு என்பது புரிந்தது. சிலமாதங்கள் ஊரில் இருக்காததால் என்ன நடந்திருக்கும் என்பது விளங்கவில்லை. அணைக்கட்டில் அதற்கு அடுத்ததாக ஆலமரம் ஒன்றும் விழுது பரப்பி காணப்பட்டது. மரணித்தவர்களின் உடலைத் தகனம் செய்த பின்னர் பெறப்படும் சுடலைச் சாம்பல் நதியில் கரைக்கப்படுவதற்கு முன்னர் அதற்கான காலம் வரும் வரை இந்த மரத்திலே குடுவை ஒன்றில் இட்டு தொங்க விடப்படுவதுண்டு. இதன் காரணமாக இந்த ஆல மரத்தடியில் பேய் பயமுறுத்துவதாக ஒரு கதை உண்டு. இதனால் இந்த ஆலமரம் பேய் ஆலை என மக்களால் அச்சத்துடன் பார்க்கப்படுகிறது. ஆல மரத்துக்கு முன்னிருந்த பனை மரத்திலிருந்து பனம்பழம் ஒன்று ‘சலார்’ என நிலத்தில் விழுந்தது. அது பேய் வெட்டிப் போடியாரைக் கடந்து உருண்டோடி ஆலமரத்தின் அடிப்பகுதியை அடைந்தது. ஆலமரத்தின் அடியைச் சென்றடைந்ததும் பனம் பழத்தைக் காணவில்லை. கறுப்பு நிறத்திலான பூனை ஒன்று மரத்தின் அடியிலிருந்து மேல் நோக்கி ஏறிச் சென்று கொண்டிருந்தது. கம்பளி போன்ற மழமழப்பான உரோமத்துடன் அது காணப்பட்டது. போடியாரை நோக்கி ‘மியாவ்’ என கத்தியது. தொடர்ந்து மேல் நோக்கி பூனை பாய்ந்து ஏறியது. போடியார் பூனையின் மீது காறி உமிழ்ந்தார். பின்னர் விசையாக நடக்க ஆரம்பித்தார். தன்னை பின்தொடர்ந்து வெள்ளை வேட்டியுடன் ஒரு உருவம் வருவது போல் உணர்ந்தார். ஆனால் திரும்பி பார்த்தால் அந்த உருவத்தை காணவில்லை. சுடலை வைரவரும் கம்பளி வைரவரும் ஒன்றாக நின்றிருப்

பதை அங்கு நிகழ்ந்த அசுமந்தங்களை வைத்துக் கொண்டு பேய் வெட்டிப் போடியார் உணர்ந்தார். விசையாக தங்கள் வீட்டை சென்றடைந்தார். தனக்கே தண்ணீர் தெளித்து மந்திர உச்சாடனம் செய்து குற்றம் நீக்கிக் கொண்டார். பின்னர் தண்ணீரை தலையில் வார்த்தவராக வீட்டினுள் நுழைந்தார். தனக்கு நடந்தவற்றை வீட்டில் கூறினார். அண்மையில் இறந்த ஒருவருடைய சுடலைச் சாம்பல் பேய் ஆலையில் குடுவையில் கட்டி வைக்கப் பட்டிருப்பதை மனைவி தெரிவித்தார். “அதுவும் ஆற்றில் தாண்டு அடாத்தாக நடந்த மரணம்” என தனது ஆதங்கத்தை தெரிவிக்க “அதற்கு ஒரு கம்பளி வைரவருவரும் சுடலை வைரவரும் காவலா? என பேய் வெட்டிப் போடியார் தனது கோபத்தை வெளிப்படுத்தி கொண்டார்.

பாட்டிமார் கதை கூறும்போது கதைகளின் உபகதைகள் ஆகவும் இடைச்செருகல்கள் ஆகவும் பல்வேறு விபரிப்புக்களையும் மேற்கொள்வர். எடுத்துக்காட்டாக கட்டுச்சோறு பற்றிக் கூறும்போது பாட்டிமார் தமது கட்டுச்சோறு அனுபவங்கள் பற்றியும் பொருத்தமான கறிவகைகள் குறித்தும் கதையை நீட்டி செல்வர். இது தொடர்பில் தாங்கள் சந்தித்த நகைச் சுவையான சந்தர்ப்பங்களையும் மீட்டு மகிழ்வர்.

இதனால் கதைக்கு ஒரு புதிய வீச்சு கிடைப்பதுடன் ஒவ்வொரு முறை கேட்கும்போதும் புதிய சுவையை ஏற்படுத்துகிறது.

### கதை4: களவெட்டிப் பூதம் நெல் களவெடுக்கும் ஐதீகம்

இந்தக் கதை பல்வேறு கிராமங்களில், பொதுவாக விவசாயச் சூழல்களுடன் கூடிய கிராமங்களில் வழங்கப்படுகின்றது. கூட்டு அருவிவெட்டி அறிமுகமாவதற்கு முன்னர் வேளாண்மை அறுவடை பல செயற்பாடுகளைக் கொண்டதாக காணப்பட்டது. வயல் வெட்டும் செயற்பாடு தாட்கத்தி மூலம் ஆட்களை அமர்த்தி மேற்கொள்ளப்படும். 5-10 பேர் கொண்ட தத்தி மூலம் வயல் பங்குகள் அளக்கப்பட்டு ஒவ்வொருவருக்கும் வழங்கப்படும். வெட்டும் அளவுக்கு ஏற்ப ஊதியம் கணிக்கப்படும். பின்னர் அறுக்கப்பட்ட கதிர்கள் சிறு சிறு கட்டுகளாக கட்டப்படும். கட்டுகள் ஒன்றாக்கப்பட்டு உப்பட்டி எனப்படும். உப்பட்டிகள் குவிக்கட்டும் போது சூடு எனப்படும். சூடு கிளரப்பட்டு மாட்டின் மூலம் அல்லது இயந்திரத்தின் மூலம் உளக்கப்பட்டு நெல் கதிரில் இருந்து வேறாக்கப்படும். இச்செயற்பாடு சூடு போடுதல் எனப்படும்.

அக்காலங்களில் களத்துமேடு அல்லது களவட்டி ஒரு திருவிழா நடைபெறும் இடம் போல காணப்படும். சூடு அடிக்கப்பட்ட பின்னர் பதர் நீக்குவதற்காக தூற்றப்படும். பின்னர் காயவிடப்பட்டு போதுமான அளவு காய்ந்ததும் நெல் சாக்குகளில் பொதிசெய்யப்படும். இதற்கு சுமார் 3-4 நாட்கள் வரைச்செல்லும். இதனைக் காவல் செய்வது சூட்டுக் காவல், பொலிக்காவல் என அழைக்கப்படும். இவ்வளவு நிகழ்வுகளையும் கூட்டு அரிவிவெட்டி காணாமல் செய்து விட்டது. எவ்வாறு காவல் காத்தாலும் வயலில் நெல் காணாமல் போவதுண்டு. இதனால் வயலில் காணாமல் போகும் நெல் எல்லாமே களவெட்டிப் பூதம் களவாடிச் செல்வதாக ஐதீகம் நிலவுகின்றது.

## கதை கூறும் கிராமிய விளையாட்டுக்கள்

விளையாட்டுகள் பொழுது போக்கை மட்டும் நோக்கமாகக் கொண்டவையாக அமைவதில்லை. உடற்பயிற்சி, ஓய்வு, மாற்றுச் செயற்பாடு, உளவிருத்தி, சமூக ஒருங்கிணைவு எனப் பல்வேறு நோக்கங்கள் அதில் உள்ளன. கிராமிய விளையாட்டுகள் பல அத்தகைய பண்புகளைக் கொண்டு காணப்படுகின்றன. கிழக்கின் பல்வேறு பகுதிகளிலும் வழங்கப்படுகின்ற கிராமிய விளையாட்டுக்கள் பற்றி பல கட்டுரைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளன. இவ் விளையாட்டுகள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக முழுமையாக விபரிப்பது சொன்னதைச் சொல்வது ஆகிவிடும். ஆதலால் அவற்றை விபரிக்காமல் சில கிராமிய விளையாட்டுகளின் ஊடாக அந்தந்தக் காலச் சூழல் பதிவாக்குகின்ற வரலாற்றுக் கூறுகளை நம்முன்னே கொண்டுவரக்கூடிய மூன்று சிறுவிளையாட்டுகளை விபரிக்கின்றேன்.

### 1. உப்புக்கு காய்ச்சுத்தல்

குழந்தைகளை முதுகிலே தாங்கிக் கொண்டு “உப்பிருக்கு உப்பு” என்று கூவ, “என்ன உப்பு” என்று ஒருவர் கேட்க, “சீனி உப்பு” என்று உப்பு மூடை தூக்குபவர் பதிலளிப்பார். “போட்டுட்டு போங்க “ என்று மற்றவர் தொடர்வார். நாய் “வௌ பௌ” எனக் குரைப்பதாக ஒருவர் பாவனை செய்ய “நாயைப் பிடிங்க, நாயைப் பிடிங்க” என ஓடுவது முதுகிலே உள்ள குழந்தைக்கு மகிழ்ச்சியூட்டும் நிகழ்வாயிருக்கும். இந்த விளையாட்டு உப்பு குறித்து ஆங்கிலேயர் ஆட்சிக் கால தடைகளின் பிரதிபலிப்பாகப் பார்க்கக் கூடியது.

பண்டைக் காலத்தியிருந்து உப்பு மிகமுக்கியமிக்க ஒரு பொருளாக இருந்து வருகிறது. ரோமானியப் படை வீரர்களுக்கு சம்பளமாக உப்பு வழங்கப்பட்ட குறிப்புகளை வரலாறுகளில் காண முடியும். பண்டமாற்றுப் பொருளாகவும் நாணயத்திற்குப் பதிலாகவும் உப்பே அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது.

இலங்கையில் முக்கியமிக்க உற்பத்திப் பொருளாக உப்பு பன்னெடுங்காலமாக இருந்து வருகிறது. ஆயினும் இதனை ஆங்கிலேயர்கள் தம் ஆட்சிக் காலத்தில் முறைமைப் படுத்தினர். பிரித்தானிய இலங்கையில் உப்புக்கான ஏகபோக உரிமை அரசிடமே இருந்தது. ஏறக்குறைய 10 சதவீதமான அரச வருமானத்தை உப்பு விற்பனை மற்றும் உப்பு ஏற்றுமதி மூலம் பிரித்தானிய ஆட்சியாளர்கள் பெற்றுக் கொண்டனர்.

இதனால் ஆங்கிலேய அரசு தனியார் உப்பு தயாரிப்பில் ஈடுபடுவதை சட்டத்தில் மூலம் தடுத்தனர். தனியார் உப்புக் காய்ச்சுவதை தடுப்பதற்கு நடைமுறையில் இருந்த சட்டத்தை அமுல்படுத்த அக்கால கிராம மட்ட அதிகாரிகளான விதானைமார் செயற்பட்டனர். விதானைமார்களின் செயற்பாடுகள் பற்றி அக்காலத்தில் வழக்கிலிருந்த சொலவடை ஒன்றில் ‘உப்புக் காய்ச்ச விடுவதுமில்லை, பிச்சைக் காசைத் தருவதுமில்லை’ என வழங்கப் பட்டது. மகாத்மா காந்தி இத்தகைய உப்பு தயாரிப்பு தடைச்சட்டத்திற்கு எதிராக 1930களில் உப்புச் சத்தியாகிரக போராட்டம் நடத்தினார்.

ஆயினும் மட்டக்களப்பில் வாவிக் கரைகளில் உவர்நீர் ஏறிய பின் வற்றிய பிரதேசங் களில் உள்ள மண்ணை, பனையோலையால் செய்யப்பட்ட கடகம் அல்லது கைப்பெட்டிகளில் ஏற்றிக் கொணர்ந்து இரகசியமாக உப்புக் காய்ச்சினர். இது சீனி உப்பு அல்லது காய்ச்சிப்பு

எனப்பட்டது. உப்பு மண்ணை, மண்சட்டியில் இட்டு நீரூற்றி உப்பு நீரை வேறாக்கிய பின் அதனைக் காய்ச்சுவதன் மூலம் காய்ச்சுப்பு தயாரிக்கப்படும். இவ்வாறு காய்ச்சப்படும் உப்பை விற்பனை செய்வர் அல்லது தம் உறவுகளுக்கிடையில் பகிர்ந்து மகிழ்வர். சாதாரண உப்பை விடச் சுவை மிகுந்ததாக காய்ச்சுப்பு மக்களிடையே பிரபலம் பெற்றிருந்தது. இது தான் உப்பு மூடை சுமக்கும் விளையாட்டாக வந்தது.

## 2. புங்கடி புளியடி எவடம் எவடம்

அடுத்து 'புங்கடி புளியடி எவடம் எவடம்' விளையாட்டு. இதை சில வேளைகளில் "கண்ணாம் பூச்சி கடற்கரைப் பூச்சி எவடம் எவடம்" எனவும் கூறிக்கொண்டு ஆடப்படுவதுண்டு. இதில் ஒரு சிறுவரின் கையில் மண்ணை அள்ளி வைத்து அதனுள் ஓர் அடையாளப் பொருளை வைப்பர் (பூ, இலை, குச்சி எதுவாகவும் இருக்கலாம்). அடையாளத்தை வைத்திருக்கும் அந்த சிறுவரின் கண்களை இன்னொருவர் பின்னால் வந்து பொத்திக் கொண்டு அவரை முன்னும் பின்னும் சுற்றி வளைத்தும் நடத்திக்கொண்டு செல்வார். செல்லும் போது 'எவடம் எவடம்' என்று கண்கள் பொத்தப்பட்ட சிறுவரைக் கேட்க அவருக்கு பின்னால் போகும் ஏனைய சிறுவர்கள் 'புளியடி புளியடி' என்று கூறிக் கொண்டு செல்வர். ஓரிடத்தில் வைத்துவிட்டு பின்னர் அந்த இடத்தை அவரே கண்டு பிடிக்க வேண்டும்.

ஆங்கிலேயர் ஆட்சியில் கிணறு, குழிப் பரிசோதகர் என்ற பதவி நியமனம் காணப் பட்டமையை அறியலாம். வீடுகளில் குழி, கிணறு தோண்டப்படும் போது அது குறித்து இந்த அதிகாரிக்கு அறிவிக்க வேண்டும். அவரின் முன்னிலையிலேயே குழி தோண்டப்படும். புதையல் மற்றும் முதுச சொத்துக்களை அரசுக்குக்குத் தெரியாமல் பயன்படுத்த முடியாமை குறித்ததே இந்த நடவடிக்கை. இந்த விளையாட்டு புதையல் குறித்த தேடலை அடிப்படையாகக் கொண்டது.

## 3. தக்காளி தக்காளி குண்டு தக்காளி பம்பர் ஏறி குண்டு போடா எங்கு சென்றாய் நீ

"தக்காளி, தக்காளி, குண்டு தக்காளி, பம்பர் ஏறி குண்டு போடா எங்கு சென்றாய் நீ" எனும் விளையாட்டு பாடசாலை மாணவர்களிடையேயே காணப்பட்ட ஒரு விளையாட்டு ஆகும். ஆட்களின் தலைகளை எண்ணியவாறு மேற்படிவினாத் தொடரை கேட்பர். அதற்கு முடிக்கும் தலைக்குரியவர் ஒரு ஊரின் பெயரைப் பதிலளிப்பார். அதிலுள்ள இவ்வொரு எழுத்துக்கும் தலைகள் எண்ணப்படும். எவரை என்னும்போது முடிகிறதோ அவர் வெற்றியுடன் கழிய எஞ்சியவர்கள் இவ்வாறே எண்ணப்படுவார்கள். இறுதியில் எஞ்சுபவர் தோற்றவராவார்.

போர்க்கால அனுபவத்தின் குறியீடாக இவ்விளையாட்டில் வரும் "பம்பர் ஏறி குண்டு போட எங்கு சென்றாய் நீ" என்ற சொற்தொடரை அடையாளப்படுத்தலாம். கடந்து வந்த போர்க் காலத்தை பிரதிமைசெய்யும் இந்த சிறு விளையாட்டு மனப்பதிவின் ஒரு வெளிப்பாடாகும்.



நண்பர் சஞ்சீவி சிவகுமாரின் நுட்பமான ஆய்வறிவும், தான் சார்ந்த சமூகம் பற்றிய ஆழ்ந்த அவதானிப்புமே இந்நூலை சாத்தியப்படுத்தியிருக்கிறது. கிராமமொன்றின் வளமான கலாசார பாரம்பரியத்தை எடுத்தியம்பும் ஆவணமாக மட்டுமல்லாமல், அதன் கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் உற்று நோக்கத்தக்க அரிய சாஎரத்தையும் இந்த நூல் எமக்கு வழங்கியுள்ளது.

மாமூலான வறண்ட அல்லது ஊர்ப்பெருமிதம் மேலோங்கும் ஆய்வுக் கட்டுரைகளி லிருந்து இக் கட்டுரைகள் மேம்பட்டவை என்பதை இந் நூலின் முதல் பக்கத்திலிருந்தே உணரத் தொடங்க முடியும். நற்பிட்டிமுனை பற்றிய தெளிவான சித்திரமொன்றை வடிவமைத்த வகையில் இந் நூல் இக்கிராமத்து மக்களுக்கு நூலாசிரியரின் இதயபூர்வமான ஒரு சமர்ப்பணமெனக் கொள்ள முடியும். வருங்காலத்தில் இத்தகைய முயற்சிகளை மென்மேலும் முன்னெடுக்கவும் விரிவு படுத்தவும் இத்தகைய நூலொன்று திறவுகோலாக அமைகிறது.

நூலாசிரியர் ஒரு புனைகதையாளரும் கூட. இப்பண்பு, கடந்த பல ஆண்டுகளுக்கு முற்பட்ட மாந்தர்களையும், நிகழ்வுகளையும் உயிரோட்டமான மொழியில் வாசகர்க ளுக்குக் கடத்த உதவுகின்றது. வரலாற்று நூல்கள் வெறும் தரவுகளையும், புள்ளி விபரங் களையும் மாத்திரம் கொண்டிருந்தால் வாசகனுக்கு அதுவோர் வறண்ட நிலப் பயண அனுபவத்தைத் தந்து விடும். ஆனால் சஞ்சீவி சிவகுமாரின் ஈரலிப்பான மொழிநடை அந்தக் குறையைத் தவிர்க்கின்றது.

இப் புத்தகத்தைப் பற்றிய என் அழுத்தமான மனப்பதிவு அதில் தென்படுகின்ற மனித நேய அணுகுமுறைதான். மனித புராணத்தை விட மேம்பட்ட புராணம் வேறேதுமுண்டோ? புள்ளிவிபரங்கள், திகதிகள் என்பவற்றுக்கு முன்னுரிமை அளிக்காமல், ஊர்ப் பெருமிதங்களில் மாத்திரம் மூழ்காமல் அந் நிலத்தில் வாழ்ந்த மக்கள் மீது நூலாசிரியர் கவனம் செலுத்துகிறார். அவர்களின் வாழ்க்கை குறித்த தத்தளிப்புகள், போராட்டங்கள், வெற்றிகள், வழக்காறுகள், பழக்கவழக்கங்கள், மரபுகள் என்பவற்றை ஆழமாக, ஆய்வு ரீதியாக வெளிப்படுத்துகின்றார்.

உணர்திறனுடன், சமூகம் எதிர்கொள்ளும் சவால்களைப் புரிந்து கொண்டும், தலை முறை தலைமுறையாக நற்பிட்டிமுனை மக்கள் தங்களைப் புதுப்பித்து, மீளமைத்து, தகவமைத்துக் கொண்ட குணாதிசயங்கள் பற்றியும் நூலாசிரியர் முன்னிலைப்படுத்து கிறார். அவரது இந்தப் பணி அறிஞர்கள் மற்றும் வரலாற்றாசிரியர்களுக்கு மட்டுமல்ல, கிராமப்புற சமூகங்களின் பரிணாம வளர்ச்சியிலும், ஒரு சிறிய, நெருக்கமான சமூகத்தில் மனித வாழ்க்கையின் சிக்கல்களிலும் ஆர்வமுள்ள எவருக்கும் அறிவுப் பொக்கிஷமாகும்.

**–உமா வரதராஜன்**


ISBN: 978-624-6177-29-4
9 786246 177294
Rs. 1000.00